# அன்னை பராசக்தி

## (GOD AS MOTHER)



(சக்தி வழிபாட்டின் பல்வேறு அம்சங்கள், அந்தரார்த்தம், முக்கியத்துவம் ஆகிய வற்றைப்பற்றிய மிகத்தெளிவான, திவ்வியமானதொரு விளக்கம்.)

ஸ்ரீ சுவாமி சிதானந்தா






இது [illegible] தெய்விக வாழ்க்கைச் சங்க வெளியீடு

# அன்னை பராசக்தி
# (GOD AS MOTHER)



ஸ்ரீ சுவாமி சிதானந்தா
தலைவர்,
தெய்வீக வாழ்க்கைச் சங்கம், ரிஷிகேஷ்.

தமிழாக்கம்
ஸ்ரீ சுவாமி தேஜோமயானந்தா

Published by
THE YOGA-VEDANTA FOREST ACADEMY
(THE DIVINE LIFE SOCIETY)
Sivananda Nagar (P. O.)
RISHIKESH, HIMALAYAS

Through

தெய்வீக வாழ்க்கைச் சங்கம்
சிவானந்தா யோகாசன சாலை
இராசிபுரம் (P. O.) சேலம் (Dt.)
1967

(சக்தி வழிபாட்டின் பல்வேறு அம்சங்கள், அந்தரார்த்தம், முக்கியத்துவம் ஆகிய வற்றைப்பற்றிய மிகத்தெளிவான, திவ்வியமானதொரு விளக்கம்.)



## வெளியிடுவோரின் குறிப்புரை.

அன்னை பராசக்தியின் கருணையினுல் ஸ்ரீலஸ்ரீ **சுவாமி சிதானந்தஜீ மஹராஜ்** அவர்கள் 1953-ல் நவ ராத்திரி விழாவின்போது **சத்குருதேவ் ஸ்ரீலஸ்ரீ சுவாமி சிவானந்தஜீ மஹராஜ்** அவர்களுடைய சந்நிதானத் தில், அவர்களுடைய சொந்த ஆசிகளினுல் சக்தி தத்துவம், வழிபாடு ஆகியவற்றின் முக்கியத்துவத் தைப் பற்றி பொறுக்கி எடுக்கப்பட்ட சில உபந்நியா சங்களைச் செய்தருளினுர்கள். இந்த அமிர்தத்தை ஆசிரமவாசிகள் மட்டும் பருகினுல்போதாது என்று உணரப்பட்ட காரணத்தால், இது யோக வேதாந்த ஆரண்ய விஸ்வ வித்யாலய வாராந்திர சஞ்சிகை (Yoga-Vedanta Forest University Weekly) யில் பிர சுரிக்கப் பெற்றது. மீண்டும் இதுவே "God As Mother" என்ற பெயரில் புத்தக வடிவில் வெளி வந்தது. இது மூன்று பதிப்புகளாகிவிட்டது. தென் ஆப்ரிக்காவில் உள்ள தெய்வீக வாழ்க்கைச் சங்கக் கிளையும் இதை "SAKTI WORSHIP" என்று வெளியிட்டிருக்கிறது. அன்னையின் அடியார்களும், குருதேவரின் பக்தர்களும் அவற்றை ஹிந்தியிலும், வங்காளியிலும் வெளிக்கொணர்ந்திருக்கின்ருர்கள்.

தமிழ் தெரிந்த பக்தர்கள் பயனடைய வேண்டி இதைத் தமிழில் வெளிப்படுத்த வேண்டும்

என்கின்ற உண்மையான வேட்கையைக் கண்டு மனம் நெகிழ்ந்த ஸ்ரீ சுவாமி நிர்மலானந்தஜீ அவர்கள் அரும்பாடுபட்டு இராசிபுரம் கிளையைச் சார்ந்த குரு பக்தி ரத்ன ஸ்ரீ S. விஸ்வநாதன் (தற்பொழுது சுவாமி தேஜோமயானந்தா) அவர்களைக் கொண்டு மொழி பெயர்க்கச் செய்து 1965-ல் பெங்களூரைச் சார்ந்த பெரும் பக்தரான **ஸ்ரீமான் A. C. K. ராமசாமி செட்டியார்** அவர்களின் பொருளுதவியினால் வெளி யிடச் செய்வதில் வெற்றி கண்டார். இப்பொழுது மதுரையைச் சார்ந்த மற்றொரு பெரும் பக்தரான **ஸ்ரீமான் V. A. அண்ணாமலை** அவர்களுடைய பொரு ளுதவியின் மூலம் இது இரண்டாது பதிப்பாக வெளி யிடப் பெற்றிருக்கிறது. அன்னை பராசக்தியின் நல்லாசிகள் மேற்கூறப் பெற்ற பக்தர்களுக்கும், இந்த மொழி பெயர்ப்பிற்கும், வெளியீட்டிற்கும் அயராது சேவை புரிந்து வருபவருமான இராசிபுரம் **ஸ்ரீ S. சந்திரசேகரன்** அவர்களுக்கும் கிட்டுவதாக! ஸ்ரீ மாதாவினுடைய கருணை அவர்கள் மீதும், அச்ச டித்துக் கொடுப்பவர்கள் மீதும், வாசகர்களின் மீதும் நிறைவதாக!



சிவானந்தநகர்.
டிசம்பர் 15

**சுவாமி கிருஷ்ணனந்தா.**
*வெளியிடுவோர்.*



## ஒரு சிறு செய்தி.

குழந்தையானது அதனுடைய தந்தையைக் காட்டிலும் தாயினிடத்தில்தான் அதிக அறிமுகமானதாகவும், தாராளமாகவும், சந்தோஷமாகவும் இருக்கிறது. உண்மையில், தாயார்தான் அதைத் தந்தைக்கு அறிமுகப்படுத்திவிடவேண்டும். இதே தத்துவந்தான் நமது பண்டைய ஞானிகளால் ஆன்மீகத்துறையிலும் பிரயோகப்படுத்தப்பட்டிருக்கிறது. காணப்படுகின்ற இந்தத் தோற்றங்கள் அனைத்திற்கும் ஆதாரமாக இருக்கின்ற அதே பரம சத் வஸ்துதான் விஸ்வமாதாவாகத் தோன்றுகிறது. பக்தர்களுக்கு அவளை அணுகுவது சுலபமாகத் தோன்றுகிறது. அவளுடைய கருணையானது அவர்களை லக்ஷியத்திற்கு அழைத்துச் சென்றுவிடும். அவள் புக்தி (போகங்கள்), முக்தி (மோக்ஷம்) ஆகிய இரண்டையும் கொடுத்தருளுகின்றாள்.

குழந்தைகள் பராசக்தியாகிய தாயினிடத்தில் அழும்பொழுது அவள் உடனே அவர்களுக்கு ஆறுதலளித்து இகலோக வாழ்வில் சந்தோஷம் என்னும் பாலை ஊட்டி, பேரானந்தத்தை நல்கும் ஞானத்தையும் தந்தருளுகின்றாள். நம்பிக்கையும் பக்தியும், ஆர்வமும் நேர்மையும், பாவனையும் உணர்வும் அற்புதங்கள் புரிகின்றன. அன்பினால் அன்னை சுலபமாக இளகிவிடுகிறாள். அவள் தனது தீய குழந்தை

களுக்கும் ஆறுதல் அளிக்கிருள். "கு புத்ரோ ஜாயேத கு மாதா ந பவதி க்வசிதபி" — "கெட்ட புத்திரன் இருக்கலாமே தவிர ஒருக்காலும் கெட்ட தாய் இருக்க முடியாது" என்று ஸ்ரீ சங்கர பகவத் பாதர் கூறுகின்ருர்.

ஸ்ரீமாதாவினுடைய மஹிமை, பெருமை, வழி பாடு ஆகியவற்றைப்பற்றிக் கூறும் "God as mother" என்ற புத்தகத்தின் தமிழாக்கம் இரண்டா வது பதிப்பாக வெளிவந்திருப்பதைக் கண்டு நான் மகிழ்ச்சியடைகின்றேன். இந்த தெய்வத் திருப் பணிக்குக் கருவியாக இருந்த எல்லோருக்கும், இதை வாசித்து இந்த உபதேசங்களைப் பின்பற்ற மனமாற முயற்சிப்போருக்கும் அன்னையினுடைய எல்லையற்ற கருணை நிறைவதாக!

குருசேவையில்.

சிவானந்த நகர், 1966 டிஸம்பர் 18

**சுவாமி சிதானந்தா**

**தெய்வீக வாழ்க்கைச் சங்கத் தலைவர்.**



# சக்தி வணக்கம்

## குருதேவ் சிவானந்தா

"எல்லா ஜீவராசிகளிலும் அறிவு, தயை, அழகு ஆகிய ரூபத்தில் மிளிர்கின்ற தெய்வத்தாய்க்கு வணக்கங்கள். அவளுக்கு வந்தனங்கள். வந்தனங்கள். வந்தனங்கள். வந்தனங்கள்.

நேசமுள்ள ஓ மாதாவே! நீ ஆதார சக்தியாக இருக்கின்ருய். உன்னிடம் இரண்டு அம்சங்கள் இருக்கின்றன. அதாவது ஒன்று பயங்கரம். மற்ெறன்று அமைதி. நீ எளிமை, மிருகத்தன்மை, கூச்சம், பெருந்தன்மை, தைரியம், சகிப்புத் தன்மை, பொறுமை ஆகியவைகளாய் விளங்குகின்ருய். பக்தர்களின் உள்ளத்தில் நம்பிக்கையாகவும், பெரியோரிடத்தில் பெருந்தன்மையாகவும், வீரர்களிடத்தில் வீரமாகவும், புலிகளிடத்தில் பயங்கரத்தன்மையாகவும் இருக்கிருய். இந்திரியங்களையும், மனதையும் அடக்குவதற்கு எனக்கு பலத்தைக் கொடுத்தருள். உன்னில் நான் வசிக்கத் தகுதியுடையவனுக்கு. உனக்கு எனது வணக்கங்கள்.

பூஜிக்கத்தக்க ஓ மா தா வே! நீ இந்த மாயையை உற்பத்தி செய்திருக்கிருய். அதன் காரணமாக மக்கள் இந்த உலகில் மயங்கிய நிலையில் நடக்கின்றனர். எல்லா விஞ்ஞானங்களும் உன்னிடமிருந்து வந்திருக்கின்றன. உன்னுடைய கருணையின்றேல் ஆன்மீக சாதனையில் யாரும் வெற்றி

பெற முடியாது. முடிவில் விடுதலையையும் பெற முடியாது. இவ்வுலகிற்கு நீ வித்தாக இருக்கிறாய். உன்னிடம் இரண்டு அம்சங்கள் இருக்கின்றன. அதாவது புலப்படாத அம்சம் அல்லது அவ்யக்தம் ஒன்று. மற்றொன்று புலப்படும் அம்சம் அல்லது இந்த ஸ்தூலப் பிரபஞ்சம். பிரளய காலத்தில் அகில உலகமும் அவ்யக்தத்தில் கரைந்து விடுகின்றது. எனக்கு அந்த தெய்வீக திருஷ்டியைக் கொடு. நான் உன்னுடைய உண்மையான கம்பீரத் தோற்றத் தைப் பார்க்கக்கடவேனாக. இந்த மாயையைக் கடக்க எனக்கு உதவி செய்.

ஓ இனிய மாதாவே, வணக்கங்கள். சிவ பிரானின் தேவியே! பார்வதித்தாயே! நீ லக்ஷ்மி, நீ சரஸ்வதி, நீ காளி, துர்க்கை, குண்டலினி. நீ எல்லா சக்திகளின் அம்சம். நீ பராசக்தி. நீ எல்லாப் பொருள் வடிவமாகவும் இருக்கின்றாய். நீ எல்லாருக்குமான ஒரே அடைக்கலம். நீ அகில உலகையும் மயக்கிவிட்டாய். பிரபஞ்சம் முழுவதும் உன்னுடைய முக்குண லீலையே. நான் உன்னை எவ் வாறு புகழ்வேன். உன் பெருமையை வர்ணிக்க முடியாது. உனது மகிமையை வார்த்தையால் விளக்கவொண்ணாது. என்னைக் காப்பாற்று. எனக்கு வழிகாட்டு.

இரக்கமுள்ள தாயே! நான் உன்னை வணங்கு கின்றேன். நீ என்னைக் காப்பவள். நீயே எனது லக்ஷியம். நீயே எனது ஒரே ஆதரவு. நீயே எனது வழிகாட்டி. சகல இன்னல்களையும், இடர்களையும், துன்பங்களையும் துடைப்பவள். நீ மங்களகரமே உருவானவள். நீ பிரபஞ்சம் முழுவதிலும் ஊடுருவி

யிருக்கின்ருய். பிரபஞ்சம் முழுவதும் உன்ஞல் நிரப்பப்பட்டுள்ளது. நீ சகல நற்குணத்தின் களஞ்சியம். என்னேக் காப்பாற்று. நான் உன்னேத் திரும்பத் திரும்ப வணங்குகின்கிறேன்.

ஓ மேலான தாயே! எனக்கு எப்பொழுது சம நோக்கும், ஒரு நிலேப்பட்ட மனமும் கிட்டும்? எப்பொழுது நான் அஹிம்சை, சத்யம், பிரம்மச்சரியத்தில் நிலேத்திருப்பேன்? உன்னுடைய திவ்ய காட்சி எனக்கு எப்பொழுது கிட்டும்? நான் எப்பொழுது ஆழ்ந்த தியானத்திலும், சமாதியிலும் புகுவேன்? எனக்கு எப்பொழுது ஆழ்ந்த நிலேயான சாந்தியும், சாஸ்வதமான ஆனந்தமும் கிடைக்கும்?

பிரகாசமே உருவான ஓ மாதாவே! நான் எந்த விதமான ஆத்மீக சாதனேகளோ, அல்லது குரு சேவையோ செய்தது இல்லே. நான் எந்தவிதமான விரதமும் அனுஷ்டிக்கவில்லே. யாத்திரையோ, தானதர்மமோ, ஜபமோ, தியானமோ, வழிபாடோ செய்தறியேன். நான் மத நூல்களேப் படித்தறியேன். என்னிடம் விவேகமோ அல்லது வைராக்கியமோ கிடையாது. என்னிடம் தூய்மையோ, விடுதலே வேட்கையோ இல்லே. நீதான் எனது ஒரே அடைக்கலம். உனக்கு என்னுடைய மௌன வந்தனங்கள் உரித்தாகுக. நான் உன்னுடைய தாசானுதாசன். அஞ்ஞானத் திரையை நீக்கியருள்வாய்.

கருணே பொருந்திய தாயே! உனக்கு என்னுடைய சாஷ்டாங்க நமஸ்காரங்கள். நீ எங்கிருக்கிருய்? என்னே கைவிட்டுவிடாதே. நான் உன்னுடைய குழந்தை. என்னே பயமற்ற தன்மை, ஆனந்

தம் என்கின்ற அக்கரைக்கு அழைத்துச் செல்வாய். நான் உன்னுடைய பாத கமலங்களை என்னுடைய சொந்தக் கண்களால் எப்பொழுது காண்பேன்? நீ எல்லையற்ற கருணைக் கடல். தத்துவ ஞானியினுடைய கல்லானது இரும்பைத் தங்கமாக மாற்றும் பொழுது, அசுத்த ஜலத்தை கங்கை சுத்த ஜலமாக மாற்றும் பொழுது, ஓ தெய்வத் தாயே நீ என்னை ஒரு தூய ஆத்மாவாக மாற்ற முடியாதா? எனது நா எப்பொழுதும் உனது திருநாமங்களை ஜெபித்துக் கொண்டிருக்கட்டும்.

உங்களால் ஒரு பெரிய பாராங்கல்லைப் புரட்ட முடியாவிட்டாலோ அல்லது ஒரு மூட்டை அரிசியை தூக்க முடியாவிட்டாலோ உங்களுடைய நண்பர்கள் உங்களிடம் சக்தி இல்லை என்று சொல்லுகிறார்கள். அவர்கள் ஒருபொழுதும் உங்களிடம் விஷ்ணுவோ அல்லது சிவனோ இல்லையென்று சொல்வது கிடையாது. இதிலிருந்து சக்திதான் முழுமுதல் தேவதை என்பதும், பிரம்மா, விஷ்ணு, சிவன் ஆகியோர் அவளுடைய ஆணையை நிறைவேற்றி வைப்பவர்கள் என்பதும் தெளிவு. ஸ்ரீ சங்கராச்சாரியாரால் எழுதப் பட்ட ஆனந்த லஹரியில் கீழ்க்காணும் வாக்கியத்தைக் காணலாம்: —

“சிவன் சக்தியோடு இணைந்து இருக்கும் பொழுதுதான் அவனால் சிருஷ்டி செய்யமுடியும். அவளின்றி ஒரு சிறு அசைவையும் அவனால் செய்ய இயலாது.” அத் தாயை வழிபட்டு அவள் கருணையைப் பெறுங்கள். அவள் உங்களுக்கு மோக்ஷமாகிய விடுதலையைக் கொடுப்பாள்.

# பொருளடக்கம்

## நான்காவது இரவு

### லக்ஷ்மி – பரம ரகசி



## ஐந்தாவது இரவு

### ஐசுவரிய மார்க்கம்



## ஆறாவது இரவு

### இல்லத்திலும் உள்ளத்திலும் மங்கள தேவதை



## ஏழாவது இரவு

### சிருஷ்டி: அன்னையின் வீணை கானம்

## எட்டாவது இரவு

### வெற்றி தேவதை



## ஒன்பதாவது இரவு

### முக்திக்கு வழி



## விஜயதசமி

### மஹா லக்ஷியமும் அதை அடைதலும்



# அன்னை பராசக்தி

## பராசக்தி வணக்கம்

எனது போராட்டமெல்லாம் (உனது மந்திர) ஜபமே; (என்னுடைய) செயல்களனைத்தும் (உனது வழிபாட்டுக்குரிய) புனித சைகைகளே, (எனது) நடமாட்டமெல்லாம் (உனக்குச் செய்யும்) பிரதக்ஷிணமே. சாப்பிடுதல் முதலியன எல்லாம் (உனக்குப்) படைக்கும் நைவேத்தியமே. உறக்கம் சாஷ்டங்க நமஸ்காரம்; (எனது) சந்தோஷம் ஆத்ம சரணாகதி; (சுருங்கச் சொன்னால்) என்னுடைய கிரியைகள் அனைத்தும் (உனக்குச் செய்யும்) தொடர்ச்சியான வழிபாடாக ஏற்றுக்கொள்ளப்படுவதாக!

# முதல் இரவு

## புலன் கடந்த சத்வஸ்துவின் சக்தி

சகல சிருஷ்டிக்கும் ஆதாரமாக, அடிப்படையாக, லக்ஷியமாக விளங்குகின்ற அந்த தேவி ஜகன்மாதாவுக்கு மீண்டும் மீண்டும் சாஷ்டாங்க நமஸ்காரங்கள்.

அன்னை பரம்பொருளின் ஒரு ரகசியமான வர்ணிக்கவொண்ணுத சக்தி. எல்லையற்றதாகவும், நிலையானதாகவும், வர்ணிக்க முடியாத சாந்தி சொரூபமாக இருப்பதும், புலன்களையும், மனத்தையும் கடந்ததாக இருப்பதும் ஆகிய அப் பரம்பொருளின் சக்தி அம்சமாக அவள் விளங்குகின்ருள்.

அப் பரம்பொருளை மேலான அன்னையின் வடிவில் வழிபாடு செய்கின்ற நவராத்திரியில் இன்று துவக்கத்தைக் குறிக்கின்ற முதல் நாள் ஆகும். இது பெரும்பாலும் தசரா எனப்படும் விஜய தசமி அன்று முடிவு பெறும். இப் புனித நன்ளுளில் நாம் எல்லோரும் இங்கு ஒன்று கூடி அன்னை பராசக்தியின் மகிமையைப்பற்றிப் பேசக்கூடிய வாய்ப்பு ஏற்பட்டிருப்பது அம்பிகையின் தெய்வீகக் கருணையையும், ஆசீர்வாதத்தையும் குறிக்கிறது. அம்பிகையைப் பற்றி ஒரு சில வார்த்தைகள் பேசவும், அவளை வணங்கி வழிபடவும், அவளுடைய கருணையை வேண்டி நிற்கவும் இந்த வாய்ப்பு ஏற்பட்டிருப்பதும் அவளுடைய கருணையையே காட்டுகிறது. அவளு

டைய கருணை ஒன்றினுல்தான், லௌகீகத் துறை யிலாகட்டும், ஆன்மீகத் துறையிலாகட்டும், இகத் திற்காகட்டும், பரத்திற்காகட்டும் நமக்கு வெற்றி உண்டாக்கித் தர முடியும். அந்தக் கருணையின் மூலமாகத்தான் ஆன்மீக நாட்டமுடையவன் தான் தேடுகின்ற வஸ்துவையும், சாதகன் தனக்கு வேண் டிய அந்த லட்சியத்தையும் அடைய முடியும். அதன் மூலமாகத்தான் இந்த ஜீவாத்மா பூர்ண நிலையை அடைந்து பரமாத்மாவை உணர முடியும். மோக்ஷ சித்தி பெறுவதற்கு அன்னை பராசக்தியின் கருணை அத்தியாவசியமானது. இப்புனித சந்தர்ப்பத்தில் அம்பிகையைப்பற்றி இந்துக்கள் கொண்டிருக்கும் கருத்துக்களைப்பற்றியும், இந்த நவராத்திரி விழா வின் முக்கியத்துவத்தையும், இதனுடைய பாரம் பரியமான பின்னணியைப் பற்றியும் ஒரு சில விஷ யங்களை நாம் அறிந்துகொள்ள முயற்சிப்போமாக!

இந்தியாவில் இந்துக்கள் நான்கு அல்லது ஐந்து பெரும் பிரிவுகளுக்குள் அடங்கியிருக்கின்ற னர். சிலர் பரம்பொருளை சிவன் அம்சத்தில் வழி படுபவர்கள்; இவர்களை நாம் சைவர்கள் என அழைக் கிறேம். அதே பரம்பொருளை சிலர் விஷ்ணுவின் அம்சத்தில் வழிபடுபவர்கள். இவர்களை நாம் வைணவர்கள் என்று அழைக்கிறேம். மூன்ருவதாக ஒரே கடவுளாகிய அப்பரவஸ்துவை அம்பிகை வடி வில் தோற்றமளிக்கும் தேவி சக்தியாகப் பெரும்பா லோர் வழிபடுகின்றனர். இவர்கள் சாக்தர்கள் எனப்படுகின்றனர். அதிகமாகப் பிரபலமில்லாத பின்னும் இரண்டு பிரிவுகளில் ஒரு சாரார் பகவானை

கணபதியாக வழிபடும் காணுபத்தியர்கள் என்றும், மற்றொரு சாரார் நமக்கு ஒளியைக் கொடுத்து பூலோக வாழ்க்கைக்கே ஆதாரமாக விளங்கும் ஒளி மயமாகக் காட்சி தரும் சூரியனை வழிபடும் சௌர்யர் கள் என்றும் வழங்கப்படுகின்றனர்.

தேவியின் நவராத்திரி வழிபாடு பிரபலமான ஒரு சாக்த வழிபாடேயாகும். இது நமக்கு சாக்த சம்பிரதாயப்படியே வந்திருக்கிறது. இந்த சாக்தர் களில் மிகப் பெரும் பகுதியினர் வங்காளம், அஸ்ஸாம் ஆகிய ராஜ்யங்களில் அதிகமாக வசித்து வருகின்றனர். அவர்களுடைய பரம சாஸ்திரமாக விளங்குவது அன்னை பராசக்தியைப் போற்றி செய்யும் "துர்க்கா சப்தசதி" அல்லது "தேவி மஹாத் மியம்" ஆகும். அது 700 சுலோகங்களால் ஆனதால் அதற்கு சப்தசதி என்று பெயர். வங்காளத்தில் அது "சண்டி" என்று பிரபலமாக வழங்கப்படுகிறது. கார்வால் பகுதியாகிய இங்கும் தேவி மஹாத்மியப் பாராயணத்தை "சண்டி-பாட்" என்று ஜனங்கள் கூறுகின்றார்கள். இது அம்பிகையின் நாமங்களில் ஒன்றான "சண்டிகா" என்னும் பதத்திலிருந்து உண்டாகியிருக்கிறது.

சாஸ்திர பாராயணம் மிகுந்த விஞ்ஞான முறைப்படி செய்யப்படுகிறது. சாஸ்திரங்களில் கண்டிப்பான முறைகள் வகுக்கப்பட்டுள்ளன. இன்று படிக்கப்பட்ட முதல் பகுதியில் தேவி தத்து வம் விளக்கமாக எடுத்துக் கூறப்பட்டுள்ளது. இதன் அமைப்பு ஒரு கதை வடிவத்தில் இருக்கிறது. இது

ஒரு முனிவர் ஒரு அரசனுக்கும் ஒரு வணிகனுக்கும் எடுத்துச் சொல்லும் வகையில் அமைந்துள்ளது. தேவியினுடைய அம்சத்தைப்பற்றியும், அவளுடைய தன்மை, அவள் எப்படி இருக்கிருள், அவள் என்ன வாக இருக்கின்ருள் என்பன போன்ற தத்துவக் கருத்துக்கள் இதில் நிறைந்திருக்கின்றன. அம்பிகையைப் புகழ்ந்து பாடியுள்ள உன்னதமான, உள்ளத்தை உயர்த்தும் சுலோகங்கள் இதில் இருக்கின்றன. சாக்த முறை வழிபாடு, ஆன்மீகப் பயிற்சி ஆகியவற்றில் இந்த சாஸ்திரத்தை ஆரம்ப முதல் கடைசி வரை பாராயணம் செய்வதே ஒரு மாபெரும் சக்தி வாய்ந்த சாதனையாகக் கருதப்படுகிறது. இந்த சாஸ்திரத்தின் சாரத்தை நான் ஒரு சில வார்த்தைகளில் இப்பொழுது எடுத்துக் கூறுகின்றேன்.

## தேவி மஹாத்மிய சாரம்

இது இவ்வாறு ஆரம்பமாகிறது. ராமபிரான் உதித்த சூரிய வம்சத்தைச் சார்ந்த சுரதன் என்ற அரசன் எதிரிகளால் தாக்கப்பட்டு, தோற்கடிக்கப்பட்டு, நாட்டைவிட்டு விரட்டப்பட்டுவிட்டான். அவன் ஒரு காட்டில் தஞ்சம் புகுந்தான். சகல செல்வங்களையும், சேனை, படை முதலியவை அனைத்தையும் இழந்து அவன் மிகுந்த வேதனைப்பட்டு சோர்வுற்றிருந்தான். அவன் எல்லாவற்றையும் இழந்து திக்கற்றவனாக, மிகவும் பரிதாபகரமான நிலையில் அலைந்து திரிந்து கொண்டிருந்தான். அவனுடைய மனம் மீண்டும் மீண்டும் தனக்கு நேரிட்ட விதியைப்பற்றியும், தனது ராஜ்யம், செல்வம், மந்திரி பிரதானிகள், புதியவர்கள் இனி அரசாளப் போகும் முறை ஆகியவற்றைப்பற்றியே சிந்தித்துக்

கொண்டிருந்தது. அவன் இந்த மனோநிலையில் இருந்துகொண்டிருக்கும்பொழுது அவனுடைய கண் ணுக்கு ஒரு முனிவருடைய ஆசிரமம் புலப்பட்டது. அது ஆத்ம தரிசனமடைந்த மேதை என்கிற ரிஷி யினுடைய ஆசிரமம். அரசன், அழகு மிளிரும் அந்த ஆசிரமம், சாந்தம், அமைதி, தூய்மை ஆகியவையே வடிவாக இருப்பதையும், அந்த ரிஷியையும், அவரு டைய சீடர்களையும் காணலுற்றான்; பிறகு இவனும் அங்கு போய்த் தங்கலானான்.

இவ்வாறு இவன் இந்த ஆசிரமத்தில் தங்கி யிருக்கும்பொழுது இவனைப்போலவே அல்லல்பட்டு அங்கு வந்த சமாதி என்ற வணிகனைச் சந்திக்க நேரிடுகிறது. துரதிருஷ்டவசமாக இவனும் இந்த அரசனைப்போலவே வீட்டை விட்டு விரட்டப்பட்டு விட்டான். இவன் சொத்து முழுவதையும் இவனு டைய உறவினர் பிடுங்கிக்கொண்டு விட்டனர். இவ னுடைய குடும்பத்தாரே இவனை வீட்டை விட்டு வெளியேற்றிவிட்டனர். இவன் இவ்வாறு காட்டில் அலைந்து திரியும்படி நேர்ந்தது. இவனும் இந்த முனி புங்கவரின் பாதார விந்தங்களில் தஞ்சம் புகுந்தான்.

இவர்கள் இருவரும் தங்கள் சொத்தை இழந்து தங்கள் சொந்த மக்களாலேயே விரோதிக் கப்பட்டு வீட்டை விட்டு விரட்டியடிக்கப்பட்டு, கிட் டத்தட்ட ஒரே நிலையில் இருப்பதைக் கண்டனர்; தங்கள் சொந்த மக்கள் இவ்வளவு கொடூரமாக நடந்தும் வெறுப்பும், பகையும் காட்டியும் கூட மன மானது மீண்டும் மீண்டும் அவர்கள் பக்கமே நாடி

நிற்பதையும், தங்கள் துன்பங்கள், துயர, ஏமாற்றம், உள்ளச் சோர்வு ஆகியவைகளுக்குக் காரணமாயிருந்த அந்தப் பொருளின்மீதே செல்லுவதையும் எண்ணி திகைப்புற்று ஆழ்ந்து சிந்திக்கலாயினர்.

இதை அவர்கள் தங்களுக்குள்ளேயே விவாதிக்க முயற்சி செய்து பார்த்தனர். எந்தப் பொருள்களிடமும், மக்களிடமுமிருந்து துன்பத்தையும், துயரத்தையும் தவிர வேறு எதையும் பெற இயலவில்லையோ அந்தப் பொருள்களிடத்தும், மக்களிடத்துமே இந்த மனமானது நாட்டம் கொள்ளுவதன் விசித்திரம் என்ன என்று ஆராய்ச்சி செய்து பார்த்தனர். அவர்களால் இந்தப் புதிருக்கு விடை காண முடியாமையால் இதற்கு விளக்கம் கூறும்படி ரிஷி மேதையிடம் வணங்கிக் கேட்டுக்கொண்டனர். ரிஷியைப் பார்த்து அவர்கள் கேட்கலாயினர்: "முனி புங்கவரே! இந்தப் புதிருக்கு எங்களுக்குச் சற்று விளக்கம் கொடுத்தருளவேண்டும்; எந்தப் பொருள்களிடமிருந்தும், மக்களிடமிருந்தும் இந்த மனதிற்கு மிகப்பெரிய துன்பமும், தொல்லையும் ஏற்பட்டதோ, அதே பொருள்களிடத்தும், மக்களிடத்தும் இந்த மனமானது மீண்டும் பற்றிக்கொண்டிருப்பதைப் பார்க்கும்பொழுது எங்களுக்கு ஒரே திகைப்பாக இருக்கிறது. இந்தப் பொருள்களிடத்தில் சுகம் இல்லை என்பதை இந்த மனம் நன்கு அறியும். அப்படி அறிந்திருந்தும் இது அவற்றின்மீது வைத்திருக்கும் பற்றை விடுவதில்லை. — இதற்குக் காரணம் என்ன? மனத்தின் விசித்திரமான இந்த மயக்கத்திற்குத் தாங்கள் கொடுக்கும் விளக்கம் யாதோ?"

இந்தக் கேள்வியானது ராஜா சுரதன், வைசியன் சமாதி ஆகியோருடைய வாயின் மூலமாக வந்தபோதிலும் இது உலகிலுள்ள ஆண், பெண் அனைவருடைய உள்ளங்களையும் கலங்கவைத்துக் கொண்டிருக்கும் ஒரு பொதுவான கேள்வியேயாகும். இதற்கு விடை பகருமுகத்தான் மேதை ரிஷியானவர் தேவியின் மஹாத்மியத்தை அதியற்புதமாக எடுத்து விளக்க ஆரம்பிக்கிறார். அவர் கூறுகிறார்: "எனதருமைக் குழந்தைகாள்! மனிதனுடைய மனத்தில் ஒரு விசித்திரமான மயக்கம் குடிகொண்டிருக்கிறது. இந்த மயக்கத்தின் காரணமாகத்தான் அவன் மீண்டும் மீண்டும் தனக்கு மிகுந்த துன்பத்தையும், இன்னலையும் கொடுத்த அந்தப் பொருள்களையும், மக்களையும் பற்றிக் கொள்ளப்பார்க்கிறான். இந்த மயக்கம், இந்த ஆவரண சக்தி, உண்மையில் அன்னைபராசக்தியின் விசித்திரமான சக்தியேயாகும். மஹா மாயையாக இருப்பவள் அவளே, இப்பிரபஞ்சத்தின் தோற்றத்திற்கே ஆதிகாரணியாக இருப்பவள் அவளே. அவளுடைய இந்த ஆவரண சக்தி தான் ஒன்றாக இருப்பது பலவாக இருப்பனபோல் தோன்றுவதற்கும், உருவமற்றது எண்ணற்ற உருவங்களோடு இருப்பது போல் தோன்றுவதற்கும் தோன்றாதிருப்பது தோன்றியிருப்பது போல் காணப்படுவதற்கும் காரணம் இந்த விசித்திரமான சக்தி பரம்பொருளின் வர்ணிக்க வொண்ணாத சக்தியேயாகும். இது பிரம்ம சக்தி; இதுதான் மஹாமாயை. இது இறைவனிடமிருந்தே வெளியானது. இந்த சக்தியின் மூலமாகத்தான் இறைவன் சிருஷ்டி,

ஸ்திதி ஸம்ஹாரமாகிய நாடகத்தை நடத்திக் கொண்டிருக்கிருன்.

சுரத மன்னனும், சமாதி வணிகனும் ரிஷி மேதை கூறிய இந்த விசித்திர சக்தியைப் பற்றியும், எல்லா தோற்றங்களுக்கும் ஆதாரமாக இருக்கும் அந்த மஹா மாயைப்பற்றியும் மேலும் அறிய விரும்பினர். இந்த வேண்டுகோளுக்கு இணங்கி ரிஷி மேதையானவர் தேவியினுடைய தன்மையை விரிவாக விளக்க ஆரம்பித்தார்; 700 சுலோகங்களாலான இந்த சாஸ்திரத்தில் இந்த விளக்கம் அடங்கியிருக்கிறது. முடிவில், தேவியினுடைய தன்மையின் விசித்திரைத்தையும், இரகசியத்தையும் எடுத்து விளக்கிய பிறகு, ரிஷி மேதையானவர் சுரதனேயும், சமாதியையும் யோகத்தை அப்பியஸித்து தேவி உபாஸனேசெய்து அவளிடம் பிரார்த்தித்து, அவளே தியானித்து அவளே மகிழ்விக்கும்படிச் சொல்லி அனுப்புகிருர். இவ்வாறு மகிழ்விக்கப்பட்ட அம்பிகை அவர்களுக்குக்காட்சி தந்து தனது கருணமிர்தத்தை அந்த அரசன் மீதும், வணிக்ன் மீதும் பொழிந்து அவர்களுடைய எண்ணத்தைப் பூர்த்தி செய்து வைக்கிருள்.

இதுதான் சாக்தர்களின் பரம சாஸ்திரமான தேவி மஹாத்மியத்தின் சுருக்கமான கருத்தாகும்.

### மாயையும் பிரம்மமும் ஒன்றே

இந்த தேவி தத்துவவிளக்கமானது, பராசக்தியே சகலமுமாக இருக்கிறது என்பதை நமக்கு

எடுத்து விளக்குகிறது. நாம் பார்க்கின்ற அனைத்தும், நம் கண் முன்பு தோன்றுகின்ற இப்பிரபஞ்சத்தில் காணப்படுபவை அனைத்தும் பரப்பிரம்மத்தின் இந்த பராசக்தியின் வெளிப்பாடு தவிர வேறில்லை என்பதை இது நமக்கு எடுத்துக் கூறுகிறது. அவள் ஆதி சக்தி என்று அழைக்கப்படுகிறாள். அவள் பராசக்தி என்றும் வழங்கப்படுகிறாள். அவளுக்கு மஹாசக்தி என்றும் பெயர் உண்டு.

சர்வ வல்லமை வாய்ந்த பரம்பொருளுக்கும் இந்த மாபெரும் தெய்வீக சக்திக்கும் உண்மையில் என்ன சம்பந்தம் என்கின்ற கேள்வி மிகவும் சுவையானது. இக்கேள்வி பெரும் மேதாவிகள் அனைவருடைய மனத்திலும் இடம் பெற்றிருக்கிறது. இதற்குப் பல்வேறு வகையான விளக்கங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. ஆனாலும் அனுபூதி பெற்ற முனிவர்கள் தாங்கள் கண்ட அன்னை பராசக்தியின் அம்சத்திற்கும், பரப்பிரம்ம அம்சத்திற்கும் உள்ள சம்பந்தத்தைப் பற்றிய இரகசியத்தை ஞான மொழிகளால் கூறியிருக்கின்றனர். பரப்பிரம்மமும், அவருடைய உலக மாயை அல்லது தேவி என்று நம்மால் வழங்கப்படும் அவருடைய பராசக்தியும் உண்மையில், சாராம்சத்தில் ஒன்றே என்று நமக்கு எடுத்துரைக்கின்றனர். அவைகள் (அல்லது அவர்கள்) வேறு போலத் தோன்றினாலும் உண்மையில் ஒன்றே. இது உண்மையில் வித்தியாசமில்லாத ஒரு வேறுபாடு. இதுதான் அவர்களுக்குள்ள சம்பந்தம். அவர்கள் ஒரு நாணயத்தின் இரண்டு பக்கங்களைப் போன்றவர்கள். தேவியை உணராமல்

பரப்பிரம்மத்தை நீங்கள் உணர முடியாது. தேவியை உணர்தல் என்பது, பரப்பிரம்மத்தையும் உணர்வது என்று தானாகவே யூகிக்க வேண்டி வரும். தேவி அல்லது பராசக்தியானவள் தோற்றத்திற்கும், தோன்றாமைக்கும் இடையேயுள்ளதொரு விசித்திர மான இணைப்பாக விளங்குகின்றாள் என்று அவர் கள் நமக்கு எடுத்து விளக்குகின்றனர். தோன்றா நிலையைத் தோற்றத்தோடு இணைக்கும் ஒரு சங்கிலி யாக அவள் விளங்குகின்றாள். உதாரணமாக, ஒரு காரியமும், அந்தக் காரியத்திற்கு ஆதாரமாக இருக் கின்ற காரணமும் இருக்கிறது—ஆனால் காரியத் தைக் காரணத்தோடும், காரணத்தைக் காரியத்தோ டும் இணைத்து வைப்பது எது? இவ்விரண்டையும் இணைத்து ஒன்றாக்கி வைக்கின்ற ஒரு விசித்திரமான இணைப்பு இருக்கிறது. அவைகள் பார்ப்பதற்கு இரண்டு போலத் தோன்றினும், உண்மையில் அவை இரண்டும் ஒரே கிரியையின் இரண்டு சந்திப் புக்களேயாகும். இந்தக் காரணக் கிரியை காரிய மாகத் தோன்றுகிறது. காரணத்தைக் காரியம் போல் தோற்றுவிக்கும் இந்த சக்திதான் மாயை அல்லது தேவி என்று வழங்கப்படுகிறது.

பரப்பிரம்மமும் எல்லா சலனங்களையும், முற்றி லும் கடந்து இருப்பவர் என்று வர்ணிக்கப்படுகிறது. ஏனெனில் எல்லையற்ற தன்மையுடையவராகவும், சர்வ வியாபியாகவும் இருப்பதால் சலனம் என்கின்ற கேள்வியே எழ இடமில்லை. தேவி என்று நம்மால் வழங்கப்படும் பராசக்தி பரப்பிரம்மத்தின் சக்தி அம் சம் என்று வர்ணிக்கப்படுகிறது. அவர்கள் பாலும்

வெண்மையும் போல, நெருப்பும் உஷ்ணமும் போல, பாம்பும் அதன் வளைந்த சலனமும் போல பிரிக்கப் பட முடியாதவர்கள் என்று அவர்கள் கூறுகின்றனர். நீங்கள் பாலை நினைத்த மாத்திரத்தில் அதன் வெண்மை நிறத்தையும் தானாகவே நினைக்கின்றீர் கள். நெருப்பை நினைத்த மாத்திரத்தில் அதன் சூடும் தானாகவே நினைவுக்கு வரும். நெருப்பிலுள்ள சூட்டைப் பிரித்து விட்டால் அதை உங்களால் நெருப்பு என்று கூற இயலாது. அதேபோல பரப் பிரம்மமும் சக்தியும் நெருப்பையும் சூட்டையும் போல பிரிக்கப்பட முடியாதவர்கள். பிரம்மத்தை நெருப்பாக வைத்துக்கொண்டால் சக்தி அல்லது தேவியை சூடாக வைத்துக் கொள்ளலாம். மாயை அல்லது பிரகிருதி அல்லது சக்திக்கும் பிரம்மத்துக் கும் உள்ள விசித்திரமான சம்பந்தத்தை தற்கால உதாரணம் ஒன்றைக் கொண்டு விளக்கலாம். ஒரு மின்கலத்திற்குள் மின்சார சக்தி இருக்கிறது. மின் கலத்தினுள் இருக்கும்போது மின்சக்தி தோன்று வதில்லை. அது சக்தியுடையதாகத் தோன்றுவதில்லை. அது ஜடமாக இருக்கிறது. அந்த மின்கலத்தை பல்வேறு இடங்களுக்கு எடுத்துச் செல்லலாம்; அதற்குள் அபாரசக்தி இருப்பதை யாரும் அறிய முடியாது. இதற்குள் இந்த அற்புதமான சக்தி இருக்கிறது என்பதற்கு அறிகுறியாக ஒன்று மில்லை. ஆனால் அதற்கு வேண்டிய மின்கம்பி களோடு இணைத்து அந்தச் சக்தியைச் சுற்றவைத்த வுடன் ஜடமாக இருந்த அந்த மின் சக்தி அற்புத மான சக்தியாக வெளிப்படுவதைக் காண்கிறோம். அது மின்னல் வேகத்தில் பாய்ந்தோடுகிறது. அது

அதிர்ச்சியை உண்டுபண்ணுகிறது, அல்லது மின் சார பல்பைப் பிரகாசிக்கச் செய்கின்றது; மின்விசிறியில் சுழலும் சக்தியாகத் தோன்றுகிறது, குளிர் பதனப் பெட்டியில் உறை நிலையடையக் கூடிய குளிர்ச்சியாகவும், மின் அடுப்பில் 'அபார சக்தி வாய்ந்த உஷ்ண சக்தியாகவும் வெளிப்படுகின்றது. அதனல் வஸ்துக்களை எரித்துச் சாம்பலாக்க முடிகிறது; மின்சங்கில் சப்தமாக வெளிப்படுகிறது. ஒரு மின்கலத்தில் ஜட நிலையில் வைக்கப்பட்டிருந்த இந்த சக்தி ஒளியாகவும், சலனமாகவும், உஷ்ணம், குளிர்ச்சி, சப்தம் ஆகியவைகளாகவும், புலன்களால் அறியக்கூடிய எத்தனையோ வகையாகவும் தோற்றமளிக்கிறது. இதேபோல் பராசக்தியானவள் மனே, வாக்கைக் கடந்து, அசையாது ஜட நிலையிலுள்ள பரப்பிரம்மத்தின் அம்சமாக இருக்கும்பொழுது, நாம மற்று, ரூபமற்று, தோன்ரு நிலையில் தானக இருந்து வருகிருள். தோன்றும் நிலையை அடையும்பொழுது, சிருஷ்டி வடிவெடுக்கும் பொழுது நாம ரூபங்களோடு எண்ணற்ற அபார சக்திகளாக தோன்றுகின்ற இப் பிரபஞ்ச முழுவதும் ஊடுருவி நிற்கின்ருள். அன்னை பராசக்திதான் மின்சக்தியாகவும், சூரிய வெளிச்சமாகவும், கடலின் ஆழமாகவும், கையின் அசைவாகவும், மலரின் நறுமணமாகவும், நாதத்திலுள்ள சங்கீதமாகவும், இப்பிரபஞ்சத்தில் தோன்றுகின்றதும், தோன்ருததுமாகிய அனைத்துமாக சர்வ சலனமாகவும், சர்வ இயக்கமாகவும், சர்வ சக்தியாகவும், விளங்குகின்ருள்; அவள் மனிதர்களிடம் அறிவாகவும், மனமாகவும், விருத்திகளாகவும், உணர்ச்சிகளாகவும்—

தனிப்பட்டவர் உள்ளத்திலுள்ளோ அல்லது புறத்தே இயற்கையின் சக்தியிலோ இவ்வுலகில் நாம் காணுகின்ற எல்லாமாகவும் பிரசன்னமாக இருக்கிருள். அவளே இப்பிரபஞ்சத்தின் ஜீவநாடி. அவள்தான் இப்பிரபஞ்சத்தின் சிருஷ்டி, ஸ்திதி, சம்ஹாரகர்த்தா. ஸர்வம் சக்தி மயம் ஜகத்; இதுதான் முடிந்த உண்மை. இப்பிரபஞ்சத்திலுள்ள அதி திடப் பொருள் முதல் மிக நுண்ணிய பொருள் வரை, அணு முதல் அண்டம் வரை—ஒவ்வொன்றும் அந்தப்பராசக்தியின் பல்வேறு தோற்றங்களே. நாம ரூபங்கள் அனைத்துமாகத் தோன்றுகின்ற இந்த பராசக்தியே எல்லாத் தோற்றங்களுக்கும் வடிவங்களுக்கும் மூலகாரணம். அன்னையின் காரணமாகத்தான் தோற்றம் சாத்தியமாகிறது.

இந்தப் பராசக்தியைத்தான் நாம் இந்த ஒன்பது நாட்களிலும் குறிப்பிட்ட சில வடிவங்களின் மூலம் வழிபடுகின்றோம். சர்வ சக்திக்கும் சக்தியான இந்த மஹாசக்தியைத்தான் பக்தன் அவளுடைய மூன்று அம்சங்களான மஹாகாளி அல்லது துர்க்கை, மஹாலக்ஷ்மி, மஹாசரஸ்வதி எனப்படும் தெளிவான அம்சங்களில் வழிபடுகின்ருன். இந்த ஒன்பது நாள் வழிபாடு மும்மூன்று நாட்களான மூன்று பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன. முதல் மூன்று நாட்களும் நாம் அன்னையை மஹாகாளி அல்லது துர்க்கையின் வடிவத்தில் வணங்குகின்றோம். இரண்டாவது பகுதியாகிய மூன்று நாட்களிலும் அவளை மஹாலக்ஷ்மி வடிவத்தில் வழிபாடு செய்கின்றோம். கடைசி மூன்று நாட்களிலும் மஹாசரஸ்வதியின் ரூபத்தின் மூலம்

தொழுகின்றோம். இந்தக் குறிப்பிட்ட வழிபாட்டு முறை வரிசைக் கிரமத்திற்கு மிக ஆழ்ந்த, முக்கியமான கருத்து இருக்கிறது. அதைப்பற்றி வரப் போகும் நாட்களில் நாம் கவனிப்போம்.

# இரண்டாவது இரவு

## *அழிக்கும் சக்திகளை அளிப்பவள்*

பரப்பிரம்மத்தின் ரகசியமான அசிந்த்ய சக்தியாக இருப்பவளும், அறிவுக்கெட்டாத பரமசக்தியாக இருப்பவளும் ஆகிய அந்த அன்னை பராசக்திக்கு மீண்டும் மீண்டும் நமஸ்காரங்கள். தோற்றங்கள் அனைத்திற்கும், வடிவங்கள் அனைத்திற்கும் ஆதாரமாக விளங்கும் அந்த மஹாதேவிக்கு நமஸ்காரங்கள். எந்த சக்தியிடமிருந்து இந்த எண்ணற்ற அண்டங்கள் அனைத்தும் தோன்றியுள்ளனவோ, எதனிடம் இத்தோற்றங்கள் அனைத்தும் நிலைபெற்றிருக்கின்றனவோ, எதனிடத்தில் இந்த நாமரூபங்கள் அனைத்தும் ஒடுங்கி மறைகின்றனவோ, எதன் மூலம் சகல ஜீவராசிகளும் பரப்பிரம்மமாகிய அந்த மாபெரும் சத்வஸ்துவோடு ஐக்கியமாகின்றனவோ, அந்த திவ்ய சக்திக்கு நமஸ்காரங்கள்.

இந்த மஹாசக்தியை அன்னையாக பாவிக்கும் முறையைப் புரிந்துகொள்வது மிக எளிது. இந்த உலகில் ஜனித்த எந்த ஒரு ஜீவனுக்கும் முதன் முதலில் ஏற்படுவது தாயினுடைய பரிச்சயமேயாகும். ஒருவருக்கு ஏற்படும் பழைய நினைவுகளில்

அநேகமாக முதன் முதலில் வருவது அவர் தன்னுடைய தாயின் மடியில் படுத்துக்கொண்டு அவளுடைய அன்பு கனிந்த பார்வையோடு கூடிய கண்களை உற்று நோக்கிய காட்சியேயாகும். குழந்தைக்குத் தாயிடத்தில் காணப்படுவது பரிவும், அன்பும், ஊட்டமும், கவனிப்பும் கலந்ததொரு உலகமாகும். அந்த உலகத்திலிருந்துதான் ஒருவன் ஆதரவையும், ஆறுதலையும், பாதுகாப்பையும், தெம்பையும் பெற விழைகின்றான். அங்குதான் அவனுக்கு சௌகரியம், பாதுகாப்பு, போஷணை முதலியவை கிடைக்கின்றன. ஆகவே அன்பு, அக்கறை, பாதுகாப்பு ஆகியவை தாய்மைக் கொள்கையிடத்தில் இருக்கின்றன. ஆகையால் இந்த மனப்பான்மையை தெய்வத்திடத்தில் மாற்றியிருப்பது மிகவும் சகஜமானது. அறிவுக்கேற்றது. சுலபமாகப் புரிந்துகொள்ளக் கூடியது. இவ்வாறு, இந்துமதக் கோட்பாட்டில், எல்லோரையும் நேசிக்கும், எல்லோரையும் போஷிக்கும், எல்லோரையும் ரக்ஷிக்கும், எல்லோரையும் பாதுகாக்கும் அன்னை பராசக்தியின் அருமையான கோட்பாடு ஏற்பட்டிருக்கிறது.

இன்று அம்பிகையின் பாதார விந்தங்களை அவளுடைய புகழைப் பற்றிய ஒரு சில சொல் மலர்களால் அர்ச்சித்து வழிபடுவோமாக! இப்படிச் செய்வது கூட அதாவது அன்னையை வழிபட்டு, தோத்திரம் செய்து, அந்த சிந்தனையில் லயித்திருப்பதுகூட அவள் காட்டும் இரக்கத்தினாலும், கருணையாலும் தான் என்பதை நாம் எப்பொழுதும் ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். அவளுடைய கருணை

யில்லாமல் அவளை நினைப்பதற்கும், அவளை நினைவு படுத்திக் கொள்ளவும், அவளுடைய புகழைப் பேச வும், அவளுடைய திவ்ய நாமங்களை உச்சரிக்கவும், அன்னை என்று அவளை வழிபடவும் ஒரு சந்தர்ப் பத்தைப் பெறுவது துர்லபம். அவள் கருணையே வடிவானவள், இரக்கமே உருவானவள். அன்பே அவளுடைய சுபாவம். இந்த மங்கள நாளில் நாம் எல்லோரும் அவளைப் பற்றி மனத்தால் சிந்தித்து, வாயாரப் புகழ்ந்து வழிபாடு செய்ய நம்மீது அவள் தனது ஆசிகளைப் பொழிந்திருக்கிருள்.

எது எது இருக்கிறதோ அதுவெல்லாம் அன் னையே. சுத்த சத்தின் சாரம் பரப்பிரம்மமே. நாம் அறிவதெல்லாம் அன்னையே. நம்முடைய அறிவு நிலையைக் கடந்து நிற்பது புருஷன், பரம்பொருள் அல்லது மனம் வாக்கு நிலையைக் கடந்த பரப்பிரம் மமே. நமது மனம், புலன்கள் ஆகியவை மூலம் நாம் அறிவது அன்னையின் தோற்றத்தைத் தவிர வேறில்லை. அன்னையானவள் நமக்குத் தெரிந்த இந்த சிறு உலகம், எண்ணற்ற விண்மீன்கள், சூரி யன், சந்திரன் இவைகளைச் சார்ந்த மண்டலங்கள் ஆகியவைகளாலான இச்சிறு பிரபஞ்சம் மட்டுமல்ல; அன்னையினுடைய எல்லையில்லா வியாபகத் தன்மை யில் இப்பிரபஞ்சம் ஒரு சிறு புள்ளியைப் போன்றது. அவளுடைய எல்லையற்ற தன்மைக்குள் இதுபோன்ற எண்ணற்ற பிரபஞ்சங்கள் தோன்றி மறைகின்றன. அவள் சர்வ சக்தி வாய்ந்தவள். தோற்றங்கள் அனைத்திற்கும், தோற்றங்களுக்கு ஆதிகாரணமாக இருக்கின்ற அனைத்திற்கும் அவள் நமது மனங்

கடந்த சக்தியாக விளங்குகின்ருள். அவள் இந்த உலகத்திற்கு மட்டும் சிருஷ்டி காரிணி அல்ல, ஆனல் இந்த உலகத்தையே சிருஷ்டித்து, காத்து, அழிக்கும் மும்மூர்த்திகளையும் சிருஷ்டிப்பவள். பிரம்மா, விஷ்ணு, மஹேஸ்வரன் மூவரும் அன்னையிடமிருந்தே தோன்றியிருப்பவர்கள். அவள் எண்ணற்ற பிரம்மாக்களுக்கும், விஷ்ணுக்களுக்கும், மஹேஸ்வரர்களுக்கும், மற்றும் சகலருக்கும் தாயாக இருப்பவள். ஆகவே அவள் சர்வ வல்லமையுடையவள். சர்வ சக்திகளும் அவளுடைய திருவிளையாடலே; ஆகவே பிரம்மா, விஷ்ணு, மஹேஸ்வரர் என்னும் மூன்று சக்தி தோற்றங்களும் ஆதிசக்தி என்னும் முறையில் அன்னையின் மாறுபாடுகளேயாம். சரஸ்வதி என்னும் ரூபத்தில் அவள் நமக்கு பிரம்ம சக்தியாகவும், லக்ஷ்மியின் வடிவில் விஷ்ணு சக்தியாகவும், பார்வதி ரூபத்தின் மூலம் சிவசக்தியாகவும் தோற்றமளிக்கிருள்.

## மாயையும் மோக்ஷமும்

சர்வ சக்தி என்னும் அம்சத்தில் அவளிடம் இரண்டு வகை உருவமுண்டு. பக்தி சிரத்தையுடன் கூடிய இந்து, இரண்டையும் வழிபடுகின்ருர். இது ஒரு அழகான கோட்பாடு. மகாமாயையாகவும், மஹாமோக்ஷமாயும் விளங்குகின்ற இந்தக் கோட்பாட்டில் எவ்வளவு ஆழ்ந்த கருத்து பதிந்திருக்கிறது தெரியுமா! அவள் எல்லோரையும் விசித்திரமான இந்த உலக விளையாட்டான மாயா தோற்றத்தில் கட்டிவைத்து பிறப்பு இறப்பு என்னும் சக்கரத்

தில் தன்னுடைய விளையாட்டுப் போக்கிலேயே சுழல வைக்கிறாள். ஆகவே அவளுக்கு அவித்தை என்ற பெயர் வழங்கி வருகிறது. ஆன்மீக ஞானம் பெறுவதற்கு இந்த மாயை எதிரானது. அவள் மஹா மோக்ஷமாகவும் விளங்குகின்றாள். இந்த அம்சத்தில் அவள் தனது குழந்தைகளைப் பார்த்து புன்னகை பூத்து தனது அவித்தை யென்னும் மாயையிலிருந்து அவர்களை விடுவிக்கின்றாள். இந்த மஹாமோக்ஷம் என்னும் அம்சத்தில் நாம் அன்னையே வித்யாமாயா என்று அறிந்திருக்கிறோம். ஆகவே ஓவியர்கள் அவளை ஜோதி சொரூபமான தேவதையாக, ஒரு கையில் ஜீவர்களைப் பந்தப்படுத்தும் பாசக்கயிற்றை யும், அவளை மகிழ்வித்து சாந்தப்படுத்தினால் அதை அறுத்தெறிய மற்றொரு கையில் கூரியவாளையும் தரித்திருப்பதாக பாவனை செய்து சித்திரம் வரை கின்றனர். இவ்வாறு அவள் அவித்யாமாயையும், வித்யாமாயையும் கலந்து விசித்திரமான அம்சத் தோடு கூடினவளாக இருக்கின்றாள். ஆகவே அவளை வர்ணனைக்கு அப்பாற்பட்டவள் என்று அழைக்கின்றனர்.

இந்த இரண்டு அம்சங்களிலும் அவள் இந்த பிரபஞ்சத் தோற்றமாகிய நாடகத்தை ஏற்படுத்தி இருக்கிறாள். அன்னையை வழிபட்டு அவளுடைய கருணையைப் பெற்று அவளுடைய மெய்த்தன்மைக் காட்சியை அடையப் பெற்ற அவளுடைய பக்தர்கள் அன்னையையும் அவளுடைய திருவிளையாடலையும் இந்த இரகசியமான முறையில் வர்ணித்திருக்கின்

றனர். நாமெல்லாம் குழந்தைப் பருவத்தில் ஒன்று சேர்ந்து விளையாட விரும்புவதுண்டு; கூட்டு விளையாட்டு எப்படி விளையாடுவது என்பது அறியாது நாம் வீட்டிலுள்ள பாட்டியிடம் போய் நமது கருத்தைத் தெரிவிக்கின்றோம். அவளும் பிரியத்தோடு நமக்கு ஒரு விளையாட்டு சொல்லித் தருவதாக சம்மதித்து கண்ணுமூச்சி விளையாட்டை ஆரம்பித்து வைக்கிறாள். அவள் குழந்தைகளைப் பார்த்து, 'குழந்தைகளே, ஓடி விளையாடுங்கள்' என்று கூறுகிறாள். குழந்தைகள் விளையாட்டில் ஈடுபடுகிறார்கள். அவர்கள் ஓடுகிறார்கள். ஒருவரை ஒருவர் பிடித்து விளையாடுகின்றனர். ஆனால் யாராவது ஓடி களைத்துப் போய் மேற்கொண்டு விளையாட விருப்பமில்லை யென்றால் அது பாட்டியிடம் வந்து அவளைத் தொட்டு விட வேண்டும். பாட்டியைத் தொட்டுவிட்டவர்களை யாரும் பிடிக்க முடியாது. இந்தப் பாட்டியானவள் எவ்வாறு இந்த விளையாட்டை ஏற்படுத்தி, விளையாட்டு நடப்பதை கவனித்துக்கொண்டு, விளையாடிக் கொண்டிருக்கும் குழந்தைகளை ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொண்டு, கடைசியாகத் தன்னை வந்து தொட்டவர்களை விடுவிக்கிறாளோ அதேபோல் இப்பிரபஞ்சமானது அகிலாண்டேசுவரிக்கு ஒரு குழந்தை விளையாட்டைத் தவிர வேறில்லை. புலன் வழி உலகத்தில் ஓயாது ஓடி அலைந்து களைத்துப் போய் இந்த விளையாட்டிலிருந்து விலகியிருக்க விரும்புபவர்கள் யாராயிருந்தாலும் இந்த அகிலாண்டேசுவரியிடம் ஓடி வந்து அவளை ஸ்பரிசிப்பதைத் தவிர வேறு வழியில்லை. அப்படி அவளை வந்து அடைந்தவர்கள் சாசுவதமாக இந்த விளையாட்டு

பந்தத்திலிருந்து விடுவிக்கப்படுகின்றனர். இவ்வாறு அம்பிகையின் பக்தர்கள், இந்த உலக விளையாட்டைத் துவக்கி வைப்பவளும் அவளே, அதை முடித்து வைப்பவளும் அவளே என்பதை நன்கு உணர்ந்திருக்கின்றனர்.

## கலங்கவைக்கும் காளி

தேவியினுடைய குறிப்பிட்ட அம்சங்களை நாம் மேற்கொண்டு ஆழ்ந்து நோக்கும் பொழுது நமக்கு உடனே பயங்கரமான ஒரு பிரச்னை எழுகிறது. அன்னையைப் பற்றிய முதல் மனோபாவனையே, குறிப்பாக தேவி பூஜையின் போது செய்யப்படுகின்ற பாவனையும், உருவமும் சாதாரண மக்களை மிகவும் திகைக்க வைத்து விடுகிறது. நமது கலாசாரம், விவேகம் முதலியவற்றை அறியாத வேற்று நாட்டார் மட்டுமல்லாது, இந்தியர்கள்கூட, நன்கு படித்து விஷய ஞானம் உடைய இந்துக்கள் கூட நாம் அன்னையை சர்வ சம்ஹாரிணியாக, பயங்கர ரூபிணியாக வழிபடும் முறையைப் புரிந்துகொள்ள இயலவில்லை.

வங்காளத்தில் தசரா பண்டிகை முழுவதும் துர்க்கை, மஹாகாளி வழிபாடுதான். பல பேருக்கு காளி என்ற பெயரே பய்த்தை உண்டு பண்ணுகிறது. இந்துக்களாகிய நாம் கூட காளி வழிபாடு செய்பவர்களெல்லாம் தாமஸ குணமுடையவர்கள் என்றும் காளி ஒரு உக்ர தேவதை என்றும் எண்ணிக் கொண்டிருக்கிறோம். கருத்த உடலும், தொங்கிக் கொண்

டிருக்கும் சிவந்த நாக்கும், கபால மாலையும், வெட்டிய மானிட கரங்களாலான அறை ஆடையும், குருதி சிந்திக் கொண்டிருக்கும் கூரிய வாளேந்திய கரமும் ஆகிய இந்த பயங்கர ரூபத்தோடு கூடிய படத்தை ஒரு வைதீகத் தென்னிந்தியர் வீட்டில் வைத்திருந்தால், உடனே வீட்டிலுள்ள பெண்கள் அப்படத்தை வீட்டை விட்டு அப்புறப்படுத்தி விடுவார்கள். காளி என்னும் அம்சத்தில் தெய்வத்திடம் அவர்களுடைய மனப்பான்மை அப்படி இருக்குமாகில், காளியை அன்னை என்று போற்றும் மனப்பான்மை எப்படி வந்தது? நீங்கள் அவளை எப்படி வழிபட முடியும்?

இது ஒரு சகஜமான தவறு. இதைத் திருத்த வேண்டியது அவசியம். அன்னை ஒருபொழுதும் கோரரூபிணி அல்ல, பயங்கர சொரூபிணி அல்ல. அவள் எப்பொழுதும் அன்பே வடிவானவள், கருணையே உருவானவள். ஏனைய அம்சங்களோடு கூட அன்னை பராசக்தியை காளி என்கின்ற அம்சத்தில் வழிபாடு செய்வதற்குரிய விளக்கம் மிகவும் சாதாரணமானது. இது ஒன்றும் கடினமானதல்ல. இது அவ்வளவு ஆழ்ந்த அப்பிரத்யக்ஷமான ஆன்மீகக் கருத்துடையதல்ல. இது இரகசியமான வேதாந்தக் கருத்துடையதுமல்ல. இது மிக மிக சகஜமானது, எளிமையானது.

நான் மிகச் சமீப காலத்திய, நவீன உதாரணம் ஒன்றைக் கொண்டு, எளிதில் விளங்கும் வண்ணம் முதலில் துவங்குகின்றேன். தற்பொழுது ஆங்

கில வைத்திய முறையில் பல்வேறு மைஸின் (mycine) களும், பெனிசிலினும் பிரசித்தமாக இருந்து வருவது நாம் எல்லோரும் அறிந்ததே. தற்காலத்திய உயிர்காக்கும் சஞ்சீவிகள் என்று அவைகள் கருதப்படுகின்றன. லட்சக்கணக்கான வர் அவற்றை மிக்க நன்றியறிதலோடு போற்று கின்றனர். உயிர்காக்கும் இந்த மருந்துகள் மிகவும் அனுகூலமாக இருந்து நோய்களை குணப்படுத்தி மனிதவர்க்கத்திற்குப் பயனளிப்பதாக இருந்தபோ திலும் அவைகள் எவ்வளவு பயங்கரமானவை, அழிக் கும் வல்லமை படைத்தவை என்பதை நான் எடுத் துக் காட்டுகின்றேன். அவைகள் நமது சரீரத்தி லுள்ள கிருமிகளைத் தாக்கி அவைகளை அழித்து விடுகின்றன. நீங்கள் நோய்வாய்ப் படுகின்றீர்கள். உங்கள் சரீரத்தில் கிருமிகள் நிறைந்து விடுகின்றன; அவைகள் நோய் உண்டாக்குகின்றன. நீங்கள் பெனிசிலின் மருந்தை உபயோகிக்கிறீர்கள். அது உள்ளே சென்று கிருமிகள் அனைத்தையும் நாசம் செய்து விடுகின்றது. இவ்வாறு கிருமிகள் எல்லாம் அழிக்கப்பட்டுவிட்டதும் நோய் நீங்கி நீங்கள் குண மடைகின்றீர்கள். உயிர்காக்கும் இந்த மருந்தை நீங்கள் மிகவும் நாசகாரிணி என்று சொன்னால் அது சரியாகுமா? இவற்றை பயங்கரமானவை, அழிக்கும் சக்தியுடையவை என்பது சரியானால் அன்னை பரா சக்தியாகிய காளியையும் பயங்கரமானவள், எல்லா வற்றையும் அழிப்பவள் என்று கூறுவதும் சரியே.

## காப்பதற்காக அழிக்கிருள்

அவள் இரட்சிப்பதற்காகவே அழிக்கிருள். ஞானத்தைக் கொடுப்பதற்காக அஞ்ஞானத்தையும், தமஸையும் அழிக்கிருள். நாம் ஒளியை உணர்வதற்காக அவள் இருளை அழிக்கிருள். அவள் சகல விதமான துன்பங்கள், கவலைகள், தொல்லைகள், மற்றும் உலகிலுள்ள சகல வேதனைகளையும், இடுக்கண்களையும் அவள் நீக்கி, நமக்கு பேரானந்தம், சந்தோஷம், அமர நிலை ஆகியவற்றைக் கொடுத்தருளுகின்ருள். இவ்வாறு ஜீவர்களை இந்த பயங்கர சம்சாரத்தில் பந்தப்படுத்தி வைத்திருப்பவை அனைத்தையும் அவள் அழிப்பவளாகின்ருள். அவள் பயங்கரப் பொருள்கள் அனைத்தையும் பயங்கரமாக அழித்து நன்மைகளனைத்தையும் நல்குபவளாகின்ருள். இவ்வாறு அன்னையானவள் தனது சொந்த அம்சங்களில் ஒன்றையே அழிப்பவளாகக் கருதப்படுகின்ருள். இது நாம் இச்சா சக்தியின் மூலம் (இச்சா சக்தியும் மனத்தின் ஒரு பகுதியே) நாம் அதே மனத்திலுள்ள சில குறைபாடுகளை நீக்குவதை ஒக்கும். வித்யா மாயா என்கின்ற முறையில் அன்னை தனது அம்சத்தை காளியாகப் பயன்படுத்தி அவித்தையை அழித்து மனம், வாக்கு நிலையைக் கடந்த பிரம்மத்திடம் நம்மை அழைத்துச் செல்கின்ருள்.

இப்படியாக அன்னை காளிதேவி நம்மை மயக்கத்திலிருந்து விடுதலை செய்வதையே கருத்தில் கொண்டிருக்கும் பெருமைக்குரியவளாகின்ருள். இந்த முறையில்தான் அம்பிகை பக்தன் அவளை

காளியாக வணங்குகின்ருன். அவன் அவளைப் பார்த்து "கருணையே வடிவான தாயே! நான் சர்வ வல்லமை படைத்த இந்த மனத்தின் தயவில் இருந்து வருகின்றேன். நான் அகங்காரம், புலன் கள் ஆகியவற்றில் சித்திரவதை செய்யப்படுகின் றேன். நான் ஷட்-ரிபுக்களாலும், வாசனைகள், விருத்திகள், சமஸ்காரங்கள் ஆகிய சேனைகளாலும் அடிமையாக்கப்பட்டிருக்கிறேன். ஆகவே இந்த பயங்கரமான எதிரிகளிடமிருந்து என்னை உன்னுல் தான் காப்பாற்ற முடியும்" என்று கூறுகின்ருன். அவன் இவற்றை எல்லாம் அழிப்பதற்காக அவளு டைய உதவியையும், பலத்தையும் நாடுகின்ருன். அத்தீய சக்திகளோடு போராடி மீண்டுவர இயலாத நிலையில் அவனுக்கு அன்னையின் பலம் கிட்டுகிறது. அவள் கருணை கூர்ந்து அவனுடைய உதவிக்கு வந்து தனது பயங்கர ரூபத்தின் மூலம் அவன் புலன்களை வென்று மனத்தை அடக்கி ஜெயிக்க வழிவகுத்துக் கொடுக்கிருள்.

இந்த ஒன்பது நாட்களும் நாம் பாராயணம் செய்யும் சாஸ்திரமான துர்க்கா சப்த சதியில் அடங் கியிருக்கும் கருத்துக்கள் இவைகள்தான். இதில் பதின்மூன்று அத்தியாயங்கள் இருக்கின்றன. இவற்றில் பக்தர்களுக்காக அன்னை போராடி, அவித்தை, தீமை, மற்றும் பரம்பொருளுக்கு எதிரான எல்லாவற்றையும் அழிப்பதைப்பற்றி வர்ணிக்கப் பட்டுள்ளன. உண்மைக்கு எதிராக இருக்கும் ஒவ் வொரு அம்சத்தையும் இந்த சாஸ்திரத்தில் ஒரு

குறிப்பிட்ட பூதமாக வர்ணிக்கப்பட்டுள்ளது. இது அருமையான உவமையாக உள்ளது. அவித்தையின் அம்சத்திற்கேற்ப இந்த பூதங்களுக்குத்தக்க பெயர்களும், உருவங்களும் கொடுக்கப்பட்டுள்ளன. இந்த பதின்மூன்று அத்தியாயங்களும் அன்னையானவள் எவ்வாறு பல்வேறு ரூபங்களைப் பிரயோகித்து, தீமை, அவித்தை, அறியாமை, மாயை ஆகியவற்றின் சகல அம்சங்களையும் அழிக்கிருள் என்பதை வர்ணிக்கின்றன. முடிவில் ஞான சக்திகளுக்கு மகோன்னத வெற்றி கிடைத்து ஜீவன் சாசுவதமாக அஞ்ஞானத்திலிருந்து விடுவிக்கப்படுகின்ருன்.

இது சாக்தர்கள் அல்லது தேவி வழிபாட்டுக்காரர்களுக்கு மட்டும் உரிய சிறப்பான அம்சமல்ல. இந்த உருவகத்தை உலகிலுள்ள எல்லா மதங்களிலும் நாம் காணலாம். கிருஸ்துவ மதக் கொள்கைகளில் தேவன், சைத்தான் என்று இருப்பதைப் பார்க்கிருேம். சைத்தான் என்பது தெய்வீகத் தன்மைக்கும், தெய்வீக ஒளிக்கும் விரோதியாக இருப்பதைக் குறிக்கிறது. ஜொராஸ்ட்ரிய மதத்தில் அரிமானும், அஹுரா மஸ்டாவும் (Ariman and Ahura Mazda) இருப்பதைக் காண்கிருேம். இதில் அரிமான் என்பது கிறிஸ்துவ மதத்தில் கூறப்படும் சைத்தானைப் போன்றது. பௌத்த மதத்தில் மரன் என்று இருக்கிறது. இதேபோல இந்து மதத்தில் இத் தீய சக்தியை மாயை, அஞ்ஞானம் அல்லது அசுர சக்திகள் என்று அழைக்கிருேம். இது ஒளி, அறிவு, ஞானம், ஆத்மா ஆகியவற்றிற்கு எதிராக

உள்ள சக்திகளைக் குறிக்கிறது. இவைகள் வேதாந்த முறைப்படி அனுத்மா என்று அழைக்கப்படுகின்றன. இவற்றை ஆத்ம ஞானத்தின் மூலம் வெல்லலாம். சப்த சதியாகிய இந்த மாபெரும் சாஸ்திரத்தின் உட்கருத்து இதுவேயாகும். அன்னை தனது அம்ச மாகிய காளியின் வடிவில் தனது புதல்வர்கள் தீமை களினின்றும் மீண்டுவர உதவி புரிகின்றாள்.

## மூன்றுவது இரவு

### சம்ஹாரம்

### சிருஷ்டிக்கு அடிப்படை

எல்லாவிதமான ஆன்மீக நாட்டங்களுக்கும் கடைசி முடிவாகவும் லட்சியமாகவும் விளங்குபவளும் பரப்பிரம்மத்தோடு ஒன்றாக இருப்பவளும் சகல சிருஷ்டிகளுக்கும் பிறப்பிடமும், ஆதாரமும், கடைசி முடிவாகவும் விளங்குபவளுமாகிய அந்த தேவிக்கு மீண்டும் மீண்டும் நமஸ்காரங்கள்.

நேற்று நாம் அன்னை பராசக்தியை துர்கை, பயங்கர ரூபமான காளி என்னும் அம்சங்களில் பார்த்தோம். அவளுடைய புறத்தோற்றம் கோர மாக இருந்தபோதிலும், அவளுடைய சம்ஹார நாட கத்திலே அவள் உண்மையில் எவ்வளவு கருணை யுடையவளாக இருக்கிறாள் என்பதையும், நன்

மையை உண்டாக்க தீமையை அழிப்பதையும், ஏராளமாகக் கொடுப்பதற்காக சிறிதளவு எடுத்துக் கொள்வதையும், கடைசியில் நம் எல்லோருக்கும் தன்னுடைய மஹாஜோதி சொருபத்தைக் காட்டி அருளுவதையும், அறியாமையாகிய காரிருளை நீக்கிய பிறகு நமக்கு ஆத்மஜோதி தரிசனம் தந்தருளுவதையும் கவனித்தோம்.

பார்ப்பதற்கு பயங்கரமாகவும், சம்ஹார சொரூபிணியாகவும் தோற்றமளிக்கும் அன்னையை துர்க்கை என்ற பெயரில் போற்றும் கோட்பாடே எல்லோரும் நன்கு புரிந்துகொள்ள வேண்டிய முக்யத்துவம் வாய்ந்ததாகும். சப்த சதியில் துர்கை என்ற பெயருக்குக் காரணம் என்ன என்பதைப் பற்றி ஒரு சுலோகத்தில் விவரிக்கப்பட்டிருக்கிறது. அதாவது விபத்துக்களிலிருந்தும், ஆபத்துக்கள், துன்பங்கள் ஆகியவற்றிலிருந்தும் அவள் நம்மைக் காப்பதால் அவளுக்குத் துர்க்கை என்று பெயர் என்று கூறப்பட்டுள்ளது. அவள் தனது பக்தர்களுக்கு ஏற்படும் சகலவிதமான துன்பங்கள், ஆபத்துக்கள், துயரங்கள் ஆகியவற்றிலிருந்து அவர்களைக் காப்பதால் அவள் துர்க்காதேவி என்று அழைக்கப் படுகிருள். சர்வத்தையும் அழிக்கவல்ல சக்தி படைத்தவள் என்கின்ற இந்த விசித்திரமான அம்சத்தில் அவள் விரும்பத்தகாதனவற்றை எல்லாம் அழிக்கிருள் என்று மறைமுகமான விளக்கமும் கொடுக்க முடிவதோடு அல்லாமல் இது உலக அனுபவத்தை அடிப்படையாகக் கொண்டதாகவும் இருக்கிறது.

## வாழ்வில் அழிவு அடங்கியிருக்கிறது

இந்த உலகம் முழுவதும் மனித வாழ்க்கையும் அழிவு கலந்து ஊடுருவி இருப்பதை நாம் காண் கிறோம். அழிவு இன்றேல் வாழ்வு இல்லை. அழிவு முடிவில் தொடர்ந்தாற்போன்ற ஆக்க வேலையின் ஒரு அம்சமாகவே ஆகிவிடுகிறது. இந்த அழிவுத் தத்துவத்தை மனிதனுடைய அன்றாட வாழ்க்கையி லிருந்தே நன்கு உணரலாம். "அன்னகத: பிராண:" என்பது ஸ்தூல சரீரத்தை ஆதாரமாகக்கொண்டு நடக்கும் மனித வாழ்க்கையைக் குறிக்கிறது. இந்த அன்னம் அல்லது உணவை நிறுத்திவிட்டால் மனிதனுடைய சரீரம் நிலைக்காது. இந்த சரீரம் போஷிக்கப்படுவதையும், ஜீவித்திருப்பதையும் பற்றி நாம் இப்பொழுது கவனிப்போம். ஆகாரத்தை உண்டாக்கும் முறையே ஒரு தொடர்ச்சியான அழிவு வேலையை அடிப்படையாகக் கொண்டது. முதன் முதலில் நாம் உணவு தானியத்தைப் பயிர் செய்ய வேண்டுமென்று சொன்னால் பூமியில் விளைந்துள்ள செடி, கொடி, புல், பூண்டு, முள் முதலியவற்றை அழிக்கிறோம். பிறகு நிலத்தைப் பிளந்து கலப்பை முதலிய கருவிகளை அதனுள் செலுத்துகின்றோம். ஒருவகையில் இம்முறையினால் பூமியைக் காயப்படுத் கின்றோம். பிறகு விதை விதைக்கிறோம். அந்த விதை செடியாக வளரவேண்டி இறக்க வேண்டி யிருக்கிறது. இந்த அழிவு முறை தானியம் விளை யும்வரை தொடர்ந்து நடைபெற்றுக் கொண்டே இருக்கிறது. நாம் அதிலுள்ள உமியை நீக்கிப் புடைக்க வேண்டியிருக்கிறது. அதனால் அதனுடைய

மேல்தோல் அழிந்து விடுகிறது. அதன் பிறகு நமக்கு அதிலுள்ள தானியமணி கிடைக்கிறது. அதை உணவாக சமைக்கவேண்டுமானால் நாம் கொடூரமான கோடாரியைக் கொண்டு மரங்களை வெட்டி வீழ்த்திப் பிளந்து விறகாக்கி அதைப் பயன்படுத்த வேண்டி இருக்கிறது. இந்த விறகும் தீயில் எரிந்து தன்னைச் சாம்பலாக்கிக் கொள்கிறது. இவ்வாறு விறகு தன்னை அழித்துக் கொள்வதன் மூலம் ஆகாரம் சமைக்கப்படுகிறது. இலையில் வைத்த ஆகாரத்தை மனிதன் அழிக்கின்றான். உணவின் உருவம்' அமைப்பு, தன்மை முதலியவை அழிக்கப்பட்டு விடுகின்றன. அந்த உணவு அவனுடைய உடலில் கலந்து சக்தியாக மாறும்வரையில் தொடர்ச்சியான அழிவு வேலை நடந்து கொண்டிருக்கிறது. இது மாதிரிக்காகக் கொடுக்கப்பட்ட ஒரே ஒரு உதாரணம். இதேபோல் பூமியில் மானிட வாழ்வின் எந்தப் பகுதியை எடுத்துப் பார்த்தாலும் அழிவு வேலை தொடர்ந்து நடைபெறுவதை நன்கு கவனிக்கலாம். உண்டாக்கப்படுவது எதுவாக இருந்தாலும் அது தொடர்ச்சியான அழிவு வேலைகளை ஆதாரமாகக் கொண்டதாகத்தான் இருக்கும். அதையெல்லாம் சேர்த்துப் பார்க்கும்பொழுது கடைசியில் நாம் விரும்பிய ஆக்க வேலையை உண்டாக்கியதாகத் தோன்றும்.

பெரும் அளவில் பார்க்கும்பொழுதுகூட இவ்வுலகில் ஜீவித்திருப்பதற்கே இம்முறை தவிர்க்க முடியாதிருப்பதை நாம் காண்கிறோம். இறந்த பிறகு இந்த மானிட சரீரம் அழிய வேண்டிய ஒரு

நியதி இல்லையெனில் ஜனப்பெருக்கம் அதிகமாகிக் கொண்டிருக்கும் இவ்வுலகில் ஒரு காலத்தில் மக்கள் குடியிருக்கப் போதுமான இடமும், உண்பதற்குப் போதிய உணவுப் பொருளும் இல்லாமல் போய் விடும் என்கின்ற பயங்கரமான பிரச்னையை நம் முன்னே வைக்க ஒரு மால்தஸ் (Malthus ஒரு அறிஞரின் பெயர்) தேவையில்லை. ஜனப்பெருக்கம் ஒரு பயங்கரமான பிசாசு போன்றது. இது சாதாரண குடிமகனுக்குத் தெரியாது. சர்வதேச நோக்கோடு பார்க்கும் பொருளாதார நிபுணருக்கும், அரசியல் வாதிக்கும் ஜனப்பெருக்கம் ஒரு தீராத தொல்லையாகத் தோன்றும். மரணத்தின் மூலமாகவும், ஸ்தூல சரீரத்தை அழிப்பதன் மூலமாகவும் அன்னையின் இந்த அழிக்கும் சக்தியானது ஜனப்பெருக்கத்தைத் தடுத்து நிறுத்தி மனிதவர்க்கத்தைக் காப்பாற்றி வருகிறது. இதையும் மீறி மனிதனுல் வாழ்க்கையின் அத்தியாவசியமான அளவு உற்பத்தி செய்ய இயலாத நிலை ஏற்பட்டுவிட்டால் அப்பொழுது மனிதனை நடுங்க வைக்கின்ற ஒரு சந்தர்ப்பம், பொருளாதார நிபுணரையும் அரசியல் வாதியையும் திகைக்கவைக்கக் கூடிய ஒரு சந்தர்ப்பம் ஏற்படும். இங்கு மீண்டும் கருணையே வடிவான அன்னையின் அழிக்கும் அம்சமானது அன்புடன் பிரவேசிக்கிறது. இந்த ஜனப்பெருக்கத் தொல்லையை சமாளிக்கும் வகை யறியாது மனிதன் தடுமாறிக் கொண்டிருப்பான். அப்பொழுது அன்னை பராசக்தி பூகம்பமாகவும், யுத்தமாகவும், பெரிய அளவில் பஞ்சமாகவும்,

வெள்ளமாகவும், கொள்ளை நோயாகவும் தோன்றி நிலைமையைக் காப்பாற்றி விடுவாள். இது உலக அம்சத்தில் நடக்கிறது.

ஆகவே, மானிட வாழ்வின் எல்லா முறைகளும், ஒவ்வொன்றையும் தனித்தனியே எடுத்துப் பார்க்கும்போது அது மாபெரும் நிர்மாண வேலையாக இருந்தாலும் கூட அது முடிவில் தொடர்ச்சியான, தவிர்க்க முடியாத அழிவு முறைகளில் போய் முடிவடைவதைக் காணலாம். அழிவு என்பது மனிதனுடைய திருஷ்டி கோணத்தை வைத்து இங்கே சொல்லப்படுகிறது. அழிவு என்பது ஒரு சாதாரண மனத்திற்கு, இருப்பதை நீக்கிவிடுதல் அல்லது இல்லாது செய்துவிடுதல் என்ற பொருள் படத்தான் விளங்கும். ஒரு ரூபத்தில் இல்லாததாகி வேறொரு ரூபத்தில் விருத்தி அடைவதுதான் சர்வ சம்ஹாரிணி அம்சமாக விளங்கும் துர்க்கை அல்லது காளிமாதாவின் தத்துவமாகும். இந்த அழிவு தத்துவம்தான் கடைசியில் மனம், வாக்கைக் கடந்த தத்துவமாகக் காணப்படுகிறது. நாம் உயர்நிலையை அடைய வேண்டுமானால் கீழ் நிலையை கடந்தாகவேண்டும். சூஷ்மத்தை வெளிப்படுத்துவதற்குப் போதுமான வாய்ப்பளிப்பதற்காகவே ஸ்தூலத்தை அழிக்கும் இம்முறை ஏற்பட்டிருக்கிறது. ஒளி உள்ளே வர வேண்டுமானால் நாம் இருளை அகற்றவேண்டும். நாம் தூய்மையை அடைய வேண்டுமானால் தூய்மையற்ற நிலையைக் கடக்க வேண்டும். பூரணத்துவம் அடைய வேண்டுமானால் பூர்ணமற்ற நிலை அழிக்கப்

படுகிறது. பெரிய அளவிற்கு இடம் கொடுக்க வேண்டுமானல் சிறிய அளவில் இருப்பது அழிக்கப் படுகிறது.

## அழிவல்ல, ஆனுல் அற்புதம்

ஆன்மீக மட்டத்தில் ஏற்படும் அழிவானது முடிவில் ஒரு அற்புத தோற்றமாக வெளிப்படுகிறது. அதில் தொடர்ச்சியான அழிவு வேலைகள் கீழான நிலையில் ஏற்பட்டு அதன் மூலம் தொடர்ந்தாற் போன்ற முன்னேற்ற ஆக்கவேலை நடைபெறுகிறது. அதனுல் தன்னை விட உயர்ந்ததொரு ஆக்க வேலைக்கு அது இடங்கொடுத்துவிட்டுச் செல்கிறது. இவ்வாறு ஒன்றையொன்று கடந்து செல்லும் இம் முறையானது விரும்பத்தக்கதேயல்லாமல் தவிர்க்கக் கூடியதல்ல. ஏனெனில் கீழ்நிலையை நாம் எவ்வளவு காலம் பற்றிக் கொண்டிருக்கிருேமோ, கீழ் நிலை நம்மை விட்டு அகல நாம் எவ்வளவு காலம் இடங் கொடாமல் இருக்கிருேமோ அதுவரை நம்மால் மேல் நிலையை அடைய முடியாது. இந்நிலையில்தான் தெய்வீக சக்தி அழிக்கும் அம்சத்தில் குறுக்கிட்டு நாம் உயர்நிலை எய்தும்படிச் செய்கிறது. இன்று நாம் குறிப்பாக ·யோகம், சாதனை ஆகியவற்றில் துர்க்கை அல்லது கருணையே வடிவான காளியின் அம்சம் எவ்வாறு வேலை செய்கிறது என்பதை விசேஷமாகக் கவனிக்க வேண்டியவர்களாயிருக்கிருேம். ஆகவே அன்னையானவள் தனிப்பட்ட சாதகனு டைய வியக்தியில் எவ்வாறு வெளிப்படுகிருள். சாத

கன் எவ்வாறு தனக்குள் அந்த அன்னை பரா சக்தியை தோன்றும்படிச் செய்வது, அவனுடைய யோக சாதனத்தின் முன்னேற்றத்திற்கு அவள் உறுதுணையாக இருப்பதற்கு என்ன செய்வது என்பதைப் பற்றியும் நாம் இப்பொழுது கவனிப்போமாக. இதைப்பற்றி சிந்திக்கு முன்னர் யோகசாதனம் என்பதில் என்ன அடங்கியிருக்கிறது என்பதைப் பற்றித் தெரிந்துகொள்வது பயனுடையதாயிருக்கும்.

யோக சாதனம் என்பது மனிதன் தன்னிடமுள்ள கீழ்நிலை, வரம்புக்குட்பட்ட நிலை, குறைபாடுகள், பலஹீனங்கள், மாசுகள் முதலியவற்றைக் கடந்து எல்லையோடு கூடிய, வரம்புக்குட்பட்ட, மனிதத் தன்மையைத் தாண்டி, மேல் நோக்கிச் சென்று எல்லையில்லாத, நிரந்தரமான, தெய்வீக உணர்வை அடைவதற்காகச் செய்யும் முயற்சியேயாகும். யோக மார்க்கத்தில் இதைச் செய்யப் புகு முன்னர் மனிதனுக்கு ஒரு விசித்திரமான சந்தர்ப்பம் அல்லது பிரச்னை ஏற்படுகின்றது. மனிதத் தன்மையிலிருந்து ஒருபடி தாண்டிவிட்டால் தெய்வீகத் தன்மையை அடைந்துவிட முடிவதில்லை; ஏனெனில், இந்த சாதனையைத் துவக்கியதும் அவன் தனது மனிதத் தன்மையில், மனித தன்மைக்குக் கீழ்பட்ட குணங்கள் மலிந்து கிடப்பதைக் காண்கிருன். ஹிந்து மதத்திற்கே விசேஷமாக உரிய வகையில் இது சிறப்பாக விவரிக்கப்பட்டிருக்கிறது. ஜீவன் கல்லாகிப், புல்லாகி, பூடாகி, மரமாகி, பறவையாகிப்,

பாம்பாகி, பல்வகை மிருகமாகி இதுபோன்ற எண்ணற்ற கீழான பிறவி எடுத்த பிறகே மனிதப் பிறவி எடுக்கிறுன் என்பது மறு பிறப்புக் கோட்பாடு. இம் மாதிரி பல்வேறு கீழ்ப் பிறவிகளைக் கடந்து வரும் பொழுது ஜீவனிடம் அந்தந்தப் பிறவியினுடைய பிரதானமான சமஸ்காரம் பதிந்து விடுகிறது. ஆகவே அவன் மனித நிலையை அடையும்பொழுது அவனிடம் மனிதத் தன்மையைச் சார்ந்த அறிவு, சிந்தனு சக்தி, விவேகம் முதலிய குணங்களோடுகூட இதற்கு முன்பெடுத்த பிறவிகள் அத்தனையிலும் பெற்றிருக்கும் கீழான குணங்களையும் உடையவனுயிருக்கின்றுன். ஆகவே அவனிடம் மனிதத் தன்மைக்கு ஒவ்வாததும், குறிப்பிட்ட ஒரு சில பிராணிகளிடத்தில் காணப்படுவதுமாகிய குணங்களை காண்கிறேம். உதாரணமாக நரியின் தந்திரம், புலியின் கொடூரம், தேளின் விஷத் தன்மை, கீழ்த்தர ஜந்துக்களின் மந்த குணம், பன்றியின் தீராப் பசிபோன்ற குணங்கள் அவனிடம் இருப்பதைப் பார்க்கிறேம். அவன் மிருக நிலையைக் கடந்து வந்துவிட்ட போதிலும் அவற்றினுடைய குணங்கள் இவனை விட்டு அகலாது மனிதத் தன்மையின் ஒரு அம்சமாகக் கலந்து இருக்கிறது. இவ்வாறு மனிதன் விவேகம், அறிவு, சிந்தனு சக்தி முதலிய உயர் குணங்களோடு கூடிய மிருகமாகத்தான் இருக்கிறுன். ஆகவே, மனித ஜன்மம் மூன்று அம்சங்கள் ஒன்றுக உள்ள ஒரு கலப்பட ஜன்மமாகும். அவன் மிருக லோகத்திற்கும், தெய்வ லோகத்திற்கும் இடைப்பட்ட நிலையில் (பூலோகத்தில்) இருக்கிறுன். அவனிடம் ஒரு பக்கத்தில் மிரு

கத் தன்மையும், மற்றொரு புறத்தில் தெய்வத் தன்மையும் இருக்கின்றன. இந்த இரண்டு தன்மைகளுக்குமிடையில் இருக்கும் அவனை சில சமயங்களில் சோம்பல், காமம், கொடுமை, கோபம் போன்ற மிருகத் தன்மைகள் ஆட்கொண்டு விடுகின்றன. அபூர்வமான சில சந்தர்ப்பங்களில் கருணை, நீதி, சத்தியம், தூய்மை போன்ற தெய்வீகத் தன்மைகள் அவனிடமிருந்து தோன்றுகின்றன.

### உங்களிடமுள்ள மிருகத் தன்மையைத் தியாகம் செய்க

தன்னிடமுள்ள கீழான மிருகத்தன்மைகள் அனைத்தையும் முற்றிலும் ஒழிப்பதே சாதகனுடைய முதலானதும் முக்கியமானதுமான வேலை. இந்தக் குணங்களை அவன் தனது சுபாவத்திலிருந்து களைந்து நீக்கிவிட வேண்டும். அதன் பிறகுதான் மனிதத் தன்மையை உயர்த்தித் தெய்வீகத் தன்மையாக மாற்றும் முறையை கைக்கொள்ள முயற்சிக்க வேண்டும். கீழான மிருகக் குணமும், விவேகம், உயர்ந்த லட்சிய உணர்வு, மனிதப் பிறவி எடுத்த தன் உன்னதமான தெய்வீக நோக்கம் முதலிய பண்புகளடங்கிய மனிதகுணம், பிரத்தியட்சமாக தெய்வீக நிலைக்கு உயரக்கூடிய வல்லமை ஆகிய இப்பண்புகள் எல்லாம் ஒன்றாகக் கலந்திருக்கும் இந்த மனிதத் தன்மையினுடைய ஆராய்ச்சிதான் கடைசியில் மிருகப் பலியும், நர பலியும் காளிக்கு உண்மையிலேயே கொடுக்கக்கூடிய கேவல நிலையை

அடைந்துவிட்டது. மனிதனுடைய ஆன்மீக வாழ்வில் அகத்தூய்மை பெறுவதற்காக எது ஒரு சமயத்தில் எடுத்துக்காட்டான ஒரு கோட்பாடாக இருந்ததோ அதுவே பிற்காலத்தில் புறச்சடங்காக்கப்பட்டு மிருகங்களை பலியிடுகின்ற தாழ்ந்த நிலைக்கு வந்துவிட்டது. காளிக்கு மிருகப்பலி கொடுத்தல் என்பது சாதகன் தன்னுள்ளே அன்னையின் அழிக்கும் சக்தியாகிய துர்க்கை அல்லது காளியை ஆவாஹனம் செய்து அதன்மூலம் தன்னுள்ளே இருக்கும் மிருகத் தன்மைகளை எல்லாம் அழிக்கும்படி வேண்டிக் கொள்வதையே குறிக்கும். ஒரு சாதகனுடைய ஆரம்பப் படிகளில் விலங்குத் தன்மையை நீக்கி, கீழான பண்பை தியாகம் செய்யும்படிச் செய்து அருள்பாலிக்கும் வேலையைத்தான் துர்க்கை அல்லது காளி மாதா செய்கின்றாள்.

இதை லட்சியமாக வைத்துக்கொண்டு சாதகன் தன்னிடமுள்ள கீழான குணங்கள் யாவை என்பதைப் பகுத்துப் பார்த்து அறியவேண்டியது முதல் வேலையாகும். ஒருவன் மற்றெல்லா தீய குணங்களையும்விட கோபத்திற்கு அடிமையாக இருக்கக்கூடும். மற்றொருவன் காமத்திற்கும், மிருக இச்சைக்கும், வேறொருவன் மற்றொரு தீய குணத்திற்கும் அடிமையாக இருக்கக்கூடும். ஒருவன் தன்னிடம் இதுமாதிரியான பல தீய குணங்கள் ஒன்று சேர்ந்து தன்னை அடிமையாக்கி வைத்திருப்பதைக் காணலாம். பல்வேறு சமயங்களில் பல்வேறு விதமான காமாதி வாஸனைகள் தலைதூக்கப்பார்க்கும்.

ஆகவே சாதகன் தன்னிடத்தே எந்த மாதிரியான கீழ்த்தரமான குணங்கள் தோன்றியிருக்கின்றன என்பதை தனக்குத்தானே ஆராய்ந்து கண்டு பிடிக்கவேண்டும். மனப்பூர்வமாக தன்னைச் சோதித்துக் கொள்ள வேண்டியது சாதகன் ஒருவனுக்கு இன்றியமையாதது. தன்னிடம் விரும்பத் தகாததும், யோகத்தின் வெற்றிக்கு எதிராக இருப்பதும் சாதனைக்கு இடையூறாக என்னென்ன இருக்கின்றன என்பதை அவன் அறியாதிருக்கும்வரை உள்முக மார்க்கமாகிய இந்த யோக வழியில் அவனால் சரியாக முன்னேற முடியாது. இது மிகவும் சிரமமான காரியமாக இருப்பதற்குக் காரணம் மனிதனுடைய ஸ்தூலப் பகுதியின் குறை நிறைந்த அம்சங்கள். தமோகுண அம்சங்கள் எப்பொழுதும் தன்னுள்ளே தெளிவாகத் தோன்றுவது கிடையாது. வெளியிலுள்ள எதிரிகளோடு போராடுவது எளிது. ஏனெனில் அவர்களுடைய தன்மை, பலம் முதலியவை உங்களுக்குத் தெரிந்திருப்பதால் அதற்கேற்ப நீங்கள் ஆயத்தமாகச் செல்லலாம். ஆனால் மனிதனுடைய உள் எதிரிகளான கோபம், காமம், பொறாமை, வெறுப்பு, கொடூரம் முதலியவைகள் பல்வேறு உருவங் கொண்டவை; கண்ணுக்குப் புலப்படாதவை. அவைகள் பல்வேறு மாறு வேடங்களில் ஒளித்து வைக்கப்பட்டுள்ளன. தனக்குள்ளே அந்தர்யாமியாக விளங்கும் பரம்பொருளின் உதவியில்லாமல் இந்தக் கீழான, சுயநலமான, அகங்கார குணத்தை அழிக்கும் முறையில் முன்னுக்குச் செல்வது கடினம். மற்றொரு மனிதனுடைய தன்மையை ஆராய்வது

எளிது. ஏனெனில் உங்களால் புறத்தே அவனுடைய நடத்தை முதலியவற்றை நன்கு கவனிக்க முடிகிறது; ஆனால் தன்னைத்தான் ஆராய்ந்து கொள்வது கடினமான காரியம். முதலில் மனிதனுடைய மனம் புறத்தே உலகப் பொருள்களை நாடிச் செல்லும் தன்மை வாய்ந்தது. அதை உள் முகமாகத் திருப்பி விடுவதே கடினமான காரியம். இரண்டாவதாக, தன்னிடம் உள்ள குற்றம் குறைகளைக் காணுவதை அஹங்காரம் தடை செய்துவிடுகிறது. ஏனெனில் அது அந்த அஹங்காரத்திற்குத் திருப்தி யளிப்பதில்லை. அஹங்காரத்திற்குப் பிடிக்காதது எதுவோ அது அதனுடைய பார்வையில் படாமல் இருப்பது சகஜமான அனுபவமாகும். ஆகவே தற்சோதனை செய்வது கடினமாக இருக்கிறது. இந்தக் காரணத்தினால் தான் கீழ்நாட்டு ஆன்மீக வாழ்க்கை முறையில் சாதகன் ஒரு குருவிடம் தன்னை ஒப்படைத்து விடவேண்டுமென்று விதிக்கப்பட்டுள்ளது. அவன் குருவை அணுகி, தன்னை அவரிடம் அர்ப்பணித்து, அவருடனேயே இருக்க முயற்சிக்கின்றான். அதனால் தன்னுடைய சொந்த முயற்சியால் கண்டு பிடிக்க முடியாத குற்றம் குறைகளை குருவானவர் எளிதில் கண்டுபிடித்து அவற்றை நீக்குவதற்குரிய சூழ்நிலையில் வைத்திருப்பார். அவர் சில வேளைகளில் இந்த குணங்களை அவசியம் நீக்கியே தீரவேண்டிய முறையில் சில காரியங்களைச் செய்யும்படி அவனுக்கு கட்டளையிடுவார். அவசியப்படும் பொழுது சீடனைக் கண்டிக்கவும் செய்வார். அதனால் சீடனுக்குத் தெரியாமலிருப்பதும் ஆனால் குருவுக்குத் தெளிவாகத்

தெரிவதுமாகிய குறைகள் நீங்க ஏதுவாக இருக்கிறது. இவ்வாருக ஒருவனுடைய ஆன்மீக வாழ்வின் ஆரம்பப் படிகளில் தடைகளாக இருப்பனவாகிய தீய குணங்களை ஒழிப்பதில் குருவானவரும் அன்னை காளியின் பாகத்தைப் பெருமளவில் வகிக்கிருர்.

## ஆன்மீக சாதனையில் துர்க்கையின் தோற்றம்

இவ்வாருகத் துர்க்கைத் தாயானவள் குரு ரூபத்தின் மூலமாகவும், சாதகனிடத்தில் ஏற்படுகின்ற உயர்ந்த முமுக்ஷுத்துவம் மூலமாகவும், தற்சோதனை வடிவிலும் தோன்றுகின்ருள். இம் மாதிரியான தற்சோதனையின் மூலம் சாதகனுக்குத் தன்னிடமுள்ள மிருகப் பண்புகளை பூரணமாக வெளிப்படுத்திக் காட்டினல், அப்பொழுது அவன் இவற்றைக் நீக்கியருளும்படி அம்பிகையிடம் திடமாகவும் தீவிரமாகவும் பிரார்த்திக்க வேண்டும். ஒருவன் யோக மார்க்கத்தில் முன்னேறுவதற்கு அம்பிகையின் இந்த அம்சம் அத்யாவசியமானது. குற்றங்கள் தன்னிடம் இருப்பதே தெரியாமலிருப்பது முதல் தடையாகும். அதன் பிறகு குற்றங்கள் இருப்பதை உணர்ந்தும் அவற்றைக் களைவதற்கு ஆவன செய்யாது இருந்தாலும் நாம் முன்னேற முடியாது. அதற்கு அடுத்தபடி நம்மிடமுள்ள குறைகளை எப்படியும் நீக்கியே தீருவது என்ற திடமான உறுதிப்பாட்டுடன் இருப்பது. இந்த உறுதி ஏற்பட்டுவிட்டால் அம்பிகை திடமான இச்சா சக்தியாகத் தோன்றி சாதகன் தனது மிருகத்தன்மைகளை வெற்றி கொள்வதற்கு உதவியாக இருக்கிருள்.

அடுத்தபடியாக அம்பிகை சக்தி பொருந்திய இச்சையாகத் தோன்ற வேண்டியுள்ளது. இந்த இச்சா சக்தி பிறகு கிரியா சக்தியாக, சாதகனிடத்தில் சாதனு சக்தியாக மாற்றப்பட வேண்டியிருக்கிறது. அதனுல் நாளாக ஆக அவன் அன்ருட வாழ்க்கையில், தனது செய்கைகளிலும், மற்றவர்களோடு பழகும்பொழுதும், எண்ணம், நோக்கம், பாவனை முதலியவற்றில் உள்ள தீய சக்திகளோடு எதிர்த்துப் போராட ஆரம்பிக்கின்ருன். இது அன்னையின் சாதனு சக்தி அம்சத்தால் செய்யப்படுகிறது. இவ்வாறு சாதனையைச் செய்து வரவேண்டும். இதை வெற்றிகரமாக முடிப்பதற்கு அவன் அன்னையின் சாதனு சக்தியை யோகத்தின் பல்வேறு முறைகளின் மூலம் உற்பத்தி செய்யவேண்டும். அவன் சில கீழ்த் தரமான வாஸனைகளுக்கு இரையாகியிருந்தால், அவற்றை தபஸ்சர்யம், விரதம், மறுப்பு ஆகியவற்றின் மூலம் முற்றிலும் இல்லாதொழித்துவிட வேண்டும்.

சில ஆசைகளை அடக்குவதனுல் அவை மனிதனைக் கீழ்நிலையில் தள்ளிவிடும் என்று கூறக் கூடும். அனுகூலமான சந்தர்ப்பங்களில் தூண்டுதல் வடிவில் அவைகள் மனிதனை ஆட்கொண்டு விடக்கூடும் என்றும் சொல்லக்கூடும். இங்கு ஒரு பெரிய உண்மையை எடுத்துச் சொல்லவேண்டியிருக்கிறது. கீழ்த்தரமான பசிக்குத் தீனிபோட்டு அவற்றை அடக்கிவிடலாம் என்பது இவ்வுலகத்தில் நடக்கக்கூடிய காரியமன்று. ஏனெனில் இந்

திரிய சுகங்கள் அனைத்தும் கொழுந்து விட்டெரியும் தீச்சுடருக்குச் சமமானவை. அவற்றைத் திருப்தி செய்வது என்று சொன்னால் அதில் மேலும் நெய்யை வார்ப்பதற்கு ஒப்பாகும். அது மேலும் சுடர்விட்டு எரிவதற்கு நாம் உணவு கொடுத்ததைப் போலாகும். எரியும் நெருப்பில் நெய்யை மேலும் மேலும் ஊற்றிக் கொண்டிருந்தால் அது மேற்கொண்டும் பலம் பெற்று பயங்கர வடிவைத்தான் எடுக்கும். ஆனால் அதற்கு மாருக புலன் வேட்கையாகிய அக்னிக்குக் கொடுக்கும் இறையைக் கொடுக்காமல் நிறுத்திவிட்டால் அது தானுக அணைந்துவிடும். ஆகவே தபஸ்சர்யம் என்பது சாதகனிடத்தே தோன்றுகின்ற அன்னையின் மற்றொரு தோற்றமாகும்.

தபஸ்சரியத்தின் கடுமையைத் தாங்கிக் கொள்வதற்கு சகிப்புத் தன்மையாகிய திதிக்ஷா சக்தியை சாதகன் விருத்தி செய்து கொள்ள வேண்டும். இது மனிதனின் கீழான தன்மைக்கு மிகவும் வெறுப்பாகவும், கஷ்டமானதாகவும், விருப்பமற்றதாகவும் இருக்கும். திதிக்ஷையில் பலவகை உண்டு. உண்ணுவிரதம், தூக்கம் விழித்தல் முதலியவை ஒரு வகை. உப்பில்லாது சாப்பிடுதல், சர்க்கரை இல்லாது தேனீர் குடித்தல், கால்களுக்கு பாதரக்ஷை அணியாது இருத்தல் முதலியன போன்ற மனதிற்கு மிகவும் பிடித்த பொருள்களை சிலகாலம் விட்டுவிடுதல் தன்னலமறுப்பைச்சார்ந்த மற்றொரு வகையாகும். மனத்தைச் சில வேளைகளில் கீழ் நிலைக்கு இழுத்துச் செல்லும் சுபாவத்தை அடக்கவும்,

பொருள் உலக நாட்டத்திற்கு இழுத்துச் செல்லும் இந்திரிய வேட்கைகளைக் கட்டுப்படுத்தவும் சில முறையான சாதனைகளை புத்திசாலித்தனமாக வகுத்துக்கொண்டு அந்தத் திட்டப்படி ஒவ்வொரு சாதனையையும் கடந்து வருதல் வேண்டும். சாதகனிடத்தில் வெளிப்படுகின்ற அம்பிகையின் இத் தோற்றங்கள் எல்லாம் சேர்ந்துதான் அவனை ஆன்மீக வாழ்விலும் சாதனையிலும் முதல் படியைக் கடக்கச் செய்து அவனிடமுள்ள தாழ்ந்த குணத்தை வெற்றி கொள்ளும் படிச் செய்கின்றன.

இவ்வாறு நமக்குள்ளேயிருக்கும் தெய்வீக சக்தியை எழுப்பி, தீமையை அழிக்க வல்லதும், அறியாமை இருளை அகற்றக் கூடியதும், தமஸைத்தாண்டக் கூடியதுமான அதனுடைய அம்சத்தின் மூலம் நம்மிடமுள்ள மிருக குணத்தை பலி கொடுக்கின்றோம். இதுதான் சாதகனுடைய ஆன்மீக வாழ்வில் அன்னை காளியை வழிபடுவதன் முக்கியத்துவமும் பொருளுமாகும்.

சாதகனுடைய வாழ்க்கையில் அம்பிகையானவள் துர்க்கை என்னும் அம்சத்தில் தோன்றுகின்ற வகை முழுவதையும் எடுத்துரைக்க யாராலும் இயலாது. இது அவரவர் தனக்குத் தானே சிந்தித்து வகுத்துக் கொள்ளவேண்டிய முறை. ஈவிரக்கமற்ற தற்சோதனை, இந்த தீர்மானத்தை வெளிப்படுத்திக் காட்ட சக்தி பொருந்திய தீவிர முயற்சி, தபஸ், திதிக்ஷை தன்னல மறுப்பு, உபவாசம், மற்றும் யோக சாதனத்தின் பல்வேறு அம்சங்கள் ஆகிய

வற்றின் மூலம் அம்பிகையை வெளிப்படுத்திக் காட்ட வேண்டுமென்று இந்த அளவில் பொதுவாக வேண்டுமானுல் கூறலாம்.

## சப்தசதி புகட்டும் பாடம்

அடுத்தபடியாக, நாம் தெய்வீக உணர்வை அடைய வேண்டுமானுல், அகந்தையும், குறைபாடுகளும் நிறைந்த மனிதத் தன்மையையும் கடக்க வேண்டும். சாதகனுடைய இந்த மனிதத் தன்மை மனிதத்தன்மையையும் தாண்ட வேண்டுமென்பதையே மனித பலி அல்லது நரபலி என்பது குறிக்கிறது. சப்தசதியில் வரிசைப் படுத்திக் கூறப்பட்டிருக்கும் மூன்று அம்சங்களான மதுகைடபவதம், மஹிஷாசுர மர்த்தனம், அதன் பிறகு சும்பன், நிசும்பன் மற்றும் அவர்களேச் சேர்ந்த எண்ணற்ற அரக்கர்களே அழித்தல் ஆகியவை சாதனேயின் பல்வேறு படிகளேயே குறிக்கின்றன. மதுவும், கைடபனும் மனிதனுடைய கீழ் நிலேயின் ஸ்தூல வடிவத்தைக் குறிக்கின்றன. மஹிஷாசுரன் அடுத்தபடியாக இருக்கும் ரஜோகுண அம்சத்தை அழிப்பதைக் குறிக்கிறது. அடுத்த படிக்கு வரும்பொழுது அந்த அசுரன் ராக்ஷஸர்களில் மிகவும் பண்பட்டிருப்பதைக் காண்கிருேம். அவன் ஒரு அரசன். மிகுந்த செல்வம் படைத்தவன். நல்ல பண்பாடு உடையவன். ஆனுல் அதிகர்வம் பிடித்தவன். அவன் தேவர்கள் அனே வரையும், சகல ஐசுவரியங்களேயும் தன்னுடைய ஆதிக்கத்துக்குட்படுத்தி வைத்திருந்தான். பதினுன்கு உலகங்களிலும் சிறந்த பொருள்கள் அனேத்

தும் அந்த தீர அசுர சகோதரர்கள் இருவரிடமே இருந்தன. அவர்களிடம் ஏராளமான சேனைகளும் வீரர்களும் இருந்தனர். அந்த வீரர்களில் ஒருவன் ரக்தபீஜன் என்னும் ராக்ஷஸன். அவனிடம் மானிட அகங்காரம் நிறைந்திருந்தது. இந்த கீழ் நிலையிலுள்ள அகங்காரமாகிய ரக்தபீஜனை அழித்த பிறகு தான் சும்ப, நிசும்பர்களைக் கடைசியாக அழிக்க முடிந்தது. அது விக்ஷேப, ஆவரண சக்திகளை அழிப்பதைக் குறிக்கிறது. இதுதான் மனிதனுக்கும் தெய்வத்திற்கும் இடையேயுள்ள கடைசி தடை. இத்தடை நீங்கியதும் அன்னையின் கருணையினல் பிரம்மஐக்ய அனுபவம் ஏற்பட்டு சாதகனுடைய ஆன்மீக வாழ்க்கை முற்றுப் பெறுகிறது.

# நான்காவது இரவு

## லக்ஷ்மி

### பரம ரக்ஷகி

எல்லோருக்கும் முடிவான இடமாக விளங்கும் அந்த ஆதார சக்திக்கு நமஸ்காரங்கள்! சரஸ்வதி அம்சத்தில் தோன்றியிருக்கும் பரம்பொருளின் அந்தப் பரம சக்திக்கு வணக்கங்கள்! மஹாலக்ஷ்மியாகவும், துர்க்கையாகவும் தோற்றமளிக்கும் அந்த மூலசக்திக்கு வந்தனங்கள்!

பரம்பொருளை அன்னை வடிவில் வழிபடுகின்ற நன்னாளில் இன்று நான்காவது நாள். இன்று முதல் பரம சக்தியாகிய அன்னையின் போஷித்து ரக்ஷிக்கும் அம்சத்தை வழிபடுவதாகிய முக்கியத்துவம் வாய்ந்த அடுத்த கட்டத்திற்குள் நுழைகிறோம். இன்று முதல் மூன்று நாட்களுக்கு இந்தியா முழுவதும் அன்னையை மஹாலக்ஷ்மியாக வழிபடுவார்கள். கடைசி மூன்று நாட்களும் அவளை மஹாசரஸ்வதியின் அம்சத்தில் வழிபட்டு பத்தாவது நாளாகிய விஜய தசமியன்று முடிவடையும்.

### வஸ்துவில் ஆன்மாவின் ஒடுக்கம்.

நாம் இந்த நவராத்ரி, பூஜாமுறையில் துர்க்கை, லக்ஷ்மி, சரஸ்வதி என்கின்ற வரிசைக் கிரமத்தில் அன்னையின் மூன்று அம்சங்களையும் அமைத்திருப்பதைப் பார்க்கும்பொழுது நமக்கு ஒரு பேருண்மை விளங்குகின்றது. இது பிரத்யக்ஷமான, குறிப்பிட்ட ஒரு நியதியை வெளிப்படுத்திக் காட்டுகிறது. மனோவாக்கைக் கடந்ததும், எல்லா நாம ரூபங்களைக் கடந்ததுமான தோன்றாநிலையிலுள்ள சக்தியானது, இந்தத் தோன்கின்ற பிரபஞ்சமாகவும், தோற்றமாகவும், நாம ரூபங்களாகவும் வடிவெடுக்கும்பொழுது மனம் கடந்த வஸ்துதராதரத்துடன் ஆவதும், நாம ரூபங்களற்றது வடிவெடுப்பதும் ஆகிய ஒரு ஒடுக்க முறை ஆரம்பமாவதை நாம் காணுகின்றோம். அதில் பரம்பொருளும், சூக்ஷ்மத்திற்கு சூக்ஷ்மமாக இருப்பதும், மூலகாரணமும், மூலாதாரமும் ஆன அப்பர வஸ்துவானது கடைசியில்

ஜட வஸ்துவாக முடியும்வரை சிறிது சிறிதாக ஸ்தூல வடிவில் தோற்றமெடுக்கிறது. இந்த ஒடுக்க முறை உலகத் தோற்றம் வெளிப்படும் முறையாகும். இது ஏகம் அநேகமாவதும், தோன்ருவஸ்து தோற்றமெடுப்பதும், காரணம் பல்வேறு காரியங்களாகத் தோற்றுவதும் ஆகிய முறையாகும். இதற்கு இணையாக சாதகன் வஸ்துவிலிருந்து மனம் கடந்த ஆரம்ப நிலைக்கு இதற்கு எதிர்மாருன முறையின் மூலம் செல்லும்பொழுது இந்த தெய்வீக சக்தியானது அதற்கு நேர் எதிரான வழியில் வேலை செய்வதைக் காணுகின்ருேம். ஒடுக்கம் ஆரம்பமாகும் பொழுது முதலில் பிரம்மாவின் சிருஷ்டிதான் ஆரம்பமாகிறது. சிருஷ்டி சக்தி வேலை செய்யத் துவங்கியதும் மஹா பிரகிருதியிலிருந்து நாம ரூபங்கள் தோன்றுகின்றன. மாயையின் சாம்ராஜ்யத்தில் இந்த நாம ரூபங்கள் தோன்றும்பொழுது, கடந்த நிலையிலிருந்த இந்த நாம ரூபங்கள் கடந்த, நிகழ், எதிர் காலமாகிய காலத்திற்கு உள்ளடங்கி விடுகிறது. அவைகள் தங்கள் நாம ரூபங்களை வைத்துக் கொண்டு முக்காலத்திலும் நலைபெற்றிருக்க வேண்டியிருப்பதால் காத்து, நிலை நிறுத்தி, சக்தியூட்டி, பாதுகாக்கும் அம்சத்தின் வேலை துவங்குகின்றது. அப்பொழுது உலகை ரக்ஷிக்கும் பொறுப்புடைய மஹாவிஷ்ணுவின் சக்தி அம்சமாகிய மஹாலக்ஷ்மி இயங்கத் தொடங்குகின்ருள். மாறுதல் ஏற்படவேண்டியிருக்கிறது. நாம ரூபங்களின் இயற்கையே அழியுந் தன்மையதாக உள்ளது. ஏனெனில் அவை காலத்தின் நியதிக்கு உட்பட்டவை. நாம ரூபங்களைத்

தகர்க்கின்ற இந்த வேலையை லயமாக்குவதற்கு அதி தேவதையான ருத்திரன் செய்கிறார். சிருஷ்டியில் துவங்கி, பிறகு காத்து, லயமாக்கும் வேலைகள் இவ்வாறு நடைபெறுகின்றன. இதுதான் வஸ்துவில் இறங்கும் முறையாகும்.

### மனிதன் கடவுள் நிலைக்குப் பரிணாமமடைதல்

ஆனால் "ஆன்மீக வழியில் செல்லுபவனுக்கு எல்லாம் லௌகீகத்திற்கு முற்றிலும் நேர்மாறாகவே நடக்கும். லௌகீக வாதிக்குப் பகலாக இருப்பது ஆன்மீக வாதிக்கு இரவாக இருக்கும். எந்தெந்த விஷயங்களில் லௌகீகவாதி விழிப்புடன் இருக்கின்றானோ அவைகளிலெல்லாம் ஆன்மீக வாதி உறக்கம் கொண்டு மதிக்காது விட்டுவிடுகிறான். உன்னதமான ஆன்மீக விஷயங்களிலெல்லாம் லௌகீகவாதி உறங்கிக் கொண்டு அசிரத்தையாக இருக்கின்றானோ அவற்றிலெல்லாம் கடவுள் நோக்குடைய மனிதன் விழிப்புடன் இருக்கிறான். லௌகீகவாதி எவற்றைக் காண்கின்றானோ யோகி அவற்றை விலக்கி அவற்றைக் காண்பது கிடையாது. லௌகீகவாதி எதைப் பார்க்கத் தவறி விடுகின்றானோ அதை யோகி தனது ஆன்மீக விழிப்பு நிலையில் காணுகின்றான்" என்று பகவத் கீதையில் கூறப்பட்டிருக்கிறது. இந்த நியதிப்படி அதே தெய்வீக சக்தி பரிணாமமாகிய ஆன்மீக வளர்ச்சியின் அந்தரங்க சாம்ராஜ்யத்தில் இயங்கத் தொடங்கும் பொழுது, சாதகன் அந்த சக்தியை எதிரான வழியில் வழிபடுகின்றான். அவன் முதலில் அன்னையை

அவளுடைய அழிக்கும் அம்சத்தில் ஆரோஹணம் செய்து வழிபட ஆரம்பிக்கின்ருன். அதனுல் ஜீவனை மூடிக்கொண்டிருக்கும் ஸ்தூலத் தன்மை, ஜீவனை அகப்படுத்தி வைத்திருக்கும் வஸ்துவை, அவனை மூழ்க வைத்திருக்கும் அஞ்ஞானத்தை, அவள் அழிக்க வேண்டியிருக்கிறது; ஆகவே, முதலில் நடக்க வேண்டிய காரியம் வஸ்துவின் பிடிப்பி லிருந்து விடுபட்டு, அறியாமை விலங்கை அறுத் தெறிந்து ஸ்தூலத்தை வெற்றி கண்டு, தூய, சூக்ஷ்ம, ஆன்மீக சாம்ராஜ்யத்திற்கு உயர வேண்டி யதே ஆகும். முதலில் லௌகீக உலகின் செல் வாக்கையும், ஸ்தூலத் தன்மையையும் அழிப்பதற்கு அன்னையை, அவளுடைய சக்தி (Power), வேகம் (Force) என்னும் அம்சங்களில் ஆரோஹிக்க வேண் டும். இவ்வாறு ஒருவன் யோகமார்க்கத்திலும், ஆன்மீக வாழ்விலும் நுழைந்த பிறகு, அதற்கு அடுத் தபடியாக அன்னையை லக்ஷ்மியின் வடிவில் ஆரோ ஹணம் செய்கின்ருேம். அதனுல் அவள் சாதக னுக்கு ஆன்மீக வாழ்விற்கு வேண்டியனவற்றை எல்லாம் அளித்து ரக்ஷிக்கிருள். பரிணுமத்திற்கு எதிரான மார்க்கத்தில், இந்த ஸ்தூல வஸ்து உல கில் லௌகீக வாழ்க்கை நடந்தேறுவதற்காக அன்னை அவசியமாகின்ருள். கடவுளினுடைய தாய்த் தன்மை வித்யா மாயா, அவித்யா மாயா என்ற இருவகை சக்திகளால் எப்பொழுதும் அறியப்படு கின்றது. இந்த வித்யா மாயை என்கின்ற அம்சத் தில்தான் அன்னையானவள் சாதகனுல் ஆரோஹிக் கப்பட்டு, வழிபடப்படுகின்ருள். ஆகவே லக்ஷ்மி

இந்த வித்யா மாயை என்னும் அம்சத்திலேயே சாதகனுடைய ஆன்மீக வளர்ச்சிக்கு வேண்டியவற்றை யெல்லாம் கொடுத்து, காத்து, அவனுடைய யோகத்தையும், சாதனையையும் ரக்ஷிக்கிருள்.

அவன் யோக மார்க்கத்தைக் கடந்து இன்னும் உயர் நிலையை அடையும் பொழுது மஹா அன்னையை, மனங்கடந்த பரம வஸ்துவிலிருந்து முதன் முதலில் வெளியான அம்சமாக இருப்பதும் அதற்கு மிக அருகாமையிலிருப்பதும், ஆகிய அவளுடைய அம்சத்தில் ஆரோஹிக்கின்ருன். மஹா சரஸ்வதி என்னும் அவளுடைய அம்சத்தில் அவள்தான் முதல் தோற்றம். அவளே ஞானத்தை நல்குபவள், அவள் ஜீவனை பரமாத்மா அல்லது பரம்பிரம்மத்தோடு ஐக்கியக்படுத்தி எல்லையற்ற ஆத்மானுபூதி நிலையை அடையும்படி செய்கிருள். வித்யா மாயா என்னும் அம்சத்தில் சாதகன் அன்னையை நேர்மாருன வழியில் வழிபடுகின்ருள். அதனுல் அவனுக்காக அவள் வஸ்து நிலையிலிருந்து ஆதி நிலையாகிய தூய ஆன்ம நிலையைத் திரும்பப் பெற்றுக் கொடுக்கிருள்.

## அஷ்ட லக்ஷ்மி

நாம் முதன் முதலில் மஹா லக்ஷ்மியை, அவளுடைய அவித்யா மாயையின் அம்சத்தில், பரம் பொருளிடமிருந்து வெளியான இந்த உலகரக்ஷகி என்கின்ற அம்சத்தில் கவனிக்க ஆரம்பிக்கும் பொழுது அவள் இவ்வுலகில் வளமான வெற்றிகர

மான வாழ்க்கை நடத்துவதற்கு அத்தியாவசிய மான பல்வேறு வஸ்துக்களாகவும் இருப்பதைக் காண்கிறோம். மஹா லக்ஷ்மியை எட்டுவித ரூபங் களில் பார்க்கின்ற கோட்பாடு நம்மிடையே இருந்து வருகிறது. இதை ஹிந்துக்கள் அஷ்டலக்ஷ்மி என்று குறிப்பிடுகின்றனர். இந்த உலகில் உயிர் வாழ மிகவும் அத்தியாவசியமானது உணவு. இந்த ஸ்தூல உலகில் ஜீவர்கள் எல்லாம் ஸ்தூல உணவி லிருந்து பெறும் சக்தியைக் கொண்டே ஜீவித்திருக் கின்றன. உணவிற்கு முக்கியமான பொருளாக இருப்பது பயிர் செய்யப்படும் தானியமாகும். ஆகவே அன்னையை தான்ய லக்ஷ்மியாக வழிபடுகின்றோம். வருடத்தில் ஒரு நாள் இதற்காக ஒதுக்கப்பட்டு, அறுவடை சமயத்தில் புதிதாக சேகரிக்கப்பட்ட தானிய மணிகளை உழவர்களும் மற்றவர்களும் வழி பாடு செய்வது சாதாரண காட்சியாகும். இது ஒரு குதூகலமான பண்டிகை. வயலை நிரப்பிய பொன் போன்ற தானியத்தின் முதல் அறுவடையை மேள தாளங்களுடனும் ஆரவாரத்துடனும் பெரிய சடங்கு களோடும் வீட்டிற்குக் கொண்டுவந்து அதற்கு தெய் வத்திற்கு செய்யப்படும் சகல சடங்குகளுடனும் வழிபாடு செய்கிறார்கள். இவ்வாறு அன்னையான வள் உயிர்கொடுக்கும் தானியமாக விளங்கும் அவ ளுடைய உலக அம்சமானது மிகவும் முக்கியமான அம்சமாகக் கருதப்படுகிறது. இந்த வடிவில் நமது உலகில் லக்ஷ்மி தோன்றுகிறாள்.

இரண்டாவதாக, உலக விவகாரங்கள் அனைத் தையும் கவனிப்பதற்கு உள்நாட்டிலும், சர்வதேச

அளவிலும், பணம் அல்லது தனம் தலையாய முக்கியத்துவம் பெற்றிருக்கிறது. செல்வமின்றி மனிதன் சந்தோஷத்தோடும், செழிப்போடும், வெற்றியோடும் வாழ முடியாது. அவனால் எந்தத் தொழிலையும் மேற்கொள்ள முடியாது. ஆகவே அன்னை தனமாகவும் கருதப்படுகிறாள். தனம் என்பது காசாகவோ அல்லது பொருளாகவோ, மதிப்புள்ள எந்தப் பொருள் வடிவிலும் இருக்கலாம். இவ்வாறு சமூகத்தில் செல்வமும் மதிக்கப்பட்டு வழிபடப்படுகிறது.

இந்தியாவில் பல்வேறு பிரிவினரால் அன்னையின் இந்தப் பல்வேறு வடிவங்கள் வழிபடப் படுகின்றன. இந்து சமூகம் அழகிய திட்டமான வர்ணாஸ்ரம தர்மத்தை அடிப்படையாகக் கொண்டது. சமூகம் பூராவிலும் உழைப்பு பொதுவாகப் பிரிக்கப்பட்டுள்ளது. தேச வாழ்வின் பல்வேறு பிரிவினரிடம் ஒப்படைக்கப்பட்டுள்ளன. அன்னை தான்ய லக்ஷ்மி, தனலக்ஷ்மி, தைர்ய லக்ஷ்மி, வித்யா லக்ஷ்மி, ஜெய லக்ஷ்மி, வீர்யலக்ஷ்மி, கஜலக்ஷ்மி, சௌபாக்யலக்ஷ்மி என்னும் அவளுடைய எட்டு அம்சங்களில் வணங்கப்படுகிறாள். அந்த அஷ்ட லக்ஷ்மியும் உயிர் கொடுக்கும் தான்யமாகவும், அபர வித்தையாகவும் (உலகில் ஒருவன் நாகரீகமான, சந்தோஷமான வாழ்க்கை நடத்த கலைகளும், விஞ்ஞானமும் சம்பந்தப்பட்ட ஞானம் அவசியம்—இந்த பொருட்பிரபஞ்சம் சம்பந்தப்பட்ட சகல ஞானங்களாகவும் அன்னை பராசக்தி வித்யா ரூபத்தில் விளங்குகின்றாள்), தைர்யமாகவும் (செல்வத்தையும், ஞானத்தையும் பயன்

படுத்த ஒருவனுக்கு தைரியம் வேண்டும்), வீரியமாகவும் (ஜீவ சக்தி), கஜமாகவும் (அரசாட்சி சக்தி), ஜெயமாகவும் (பாதகமான சூழ்நிலைகளையும், சந்தோஷமான, செழிப்பு மிக்க, வெற்றிகரமான வாழ்க்கைக்குத் தடைகளாக இருப்பனவற்றை வெற்றி கொள்ளும் ஆற்றல்) சௌபாக்கியமாகவும் (பொதுவான செழிப்பு) வணங்கப்படுகின்றாள். கொடுத்துக் காப்பவளாகிய லக்ஷ்மியின் இந்த எட்டு அம்சங்களும் நமது மனித உலகில் தோன்றியிருக்கின்றன. க்ஷத்திரியன் அன்னையை வெற்றியைக் கொடுக்கும் ஆயுதங்களாக வழிபடுகின்றான். அவனுக்கு வாள் முதலிய ஆயுதங்கள்தான் மஹாலக்ஷ்மியினுடைய வெற்றி தரும் புறத் தோற்றங்கள்; வர்ணாசிரமத்தில் மூன்றாம் பிரிவினராகிய வைசியர்கள் வியாபாரம் செய்பவர்கள். அவர்களுக்கு மஹாசக்தியாக இருப்பது பண பலமே; ஆகவே லக்ஷ்மி தேவியை இந்த அம்சத்தில் விசேஷமாக வழிபடுவதற்கென்று ஒரு நாள் ஒதுக்கப்பட்டிருக்கிறது. தீபாவளியின் போதும், லக்ஷ்மி பூஜை தினத்தன்றும் குறிப்பாக பம்பாய் போன்ற பணக்கார நகரங்களில் வெள்ளி நாணயங்களைக் குவியலாகக் குவித்து வைத்து, மற்ற தேவதைகளை வழிபடுவதைப் போலவே, இதையும் அன்னை லக்ஷ்மி தேவியின் புறத்தோற்றமாக பாவித்து பய பக்தியுடன் வழிபாடு செய்வதை சகஜமாகப் பார்க்கலாம். நான்காவது வருணத்தாராகிய சூத்திரர்கள் லக்ஷ்மியை தாங்கள் விளைவிக்கும் தானிய வடிவில் வழிபடுகின்றனர். ஞானத்திற்குப் பொறுப்பாளியாக இருப்பவனும், மற்றவர்

கள் எல்லோருக்கும் ஞானத்தை அளிக்க வேண்டிய வனுமாகிய பிராமணன் அன்னையை வித்தை வடி விலும், புத்தகங்கள் ரூபத்திலும் வழிபாடு செய் கின்ருன். இவற்றைத் தவிர இயந்திரக் கருவிகளும், உலக வாழ்க்கை நடைபெறுவதற்கு அவசியமான ஆயுதங்கள் அனைத்தும் ஆயுத பூஜை நாளில் வழி பாடு செய்யப்படுகின்றன. கடவுளின் தாய்த் தன் மையானது அதனுடைய உயிர் காத்து ரக்ஷிக்கும் அம்சத்தில், இம்மாதிரியான பல்வேறு வழிகளால் இந்து சமூகத்தால் நடைமுறையில் வழிபாடு செய் யப்பட்டு வெளிப்படுத்திக் காட்டப்படுகிறது.

### லக்ஷ்மியிடம் சாதகனின் பாவனை

உலக வாழ்க்கை சம்பந்தப்பட்ட வரையில் இப்பூவுலகில் வாழ்க்கை நடத்த ஏதுவாக நிலை நிறுத்தி வைத்திருக்கும் சக்தியான உலகாயத சக்தி யாகிய அன்னையின் அம்சம் பக்தியுள்ள ஹிந்துவுக்கு முக்கியமான அம்சமாகும். இங்கு ஹிந்து தன்னை ஒரு உண்மைவாதி என்பதைக் காட்டிக்கொள்கிருன் என்பது குறிப்பிடத்தக்கது. இந்த தெய்வீக சக்தி யின் முக்கியத்துவத்தையும், மதிப்பையும் அவன் உணர்ந்து ஒப்புக்கொள்கிருன். அந்த சக்தியானது இப்பூவுலகில் மனிதனை வளப்பத்துடனும், சந்தோ ஷமாகவும் வைத்து வாழ்வை பாதுகாத்து நிலை நிறுத்தி வைப்பதற்குரிய இந்த உபயோகமான அம் சங்களாக விளங்குகிறது. இவ்வாறு இவ்வுலக நற் பொருள்களிடம் அவனுடைய உண்மை மனப்பான் மையை நாம் அங்கீகரிப்பதோடு, ஒவ்வொரு உண்

மையான இந்துவினுடைய உணர்ச்சியிலும் சாசுவத மான வேட்கையான கடவுள் பக்தியும் இரண்டறக் கலந்திருப்பதைக் காணலாம். செல்வ வடிவிலேயும் மற்றும் உலகிலுள்ள நல்ல பொருள்கள் ரூபத்திலும் அன்னையை வணங்கும் அதே ஹிந்து பக்தன், தன் னிடம் இறை உணர்வை அடையவேண்டுமென் கின்ற வேட்கை உள்ளத்தில் எழுந்தவுடன் அன் ருட உலகிற்கு அத்யாவசியமான இதே லக்ஷ்மியின் அம்சத்தை புறக்கணித்து ஒதுக்கித் தள்ளிவிட வேண்டியிருக்கிறது என்பதையும் கூடவே ஒப்புக் கொள்கிருன். இவ்வாறு அவன் உலகாயத வாழ் வை நீக்கி, செல்வத்தைத் துறந்து துறவு மார்க் கத்தை மேற்கொள்கிருன். ஏனெனில் ஆசாபாசங் களில் ஈடுபட்டிருக்கும் வகையிலும் அவன் அன் னையை இவ்வுலக வஸ்துக்களாகத்தான் பாவிக்க வேண்டியிருக்கிறது என்பதை அவன் ஒப்புக் கொள் கிருன், ஆனுல் எந்த க்ஷணத்தில் இப்பொருள்கள் போதுமான அளவில் இருந்து அவைகளின் நிலை மையை இவன் உணருகின்ருனே அந்த க்ஷணத்தி லேயே அவனுடைய உள்ளம் நிலையான பொருளை நாட ஆரம்பிக்கிறது. உடனே அவன் அன்னையின் இந்த பொருள் அம்சத்திற்கு ஒரு வணக்கம் செலுத்தி விட்டு அவளுடைய மற்ருெரு அம்சமான வித்யா மாயையை ஆவாஹனம் செய்யத் துவங்குகின்ருன். பொருள், ஐசுவரியம், இல்லற சந்தோஷம் மற்றும் இதர உலக வஸ்துக்கள் ஆகிய வடிவாக விளங்கும் அன்னையின் அவித்யா மாயையிலிருந்து தன்னை விடு விக்கும்படி அன்னையைப் பிரார்த்திக்கின்ருன். இவ்

வாறு அவன் அன்னையின் அவித்யா மாயை அம்சத்திலிருந்து வேண்டுமென்றே பிரிக்கின்ருன். இங்குதான் லௌகீகவாதிக்கும் ஒரு சாதகனுக்கும் உள்ள வேற்றுமை தெளிவாகப் புலப்படும். இங்குதான் இந்த இருவகையாரும் ஒரே தெய்வத்தை வழிபடும் பொழுது இருவருக்குமுள்ள அந்தரங்க முக்கியத்துவம் தெரிய வரும். உலகாயதவாதியும் அன்னையை வணங்குகின்ருன். அதே சமயத்தில் உலகைத் துறந்த சாதகனும் லக்ஷ்மியை வணங்குகின்ருன். மேம்போக்காகப் பார்ப்பவர்களுக்கு இருவரும் ஒரே வழிபாடுதான் செய்வதாகத் தோன்றும். ஆனல் லக்ஷ்மி தேவியின் இந்த அவித்யா மாயை, வித்யா மாயை ஆகிய இரு அம்சங்களையும் புரிந்துகொண்டு விட்டால் ஒருவன் புறத் தோற்றத்திற்குள் ஊடுருவிச் சென்று, ஒரே மாதிரியாகத் தோன்றும் அந்த வழிபாட்டில் இருவருடைய மனப்பான்மையும், மனோபாவமும் முற்றிலும் வேறுபட்டிருப்பதைக் காணலாம். ஒருவன் ஆசைகள் நிறைந்த உலகாயதவாதி. மற்றவன் ஆசைகளைத் துறந்து அழியாப் பொருளை நாடும் ஆன்மீகவாதி.

இருப்பினும் உருவம் ஒன்றுதான். அதே அன்னை பராசக்திதான். அவள் ஐசுவரியங்களைக் கொடுத்துக் காக்கின்ற காரணத்தால் லக்ஷ்மியின் ரூபம் எப்பொழுதும் மங்களகரம் நிரம்பியிருக்கிறது, அவள் படாடோபமான ஆடை ஆபரணங்களால் அலங்கரிக்கப்படுகிருள். அவள் அருகாமையில் எப்பொழுதும் சக்திக்கும், ஆடம்பரத்திற்கும் அடையா

ளமான யானை இருந்து கொண்டிருக்கும். அவள் வீற்றிருப்பதும், அவள் இரு திருக்கரங்களில் வீற்றிருப்பதும் நன்கு மலர்ந்த தாமரை மலர். இத்தாமரை மலர் எதைக் குறிக்கின்றது என்று சிந்தித்துப் பார்க்கும்பொழுது அவற்றின் முக்கியத்துவம் நமக்கு நன்கு விளங்கும். நன்கு மலர்ந்த தாமரைகள் எல்லா அம்சங்களிலும் பூர்ணத்துவத்தைக் குறிக்கின்றன. அதேபோல யானை இரு பொருள்களைக் குறிக்கின்றது. அதாவது மகோன்னத ஐசுவரியம், ராஜரீக மகிமை, படாடோபம், ஆகியவற்றையும் அதே சமயத்தில் மகோன்னத ஞானத்தையும் குறிக்கிறது. யானை ஞானத்தின் பூர்ணத்துவத்தை எடுத்துக் காட்டுகிறது.

# ஐந்தாவது இரவு

## ஐசுவரிய மார்க்கம்

நமது உயிருக்கெல்லாம் உயிராக இருப்பவளும், நம்முடைய நிலைபேற்றிற்கு ஆதாரமாக இருப்பவளும், நம்முடைய ஜீவனுக்கே சாரமாக இருப்பவளும், நமது உணர்வின் அடித்தளமாக இருப்பவளும், நமது வாழ்க்கையின் லட்சியமும், முடிந்த முடிவாக

வும் இருப்பவளும், நமது யோக சாதனையின் மாட்சிமை மிக்க பலனாக இருப்பவளும், சத்—சித்—ஆனந்தமாக இருப்பவளும் ஆகிய அன்னை பராசக்திக்கு வணக்கங்கள். அவளுடைய கருணை நம் அனைவர் மீதும் பொழிவதாக.

அன்னையினுடைய லக்ஷ்மி என்னும் அம்சமானது பூவுலகில் வாழ்வை சாத்தியமாக்கி சகிக்கக் கூடியதாக வைத்திருக்கும் ஒரு மாபெரும் சக்தியாகும். அன்னை லக்ஷ்மி இல்லையெனில் உலகவாழ்க்கை துன்பமும் துக்கமும் நிறைந்த யாத்திரையாகிவிடும். கண்ணீர் நிறைந்த பள்ளத்தாக்காக விளங்கும்; ஏனெனில் வஸ்துக்களின் அநித்தியத் தன்மையினாலும் அன்னை துர்க்கையின் சர்வ வியாபகத்தன்மை காரணமாகவும், ஜீவன் இவ்வுலகில் பிறந்தது முதல் சுடுகாடு போய்ச் சேரும்வரை ஜீவனுடைய பாதையில் அழிவுவேலை சதா குறுக்கிட்டுக் கொண்டிருக்கிறது. உண்மையில் உலக வாழ்வு துன்பமும் மரணமும் சேர்ந்த வாழ்க்கையாகும். லக்ஷ்மி தேவியின் ஒளியும் பிரகாசமும், ஆனந்தமளிக்கும் அம்சமும் இவ்வுலகில் துன்பத்தையும், அழிவையும் சீர்படுத்தி ஒளி, அன்பு, ஆனந்தம், செழிப்பு; சந்தோஷம் ஆகியவற்றின் பல்வேறு ரூபங்களில் வாழ்க்கையை தாங்கக்கூடிய வகையில் வைத்திருக்கிறது. மனிதவாழ்வின் சகல அம்சங்களிலும் அன்னை மங்களகரமாக ஊடுருவியிருக்கிறாள். அவள் கல்யாணியாக இருக்கிறாள். அவள் மங்களமாக இருக்கிறாள். அவள் சௌபாக்கியவதியாக இருக்கிறாள். தேசீய

வாழ்க்கை என்ற பரந்த அளவிலும், தனிப்பட்டவ ரின் நெருங்கிய குடும்ப வாழ்க்கையிலும் அன்னை சர்வ பிரகாசத்துடனும், உற்சாகத்துடனும் தன்னை வெளிப்படுத்திக் காட்டிக் கொண்டிருப்பதால் அவ ளுடைய ஒளியின் மூலமும், கவர்ச்சியின் மூலமும், கருணையின் மூலமும் வாழ்க்கை நிலைபெற்று நடந்து வருகிறது. இவ்வாருக துர்க்கை மாதாவும், லக்ஷ்மி தேவியும் இந்த சம்சார வாழ்க்கையை ஒரு சீரான நிலையில் வைத்து ஜீவன் இந்த நிலையற்ற வாழ்வின் கடினமான உண்மைகளை மறந்து வாழ்வில் காணப் படும் நல்ல விஷயங்களை ஓரளவு சந்தோஷத்துடன் அனுபவிப்பதற்கு ஒரு வாய்ப்பளித்திருக்கின்றனர்.

## தேசத்தின் மாட்சிமைக்கு அறிகுறிகள்

இந்த இரண்டு வகையிலும் அம்பிகையை லக்ஷ்மியாக அறிந்து உணர முயற்சிப்பது மிகவும் ஊக்கமளிப்பதும் பயன்தரத்தக்கதுமாகும். அதனல் இந்த வகைகளில் லக்ஷ்மி தேவியின் சாந்நித்தி யத்தை ஸ்திரப்படுத்தும் பொருட்டு அதற்கான வற்றை மனப்பூர்வமாகச் செய்யக்கூடிய நிலையில் நாம் இருக்க இயலும். அவ்வாறு செய்வதன் மூலம் நாம் துன்பம் நிறைந்த இந்த அநித்ய வாழ்வை இன்பமும் வளப்பமும் மிக்கதாகச் செய்யலாம். மனி தனுடைய சமூக வாழ்வையும், தேசீய வாழ்வையும் பரந்த அளவில் பார்க்கும்பொழுது அன்னை துர்க்கா தேவி என்னும் அம்சத்தில் தெய்வீக சக்தியின் பயங்கர முறைகளை சீர்படுத்தி சமநிலையில் வைத்தி ருப்பதைப் போலத் தோன்றுகிறது. பூமியில்

வாழ்க்கை நடத்துவதற்கே துர்க்காதேவி எவ்வாறு அழிவுச் சக்தியாகத் தோன்றுகிருள் என்பதையும், எவ்வாறு அவளுடைய இந்த கருணை நிறைந்த அழிவுச் செய்கை இல்லையானுல் உலக வாழ்க்கை குழப்பத்திலும், அழிவிலும், சீர்கேட்டிலும் போய் முடியும் என்பதையும் பார்த்தோம், இவ்வாறு தன்னுடைய பயங்கர அம்சமாகிய சண்டை, கொள்ளை நோய், பஞ்சம் முதலியவற்றின் மூலமும், வெள்ளம், நெருப்பு, பூகம்பம், முதலிய கோளாறுகளின் மூலமும் அன்னை பராசக்தியானவள் காப்பதற்காகவும், வாழ்க்கை தொடர்ந்து நடப்பதற்காகவும் அழிவுத் தொழிலைச் செய்து வருகிருள். லக்ஷ்மி தேவி இந்த வாழ்வில் தன்னுடைய சொந்த அம்சமான துர்க்கை என்னும் வகையில் யுத்தத்திற்குப் பதிலாக சமாதானம் என்னும் முறையில் தோன்றி தன்னுடைய இந்தச் செயலைச் சீர்படுத்துகின்ருள். லக்ஷ்மிதேவி அனுகூலமாக இருக்கும் பொழுது உலகிலும், தேசங்களிடையேயும், மனித வர்க்கத்திடையேயும் சாந்தியும், சகல தீமைகளிலிருந்து விடுதலையும், நல்ல வளப்பமும், செழுமையும், ஏராளமான விளைச்சலும் ஏற்படுகின்றன. பிணி, கொள்ளைநோய் போன்றவைகளுக்கு மாருக லக்ஷ்மிதேவி சமூகத்திற்கு ஆரோக்கியம், க்ஷேமம், பெண்கள் குழந்தைகள் ஆகியோருக்கு நலம், தேசத்தின் ஆரோக்கிய நிலையில் உயர்வு முதலியவற்றைக் கொடுத்தருளுகின்ருள். வைத்தியத் தொழில், ஆஸ்பத்திரிகள், தீயணைக்கும் படை, போலீஸ் போன்ற தன்னுடைய ரக்ஷிக்கும் சக்தி அம்சங்களில் லக்ஷ்மிதேவியாகிய

விஷ்ணு சக்தியானது மனித வர்க்கத்திற்கு ஏற்படும் ஆபத்துக்களை விலக்கி வாழ்விற்குப் பாதுகாப்பளித்து மக்களையும் அவர்கள் சொத்துக்களையும் ரக்ஷிக்கிறது. ஆகவே, அரசியல்வாதிக்கும், நிர்வாகிக்கும், சமூகத்தலைவர்களுக்கும், இந்த அம்சங்கள் சமூக அமைப்பில் தோன்றுகின்ற லக்ஷ்மியின் அறிகுறிகளாகும்.

இவைகளெல்லாம் புறக்கணிக்கப்படும் பொழுது மக்களின் மகிழ்ச்சி அழிக்கப்படுவதைக் காண்கிறோம். அவர்கள் முன்னேற்றம் தடைபடுகிறது. ஐசுவரியம் அந்த தேசத்தையும், அந்த சமூகத்தையும் விட்டு விடை பெற்றுக் கொள்கிறது. ஆகவே பண்டைக் காலத்தில் நமக்குச் சட்டங்களை வகுத்துவைத்த சான்றோர்கள், உண்மையான நிர்வாகி ஒவ்வொருவரும் அன்னையினுடைய இந்த அம்சங்களை மனதில் கொண்டிருக்க வேண்டுமென்று விதித்திருக்கின்றனர். மேலும் அவர், சமூகத்தில் இவற்றை விருத்தி செய்வதற்குத் தன்னாலியன்ற அளவு மனப்பூர்வமாக முயற்சிக்க வேண்டும். அதன் மூலம் லக்ஷ்மி தேவி தன்னை வெளிப்படுத்திக் காட்டுகிறாள். அதில் விஷ்ணு சக்தியின் கருணை நிறைந்த இந்த முன்னேற்ற அம்சம் கலந்திருக்கிறது. ஆலயங்கள், பள்ளிகள், விளையாட்டு மைதானங்கள், பூங்காக்கள், பூஞ்சோலைகள், தடாகங்கள் முதலிய மனித சமூகத்தின அம்சங்கள் யாவும் விஷ்ணுசக்தியின் பல்வேறு தோற்றங்களேயாகும். இவையனைத்தும் லக்ஷ்மி தேவியின் வடிவங்களேயாகும். ஆகவே,

பாரத வர்ஷமாகிய இந்த தர்ம க்ஷேத்திரத்தில் கோயில் இல்லாத ஊரையே காணமுடியாது. ஒரு சில குடிசைகளே உள்ள சாதாரண பட்டி தொட்டி களிலும் கூட அங்குள்ள ஜனங்களால் வழிபட்டு வரக் கூடிய கிராம தேவதை மரத்து நிழலிலாவது இருப்பதைக் காணலாம். வழிபாட்டு ஸ்தலமில்லாத ஊரில் ஒரு பக்திமான் அடிஎடுத்து வைக்கமாட்டார். "இந்த ஊரில் லக்ஷ்மி கடாக்ஷம் கிடையாது" என்று அவர்கள் சொல்லுவார்கள். அப்பேர்ப்பட்ட இடத் திற்குச் செல்வதை அவர்கள் தவிர்த்து விடுவார்கள். ஜனங்களுக்கும் கால்நடைகளுக்கும் எங்கு நல்ல குடிநீர்வசதி இல்லையோ, அங்கு லக்ஷ்மி வாசம் செய்யவில்லை என்று ஜனங்கள் கூறுவார்கள். சான் ரோர்கள் அப்பேர்ப்பட்ட இடத்தைத் திரும்பிக்கூட பார்க்கமாட்டார்கள். தார்மீகவான்களும், தனவான் களும் தங்களுக்குக் கடவுளால் கொடுக்கப்பட்ட செல்வத்தை லக்ஷ்மியின் இந்த பிரத்தியக்ஷமான தோற்றங்களை நாடு முழுவதும் அமைத்து வைப்ப தற்கு சதா முயற்சித்து வருகின்றனர். மரங்களைப் பயிரிடுதல், கிணறு குளங்கள் வெட்டி வைத்தல், பூங்காக்கள், விளையாட்டு மைதானங்கள் முதலியவை அமைத்தல், கோயில் இல்லாத ஊரில் கோயில் கட்டு வித்தல். பழுதுபட்ட பழைய கோவில்களை புணருத் தாரணம் செய்து வைத்தல், யாத்திரீகர்கள், சாது சந்நியாசிகள், ஆன்மீக மாணாக்கர்கள் முதலியோர் வந்து தங்கி இளைப்பாறுவதற்குச் சத்திரங்கள் கட்டி வைத்தல், அங்கு அவர்களுக்கு வேண்டிய ஆகார வசதிகள் செய்து கொடுத்தல் முதலிய கைங்கரியங்

கள் எல்லாம் இன்னும் பெரிய தர்ம கைங்கரியங் களாகவும், மிகுந்த பெருமை வாய்ந்தனவாகவும் கருதப்படுகின்றன. இவைகளுக்குக் காரண கர்த் தாக்களாக இருப்பவர்களுக்கு இம்மையிலும், மறு மையிலும், சந்தோஷமும், புண்ணியமும் ஏற்படும். வித்யாலக்ஷ்மி என்கின்ற முறையில் கல்வியும் லக்ஷ்மி யினுடைய ஒரு தோற்றும் அம்சமாகும். அஷ்ட லக்ஷ்மிகளில் இதுவும் ஒரு அம்சமாகும். இந்த வடி வங்கள் அனைத்திலும் வெளிப்பட்டு விளங்கும் லக்ஷ்மி மாதாவை ஒவ்வொரு மனிதனும், ஒவ்வொரு பிரஜை யும், நாட்டிலும் சமூகத்திலும் விருத்தி செய்து வர வேண்டும் என்று நமது முன்னோர் வகுத்து வைத்தி ருக்கின்றனர். அதனால் நாட்டில் வளம் மிகுந்து எப் பொழுதும் மக்கள் சுபீட்சமாக இருப்பர்.

## தேசீயத் தலைவர்களின் தலையாய கடமை

எந்த தேசத்தை அல்லது நாட்டைச் சார்ந்த வரானாலும் சரி, மக்கள் தலைவர்கள், சமூகத் தலைவர் கள், அரசியல் தலைவர்கள், நிர்வாகிகள் ஆகிய அனைவரும் சமூகத்தில் லக்ஷ்மியின் இந்த அம்சங் களைக் காத்து வருவது அவர்களுடைய அதிமுக்கிய மான கடமைகளில் ஒன்று என்பதோடு மட்டுமின்றி, இதில் அடங்கியுள்ள அம்சங்கள் அனைத்தையும் போற்றிப் பாதுகாத்து விருத்தி செய்து மக்கள் அனை வரின் நலனையும் சந்தோஷத்தையும் பேணி வரு வதும் அத்துடன் சேர்ந்ததாகும். இவ்வாறு மனிதன் எவ்வளவு காலம் இந்தப் புறப்பொருள்களை

மெய்யென்று எண்ணிக்கொண்டிருக்கும் உணர்வோடு இருக்கின்றுனே அதுவரை இந்தக் கடமைகளில் எதையும் அவன் தவருது செய்து வரவேண்டும். இந்து மதத்தைப் பற்றி பொய்யாகப் புரிந்துகொண்டுள்ளதாலும், மனிதனுடைய கடமையைத் தவருன கொள்கையாக உடையதாலும், அதாவது உபநிடதங்களிலுள்ள வேதாந்தக் கருத்துக்களை ஜீரணிக்க முடியாத காரணத்தாலும், கடந்த பல நூற்ருண்டுகளில் இந்துமதத்தில் அடங்கியுள்ள மெய்த்தன்மையை பரிதாபகரமான முறையில் புறக்கணிக்க வேண்டியதொரு சூழ்நிலை ஏற்பட்டிருக்கின்றது. இவ்வாறு வைராக்கியம், ஆத்மானுபூதி, உலகில் அநித்ய தன்மை ஆகியவைகளைப் பற்றி பாதியளவு ஜீரணம் செய்துள்ள அபிப்பிராயங்களைக் கொண்டிருக்கின்ற காரணத்தால் இந்திய மக்கள் அனைவரும் மஹாலக்ஷ்மியின் இந்த அம்சங்களைப் பாதுகாப்பதில் அசட்டையாக இருந்து விட்டனர். ஏனெனில் இவைகள் எல்லாம் மாயையின் ஆட்சிக்குட் பட்டவைகள் என்றும் இவைகளின்மீதெல்லாம் கவனம் செலுத்திக் கொண்டிருப்பது பயனற்றது என்றும் எண்ணிக்கொண்டு மகோன்னதமான மறு உலக வாழ்க்கையின் பொருட்டு இவற்றை எல்லாம் புறக்கணித்து விடுவதுதான் வேதாந்தத்தின் உச்ச நிலை என்ற எண்ணத்திற்கு இடம் கொடுத்ததும் தான் இதற்குக் காரணம். இந்த வெளி உலகில் லக்ஷ்மி என்னும் அம்சத்தில் அன்னையை இவ்வாறு புறக்கணித்த காரணத்தால் பாரததேசம் அதற்குரிய தண்டனையை, சுதந்திரம், ஐசுவரியம், தேசீய சுய

மரியாதை ஆகியவற்றை இழந்ததன் மூலம் அனுப விக்க வேண்டி வந்தது. இவ்வாறு தத்துவத்தைத் தவருகப் புரிந்து கொண்டிருந்த காரணத்தால் பெரும்பான்மையானோர் அன்னையை மறந்து அவம தித்து மெய்த்தன்மையாகிய வடிவத்திலும், புறவாழ் வில் நடைமுறை லக்ஷியத்திலும் ஆகிய இந்த ரூபத் தில் செய்து வந்த அவளுடைய வழிபாட்டை ஒதுக் கித்தள்ளியதாலும் லக்ஷ்மிதேவி பாரதநாட்டை விட் டகன்ருள். ஆகவே முயற்சிக்கத் தகுதியில்லாத அறியாமை காரணமாக கல்வி புறக்கணிக்கப்பட்டது. சமூகப் பணிகள் அனைத்தும் புறக்கணிக்கப்பட்டன. இந்த ஸ்தூல உலகில் சரீர உணர்வோடு உறுதி யாகப் பந்தப்படுத்தப்பட்டிருக்கும் நிலையில் கூட, மனிதன் இந்த உலகின் மெய்த்தன்மைகளைப்பார்க்க மறுத்துக் கண்களை மூடிக்கொண்டு, அவைகள் எல் லாம் அழியக்கூடியவை, அநித்யமானவை என்று கூறிக் கொண்டு அவற்றையெல்லாம் தட்டிக்கழிக்கப் பார்க்கின்ருன்.

இவ்வாறு லக்ஷ்மிக்கு எதிரான தாமஸ நிலை மேலிட்டு அதன் பலனுக இருநூருண்டு காலம் அடி மை வாழ்வு வாழவேண்டி வந்தது. நாம் யாருக்கு அடிமைப்பட்டிருந்தோமோ அவர்கள் புற உலகில் லக்ஷ்மியை அதற்குரிய அர்த்தத்தில் சிறந்த முறை யில் வழிபடுபவர்களாக இருந்தனர். வெள்ளையர் கள் லக்ஷ்மிதேவியை வசப்படுத்தி பாரதவர்ஷத்தில் எவையெல்லாம் மிகச் சிறந்தனவாக இருந்தனவோ, செல்வத்தைக் கொடுக்கக் கூடியவைகள் என்

னென்ன இருந்தனவோ, அவற்றையெல்லாம் மேல் நாட்டிற்கு எடுத்துச் சென்றுவிட்டனர். அவர்கள் உலகாயத வாதிகளாக இருந்தபோதிலும் அங்கு அவர்கள் லக்ஷ்மியை வழிபட்டனர். பாரத நாட்டுப் பிரச்னைக்கு மூலகாரணமாக இருப்பது தமஸிற்கு உட்பட்டு லக்ஷ்மியை புறக்கணித்ததுதான் என்பதை யுணர்ந்த ஞானிகளும், மகான்களும் உடனே பாரத நாட்டிற்கு சக்தி பொருந்திய சமூக தத்துவம் ஒன்றை வழங்கினர். பாரத நாட்டிற்கு அவர்கள் விடுத்த அறைகூவல் யாதெனில், அது அதனுடைய தமோ குண உறக்கத்தினின்று விழித்தெழுந்து தன்னல மற்ற சேவையில் ஈடுபட்டு, வாழ்க்கையை பிரத்தி யக்ஷ பாவனையோடு பார்த்து அதற்கேற்ப நடந்து கொள்ள வேண்டுமென்பதுதான். இவ்வாறு ஒரு மறுமலர்ச்சி ஏற்பட்டு அரைகுறையாகப் புரிந்து கொண்டிருந்த வேதாந்த மனப்பான்மை உள்ளத் திலிருந்து விலக்கப்பட்டு, எதுவரை ஒருவனுக்கு சரீரம் உண்மையான பொருளாகத் தோற்றுகிறதோ, ஆன்மீகத்தில் பரிணமமடைந்து பக்குவ நிலைக்கு உயராது இருக்கும் வரையிலும், இந்த உலகம் ஒரு தீர்க்க சொப்பனம் என்று மனப்பூர்வமாக உணரா திருக்கும் வரையிலும் தோன்றுவஸ்து ஒன்றே உண் மையான சத்வஸ்து என்று உணராதிருக்கும் வரை யிலும் அவர்கள் தீவிரமான வழிப்பாட்டுக்காரர்க ளாக இருக்கும் விதம் எப்படி என்பதை அவர்களுக்கு எடுத்துப் புகட்டவேண்டும். தான் ஆன்மீக மார்க் கத்தில் மிக உன்னத நிலையை அடைந்துவிட்டதாக எண்ணி ஆன்ம வளர்ச்சியின் ஆரம்ப நிலையில்

செய்யவேண்டிய சாதனைகளைச் செய்யாமல் புறக் கணித்து வீழ்ச்சிக்குக் காரணமாக இருப்பது தவறு கும். பக்குவப்பட்ட நிலையில் எவ்வெவ்வற்றை தியா கம் செய்து விட்டு விடுகின்றோமோ அவைகளே ஆரம்பநிலையில் உயர் நிலைக்கு அழைத்துச் செல்லும் படிகளாக அமைந்திருக்கும். தமோ குணத்தை ஒரு வகையான வேதாந்த தத்துவம் என்று தவருக எண்ணிக்கொண்டு செய்யவேண்டியவற்றைச் செய் யாது விடுத்த காரணத்தால் ஏற்பட்ட அவலநிலை ஒருவாறு முடிந்து இப்பொழுது ரஜோ குணம் செயல் படத் துவங்கியிருக்கும் ஒரு சகாப்தத்தைக் காண்கி ரோம். இதில் தேசமும், இந்து சமுதாயமும் விழிப் புணர்ச்சி பெற்று, எல்லோருடைய நலனுக்காகவும் மக்கள் தீவிரமாக உழைக்க ஆரம்பித்திருக்கின் றனர். இது மிகவும் மகிழ்ச்சிக்குரிய அறிகுறி. இதைச் சரி யான அர்த்தத்தில் புரிந்து கொண்டு லக்ஷ்மியினு டைய அவித்யா மாயையானது நம்முடைய திருஷ் டியையும் அறிவையும் மயக்குவதற்கு இடங் கொடுக் காதிருந்தால் இது பாரதநாட்டின் உண்மையான லக்ஷியமாகிய முடிவான ஆன்மீகப் பரிணமத்தில் கொண்டு சேர்க்கும்.

## ஒரு உறுதியான எச்சரிக்கை

இதைப்போலவே தனிப்பட்டவரின் ஆன்மீக வாழ்வில் முக்கியமாகக் கவனிக்கவேண்டியது ஒன்று உண்டு. அநுபூதியின் உச்சநிலையை அடைந்த போது நாம் இந்த ஸ்தூல சரீரமல்ல, சரீரம், மனம் முதலியவற்றிற் கப்பாற்பட்ட தூய ஆத்ம சொரூபம்

என்பதெல்லாம் எவ்வளவுதான் உண்மையாக இருந்தபோதிலும் ஒரு ஆரம்ப சாதகன் சாதனையைத் தொடங்கும் போதே இந்தத் தத்துவத்தோடு தொடங்கினானேயாகில் அவன் விரைவில் துன்பத்திற்களாகிவிடுவான். இந்தப் புற உலக நியதி மிகவும் கடுமையானது. அதை மீறித் தாண்டிச் செல்லும்போது அது தனக்குரிய காணிக்கையை வாங்கிக் கொண்டு தான் விடும். ஆகவே ஒருவன் இந்த ஸ்தூல சரீரத்தைச் சரியானபடி போஷாக்கும், ஓய்வும் கொடுக்காது அதன் ஆரோக்கியத்தைப் புறக்கணித்துவிட்டு தான் ஏற்கனவே ஆத்மாநுபூதி நிலையை அடைந்து விட்டதாக எண்ணிக்கொண்டு அந்த வேதாந்த பாவனையோடு இருப்பானேயாகில் அவன் தனது தவற்றை உணருவதற்குள் சகலவிதமான யோக சாதனங்களுக்கும் அதிமுக்கியக் கருவியாக விளங்கும் இந்த ஸ்தூல சரீரம் மறுபடியும் எதற்கும் தகுதியில்லாத வகையில் பழுதடைந்து போவதைக் காண்பான். மனமும் நடத்தையும் தூய்மையடைய ஒருவன் தன்னலமற்ற சேவை செய்வதற்கு இந்த சரீரமோ முக்கிய கருவியாக இருக்கிறது. ஆகவே இதைப் புறக்கணித்துவிட்டால் யோக சாதன முன்னேற்றம் பெரிதும் தடைப்பட்டுவிடும். இந்த மாதிரியான சந்தர்ப்பத்தில் கடவுளின் கருணை ஒன்றுல்தான் அப்பேர்ப்பட்ட சாதகனைக் காப்பாற்ற முடியும். எப்படியாவது அவன் தனது தவற்றைத் திருத்திக்கொள்ளவேண்டும்

பின்னுல் பக்குவப்பட்ட நிலையில் கடக்க வேண்டிய உடல் உணர்வை ஒரு தனிப்பட்ட சாதகன்

ஆரம்ப நிலையில் புறக்கணிப்பதால் எவ்வாறு விபரீதங்கள் ஏற்படுகின்றனவோ அதே போல் தேசீய வாழ்விலும் தாமஸ நிலைக்கு இறங்காது இதை உணர்ந்து இதன்படி நடந்துகொள்ள வேண்டியது அவசியம். பாரத சமுதாயம் கடுமையான அனுபவத்திற்குப் பிறகுதான் இந்தப் பாடத்தைக் கற்றுக்கொண்டிருக்கிறது. இப்பொழுது தர்மத்தையும், தன்னலமற்ற, பிரதிபலன் எதிர்பாராத பண்புகளையும் அடிப்படையாகக் கொண்டு தீவிரமான, தைரியமான கைங்கரியங்கள் செய்யப்பட்டு வருகின்றன. இதை எல்லாம் பெரிய தலைவர்களும், சமூகத் தலைவர்களும், அரசியல் தலைவர்களும், நமது குருதேவரைப் போன்ற ஆன்மீகத் தலைவர்களும் முன் மாதிரியாக இருந்து நடத்திக் காட்டுகின்றனர். இதனல் இப்பொழுது சமூகத்திலும், நாட்டிலும் ஒரு புதுவித நிர்மாண உணர்ச்சி ஏற்பட்டுள்ளது. இது நாமெல்லோரும் சரஸ்வதியின் சாம்ராஜ்யத்திற்குச் செல்வதற்கு வழி கோலுகிறது. அங்கு இந்த கைங்கரியங்களின் காரணமாக சாந்தி, செல்வம், தேசீய ஆரோக்கியம், க்ஷேமம், தேசீய அறிவு வளர்ச்சி, எல்லோருக்கும் உயர்ந்த கல்வி முதலியவைகள் எல்லாம் ஏற்பட வாய்ப்பும், அதன் மூலம் தேசீய ஆன்மீக மறுமலர்ச்சிக்கு ஒரு சந்தர்ப்பமும் ஏற்பட ஏதுவாக இருக்கும். ஏனெனில் சமூகத்திலும் தேசத்திலும் பரந்த அளவில் லக்ஷ்மியின் தோற்றம் இல்லாவிடில், உயர்ந்த ஆன்மீக ஞானத்தை அளிக்கவல்ல சரஸ்வதி தேவி தோன்றுவதற்கும் வழி இல்லை. காரணம் என்னவெனில் உலர்ந்த வயி

ரேடும், ஒட்டிய முதுகோடும் உலவிவரும் ஜீவர் களுக்கு மத போதனை செய்ய இயலாது.

ஆகவே இந்த தேசீய, சமூக வாழ்க்கைப் பிரச்னைக்கு நாம் முதலில் பிரத்யட்ச பாவனையோடு தீர்வு காணவேண்டும். தேசத்திற்கும் தேச மக்க ளுக்கும் நாம் ஆரோக்கியம், சுபிட்சம், எல்லாவகை யிலும் செழிப்பு, கல்வி முதலியவற்றை கொடுக்க வல்ல லக்ஷ்மியின் அம்சங்களை அளிக்க வேண்டும். அப்பொழுது உயர்ந்த எண்ணங்கள் உதிக்க ஆரம் பிக்கும். இந்த நோக்கங்கள் இருக்கத்தான் செய் கின்றன; ஆனல் அவைகள் உறங்கிக் கிடக்கின் றன. நாட்டிலும் சமூகத்திலும் லக்ஷ்மி இல்லாத காரணத்தால் மனிதனுடைய உள்ளத்தில் இந்த எண்ணங்கள் வெளிப்படுவதற்கு வாய்ப்புக்கள் இல் லாமல் போய்விடுகின்றன. ஏனெனில் வறுமையா னது எல்லா விதமான உயர்ந்த நோக்கங்களையும் மழுங்க வைத்து விடுகின்றது. பசி வயிற்றைக்கிள் ளும்போது உயர்ந்த நோக்கங்களைப் பற்றிய எண் ணத்திற்கு இடம் எங்கு இருக்கப்போகிறது. ஆகவே லக்ஷ்மி அல்லது விஷ்ணு சக்தியின் பிரத்தியக்ஷ தோற்றத்தை ஒவ்வொரு தேசமும், சமூகமும் அதன் தகுதிக்கேற்ப மிகவும் முக்கியத்துவம் கொடுத்துப் போற்றுதல் வேண்டும். விவேகமும் வைராக்கியமும் அத்துடன் சேர்ந்திருக்கவேண்டும். லக்ஷ்மியின் மூலம் பாரதீய சம்ஸ்கிருதி (பாரத நாட்டு நாகரிகம்) யின் முடிவான லக்ஷியமாகிய சரஸ்வதியை அணுகு தல் வேண்டும்.

# ஆருவது இரவு

## இல்லத்திலும் உள்ளத்திலும் மங்கள தேவதை

இப் பிரபஞ்சத்தைக் காத்து வரும் ஒரே சக்தியான ஆசிமிக்க அன்னை பராசக்திக்கு அனந்த கோடி நமஸ்காரங்கள். அவள் பல்வேறு நாமரூபங்களின் மூலம் தோன்றுகின்ற சக்திக்கு ஆதாரமாக இருப்பவள். நமது உள்ளத்திலே வேட்கையாகவும் சாதன சக்தியாகவும் தோன்றி, நமது யோகத்தை காத்து, முடிவில் நமது உணர்வில் தூய ஞானமாகத் தோற்றுவித்து நமது சர்வ வியக்தியையும் விளக்கம் செய்கின்ற அந்த அன்னை பராசக்திக்குத் திரும்பத் திரும்ப நமஸ்காரங்கள்.

இன்று அன்னையை ஸ்ரீ லக்ஷ்மி அல்லது விஷ்ணு சக்தி அல்லது நாராயணியாக வழிபடும் மூன்ருவது புனித நாளாகும். நவராத்திரி வழிபாட்டின் ஆருவது நாளான இன்று நாம் எல்லோரும் ஆசீர்வதிக்கப்பட்டவர்களாக இருக்கின்ருேம். இன்று லக்ஷ்மி தேவியை தனிப்பட்டவரின் இல்லத்தில் குடும்ப மட்டத்திலும், உள்ளத்தில் தெய்வீக சம்பத் என்ற அம்சத்திலும் சிந்தித்துத் திளைத்திருப்பது நல்ல பாக்கியமாகும். இந்த தெய்வீக சம்பத்துக்கள் ஆன்மீக சாதகனிடத்திலும் முமுக்ஷுவிடத்திலும் விருத்தி செய்யப்படுகின்றன. இந்த இரண்டு அம்சங்களிலும் அவள் விசேஷமாகவும், நடைமுறையிலும் நம் எல்லோருக்கும், மிக முக்கியத்துவம் வாய்ந்தவளாக இருக்கிருள். ஏனெனில் அன்

ளையை இந்த அம்சங்களில் அறிந்து கொள்வதால் அவளுடைய பிரசன்னத்தையும், மறைவையும் நம்மால் அங்கீகரிக்க முடிகிறது. இதனல் அவள் பிரசன்னமாக இருக்கும் அம்சங்களை நாம் பாது காக்கவும் மறைந்திருக்கும் அம்சங்களை நாம் விருத்தி செய்து வெளிப்படுத்திக் காட்டவும் முடிகிறது.

### மகிமை மிக்க இந்திய மாதரின் மாண்பு

புண்ணிய பூமியாகிய இந்த பாரத வர்ஷத்தில் குடும்பத்தில லக்ஷ்மி தேவியைப் போற்றும் முறை அற்புதமானது. ஏனெனில் வீடே லக்ஷ்மியின் வாசஸ்தலமாகக் கருதப்படுகிறது. அங்கு அன்னை கிருஹிணி அல்லது கிருஹ லக்ஷ்மியின் வடிவில் தோற்றமளிக்கின்ருள். ஆகவே இந்த கிருஹ லக்ஷ்மி என்கின்ற பதம் நமக்கு சர்வ சாதாரண மானது. அன்னை, மங்கலம், நலம், குடும்ப வாழ்க் கையின் முன்னேற்றம், குடும்பத்தின் மேன்மை ஆகியவற்றை ஆட்சி புரிகின்ருள். லக்ஷ்மி தேவி யின் சொரூபமாகவே இல்லாள் கருதப்படுகிருள். மேலை நாடுகளில் காணமுடியாத இந்த பாரதீய சமஸ்கிருதியின் ஒப்பில்லாத தன்மையை இங்கு தான் காண முடியும். மேல் நாடுகளில் பெண் மனைவியாகவும், சகல காரியங்களிலும் ஆணுக்குச் சரி நிகர் சமானமாக பங்கு கொள்ளும் பங்காளியாக வும் தான் கருதப்படுகிருள். அங்கு அவள் தனது சமத்துவத்திற்காக மட்டுமின்றி தனது சுதந்திரத் திற்காகவும் ஆணைவிட அதிகம் போட்டி போடுகின் ருள். ஆனல் ஹிந்துவின் உள்ளத்திற்குப் பெண்

தாயாகவே காட்சியளிக்கின்ருள். உண்மையான ஹிந்துவினுடைய உணர்வில், பெண்மையில் தாய்மையே சதா பிரசன்னமாகிக் கொண்டிருக்கிறது. இது இந்த புண்ய பூமியில் பிறந்ததன் பலன். ஏனெனில் இந்தக் கோட்பாட்டிலிருந்து நாம் கடவுளின் தாய்மையை உணரக்கூடிய நிலைக்கு உணர்ந்து செல்ல முடிகிறது. இந்த மாத்ருபாவம் அல்லது பெண்ணைத் தாயாகப் பார்க்கும் மனேநிலையானது நமது உள்ளங்களைத் தூய்மையாக்கவும், நம்மை ஒரு உன்னத நிலைக்கு உயர்த்தவும், அதன் மூலம் தெய்வீக ஒளி நம்மிடம் இறங்கி வரவும் உதவியாகவும் சாதனமாகவும் இருக்கிறது.

இவ்வாருக ஹிந்துக்களுக்கு இல்லம் என்பது லக்ஷிமியின் வாசஸ்தலமாக இருக்கிறது ஆகவே ஹிந்து சமுதாயத்தில் ஒவ்வொரு வீடும் கிருஹ லக்ஷ்மி என்ற வடிவின் மூலம் லக்ஷ்மியால் ஆட்சி செலுத்தப்பட்டு மங்கள, மாங்கல்யம் நிறைந்த ஆலயமாக விளங்குகிறது. கிருஹ லக்ஷ்மியின் வடிவிலே காணப்படும் அன்னை பராசக்தியின் பெருமையும். சக்தியும், பிரகாசத்துடன் கூடிய தேஜஸும் பதிவிரதா தர்மத்தின் தேஜஸேயாகும். அதுதான் கிருஹ லக்ஷ்மியின் அந்தரங்க ஒளிக்கும், பெருமைக்கும், மகிமைக்கும் காரணமாக விளங்குகின்றது. அவளுக்கு இந்த அகில உலகிலும் அதைமிஞ்சிய சக்தி கிடையாது. பெண்ணினத்தின் தர்மம் என்கின்ற கோட்பாடு முழுவதையும் "பாதிவிரத்யம்" (பதிவிரதைத்தன்மை) என்னும் ஒரு சொல்லில்

அடக்கிவிடலாம். கிருஹ லக்ஷ்மிக்கு வீட்டு விவகாரங்களைப் பொறுத்த மட்டில் கணவன் அல்லது பதி தேவர், ஒரு யோக சாதகனுக்கு ஒருகுரு எவ்வாறு போற்றுதற்குரிய நிலையில் இருக்கிருரோ அதே ஸ்தானத்தில் வைத்துப் போற்றப்படுகிருர். கீழே குறிப்பிடப்பட்டுள்ள ஸ்லோகத்தில் கூறியுள்ளபடி ஒரு சாதகன் எவ்வாறு குருவை பிரத்தியக்ஷப் பரம் பொருளாகவே காணுகின்ருனே அதேபோல கணவன் அல்லது பதிதேவரை மனைவி நோக்குகின்ருள்.

> "த்வம் ஹி விஷ்ணு: விரிஞ்சிஸ்த்வம் தவம் ச தேவோ மஹேஸ்வர: த்வமேவ சக்திருபாஸி நிர்குணஸ்த்வம் ஸநாதந:"

இந்த வாழ்வில் ஒரு பெண் அடையக் கூடிய மிகப் பெரிய பொக்கிஷம் பதிவிரத்யம் (கற்புடமை). அது ஒரு பெண்ணை அசாதாரணமாக்குவதோடு பூவுலகில் அவளைக் கண்கண்ட தெய்வமாகவும் ஆக்குகிறது. ஏனெனில் இந்தக் கற்புச்சக்தி லக்ஷ்மி தேவியின் சக்தியேயாகும். இத்துடன் இந்தக் கற்பெனும் அகப் பண்பு அடக்கம் என்னும் தோற்றத்தில் வெளிப்படுகிறது. ஒரு ஹிந்துப் பெண்மணியின் அணிகலன் கற்புடைமையேயாகும். அவள் மற்றவர்களைப் பார்ப்பதிலும், மற்றவர்களால் பார்க்கப் படுவதையும் அசட்டை செய்து ஒதுக்குகிருள். ஆனல் இந்த வேட்கை தற்காலத்தில் வளர்ந்து வருகிறது. மற்றவர்கள் கவனம் தன்மீது செல்ல வேண்டுமென்று ஒவ்வொருவரும் விரும்புகின்றனர். இதை மனதில் கொண்டு அஞ்ஞான இருளின்

அடித்தளத்தில் மூழ்கியிருப்பவரின் செழித்து வளர்ந்த மூளையினுல் புதுப் புது ஆடை அலங்காரங்களும், ஒப்பனைகளும் கண்டு பிடிக்கப்படுகின்றன. இது எளிமை, அடக்கம் எனும் உயர்ந்த பண்பிற்கு நேர்மாருனதாகும். அடக்கம் புறக்கணிக்கப்பட்டு கவர்ச்சிக்கு இடம் கொடுக்கப் படுமானுல் அந்த நிலை லக்ஷ்மி தேவியை மறுப்பதாகின்றது. இது அலக்ஷ்மி. இந்துமதப் பண்பாட்டில் அடக்கம் எனும் பண்பு தலையாய முக்தியத்துவம் வாய்ந்தது. புனித பாரதப் பெண்மையின் மூலம் அன்னை இந்த வடிவில் தன்னை வெளிப்படுத்திக் காட்டுகிருள்.

லக்ஷ்மி தேவி இல்லத்தில் கிருஹலக்ஷ்மியின் வடிவில கருணை, இனிய நடத்தை, இன்சொல் முதலியவற்றின் மூலம் தோற்றமளிக்கிருள். பெண் ஒரு பொழுதும் கடுமையாக இருத்தல் கூடாது. கிருஹலக்ஷிமியின் புனித வாயிலிருந்து எந்த விதமான கடுஞ்சொல்லோ, கடூரமான பேச்சோ, கொடுமையான வார்த்தையோ ஒருபொழுதும் வெளிவரக் கூடாது. இதுதான் லக்ஷியம். ஏனெனில் கருணையும் இனிமையும் கிருஹ லக்ஷ்மியோடு இரண்டறக் கலந்திருக்கும் பண்பு என்பதே இந்து மதக் கோட்பாடு. கடுஞ்சொல் பேசாமை என்பது லக்ஷ்மியை மதித்து அவளை வழிபடும் முறைகளில் ஒன்ருகும். இதை எல்லா வீட்டினரும் கவனத்தில் வைக்க வேண்டும். ஏனெனில் அதுதான் வீட்டில் உண்மையான மகிழ்ச்சியையும், சாந்தியையும் நலத்தையும் கொடுக்க இயலும்.

கிருஹ லக்ஷ்மிக்குத் தெளிவான அடையாள மாக இருக்கக் கூடிய மாங்கல்ய சூத்திரத்தைத் தவிர, அவரை அலங்கரிக்கக்கூடிய மற்றுமிரண்டு பொருள்களுண்டு. இந்த வழக்கம் சரியாகப் புரிந்து கொள்ளப் படாமல் இருந்து வருகிறது. இந்து மனை யில் லக்ஷ்மி தேவி இந்த இரண்டு அம்சங்களிலும் பிரசன்னமாயிருக்கிருள். அதாவது எடுத்துக்காட் டான இந்து மங்கையரை மலர்களின் வடிவிலும், திலகத்தின் வடிவிலும் லக்ஷ்மியின் அம்சங்கள் அலங்கரிக்கின்றன. ஒரு இந்து பெண்மணி திலக மின்றி வெளியே செல்லுதல் கூடாது. நெற்றியில் ஒரு குறிப்பிட்ட அளவு திலகத்தை அணிந்து கொள் வதற்கு ஒரு விசேஷ முக்கியத்துவமும், ஆழ்ந்த முக்கியமான காரணமும் உண்டு. இது புரிந்து கொள்ளப்படாமல் இருக்கிறது. ஆனல் இவ்வாறு திலகம் அணிந்து கொள்ளுவது உண்மையிலேயே மிக அத்தியாவசியம் என்பதை, அதை அணிந்து கொள்ளும் மங்கையர் நோக்கிலிருந்து பார்க்கினும் சரி, அவளுடைய வியவகாரங்களோடு தொடர்பு கொள்ளும் மற்றவர்கள் நோக்கிலிருந்து பார்க்கினும் சரி, சந்தேகமின்றி ஒப்புக் கொள்ளலாம். இதே போல புஷ்பங்களும், மலர்களும் லக்ஷ்மியின் வடி வங்களே. அவைகளும் சூடிக்கொள்ளப்பட வேண் டியவைகளே. ஆனல் அதே நேரத்தில் லக்ஷ்மி தேவி வித்யா மாயையாகவும், அவித்யா மாயையா கவும் இயங்குகிருள் என்பதை நாம் மறந்து விடக் கூடாது. ஆகவே அவித்யாமாயை என்னும் அம் சத்தில் அவளை மிகவும் பாதுகாப்பான தூரத்திலி

ருந்து விலகியே வழிபடவேண்டும். தினந்தோறும் நாம் அவளிடம் அவளுடைய அந்த அவித்யா மாயா லீலைகளினின்றும் நம்மைக் காத்து வித்யா அம்சத்தை மட்டும் நமக்குக் கொடுத்து ஆசீர்வதிக்கும்படி பிரார்த்திக்க வேண்டும்.

கிருஹலக்ஷ்மியின் வடிவில் தோற்றமளிப்பதோடு கூட, லக்ஷ்மிதேவி பதிதேவரை இடைவிடாது வழிபடும் மனோபாவனையின் மூலமாகவும் கணவரின் மூலமாக பகவானுக்கு இடையரூத மனப்பூர்வமான ஆத்ம தியாக சேவை செய்வதன் மூலமாகவும் அன்னை வெளிப்படுகின்ருள்.

இந்த உன்னதமான பதிசேவைக்கு ஸ்ரீலக்ஷ்மி தேவியே மிக உயர்ந்த எடுத்துக்காட்டாக விளங்குகின்ருள். வைகுந்தத்தில் எம்பெருமானுக்குச் சதா பாத சேவை புரிந்துவரும் சேவிகாவாகவே ஸ்ரீதேவி விளங்கி வருகிருர் என்பது வைணவ சம்பிரதாயம். அவள் பகவான் விஷ்ணுவின் பாதாரவிந்தங்களில் சதா சர்வகாலமும் சேவை புரிந்து கொண்டிருக்கிருள். பகவானுடைய சேவையிலேயே சதா மூழ்கித் திளைத்திருக்கின்ருள். இந்த சம்பிரதாயம் மிக முக்கியத்துவம் வாய்ந்தது. இதை ஒவ்வொரு ஹிந்துப் பெண்மணியும் மனத்தில் நன்கு பதிய வைத்துக்கொண்டு தங்கள் சொந்த வாழ்வில் நடைமுறைக்குக் கொண்டு வரவேண்டும்.

## வீட்டில் லக்ஷ்மியின் தோற்றம்

கிருஹ லக்ஷ்மியிடமிருந்து வீட்டின் சுற்றுப் புறங்களுக்கு வருவோம். பரிசுத்தம் என்னும் முக்

கியமான வழியில் லக்ஷ்மி பிரசன்னமாக இருக்கிருள். வீட்டைச் சுற்றிலும் குப்பையும் கூளமுமாக இருப்பதே அலக்ஷ்மி. தென்னிந்தியாவில் இதை தரித்திரியம் என்று குறிப்பிடுவர்.

அடுத்தப்படியாக தீபங்கள், சூரிய அஸ்தமன சமயத்தில் ஒவ்வொரு ஹிந்துவின் வீட்டிலும் தீபம் ஏற்றி அதற்கு வணக்கம் செலுத்துவதை நாம் பார்க்கலாம். இருள் வந்து கவிந்து கொள்வதற்கு முன்னர் பிரகாசமும், ஒளியும் இவ்வாறு உடனடியாக வந்துவிடுகின்றன. இந்தப் பழக்கம் ஒவ்வொரு ஹிந்து வீட்டிலும் இருந்து வருகிறது. லக்ஷ்மிதேவி குடும்பத்தில் விளங்கி வருவதால் தீபத்தையும், ஒளியையும் லக்ஷ்மியின் அம்சங்களாகக் கருதுகின்ருர்கள்.

பிறகு கடவுள் வழிபாடு. இது மிக முக்கியமானது. எங்கு கடவுள் வழிபாடு இருப்பதில்லையோ அங்கு லக்ஷ்மியும் இருப்பதில்லை. ஆனுல் அவள் தன்னுடைய வரம்புமீறிய அவித்யா அம்சத்தில் அங்கு வந்து வாசம் செய்து கொண்டிருப்பாள். பணம் வந்து குவியலாம். ஆனுல் முடிவில் ஐசுவரியம் வீட்டை விட்டுச் சென்றுவிடும். தெய்வ வழிபாடு இல்லாத வீடுகளின் முடிவான கதி துன்பமும், அவஸ்தையும், துயரமும்தான். மேலை நாட்டு நாகரீகமும், எண்ணங்களும் விரைவில் புகுந்து பரவி வரும் இந்தக் காலத்தில் இந்நாட்டவர் தங்கள் குடும்பம் உண்மையில் சந்தோஷமாகவும் க்ஷேமமாகவும்

இருக்க விரும்பினால், இக்கருத்தை நன்கு மனதில் பதிய வைத்து ஜாக்கிரதையாக நடந்து கொள்ள வேண்டும். தெய்வங்களை வழிபட வேண்டும். இல் லற வாழ்விலும், பரம்பரையாகக் கொண்டாடப்படும் பண்டிகை முதலிய புண்ணிய தினங்களிலும் இது தான் மிக முக்கியமான பாகமாக இருக்கவேண்டும். இப்புனித பூமியில் கொண்டாடப்படும் ஜன்மாஷ்டமி. ராமநவமி போன்ற இந்த புண்ணிய நாட்களைக் கொண்டாடாமல் உதாசீனம் செய்வோமாகில் அந்த வீட்டில் மங்களகரம் என்பதே இருக்காது என்பதை இங்கு குறிப்பிட விரும்புகிறோம்.

தர்மம். கிருஹஸ்தாஸ்ரமத்தில் இது அன்னை யின் முக்கியமானதொரு தோற்றமாகும். தன்னி டம் உள்ளதை ஏனைய மூன்று ஆசிரமத்தாருடனும் பகிர்ந்து கொள்ளக்கூடிய பேறு பெற்றவன் இல்ல றத்தான். மூன்று ஆசிரமத்தார்களாவன:- கல்வி கற்றுக் கொண்டிருக்கும் பிரம்மசாரிகள், சஞ்சாரம் செய்துகொண்டிருக்கும் சந்நியாசிகள், சந்நியாச ஆஸ்ரமத்திற்குத் தங்களைத் தயார் செய்துகொண்டு வீட்டைத் துறந்து புனித வாழ்வு வாழ்ந்து கொண்டி ருக்கும் வானப்பிரஸ்தர்கள் ஆவார்கள். இந்த மூன்று இனத்தவருக்கும் தர்மம் செய்வது இல்லறத் தார்களுக்குக் கிடைத்திருக்கும் ஒரு அபூர்வமான பாக்கியமாகும். இந்த பாக்கியத்தைப்பயன்படுத்திக் கொள்வது இல்லத்தில் லக்ஷ்மியின் சக்தியைத் தோன்றச் செய்வதாகும். ஏனெனில் இதன்மூலம் விஷ்ணுவின் ரக்ஷிக்கும் சக்தியானது பிரயோகிக்கப்

படுகிறது. அதனல் தர்மம் காப்பாற்றப்படுவதுடன் ஏனைய ஆசிரமத்தினரும் என்றென்றும் தழைத் தோங்க உதவி செய்யப்பட்டவராகின்றனர்.

விருந்தோம்பல் லக்ஷ்மியின் மற்ருெரு முக்கிய மான அம்சம். புதிதாக வந்தவர் ஒருவரைப் புறக் கணித்துத் திருப்பி அனுப்புமிடத்தில் லக்ஷ்மி வீற்றி ருப்பதில்லை. எங்கு பிக்ஷைக்காரர்களுக்கும் எதிர் பாரத விருந்தினருக்கும் வரவேற்பு இருக்கிறதோ அங்கு லக்ஷ்மி தனது முழு பிரகாசத்துடனும் வசித் துக் கொண்டு அந்த இல்லத்தை ஆசீர்வதித்துக் கொண்டிருக்கிருள். விருந்தோம்பல், தர்மம் செய்தல், தாராள மனப்பான்மையுடன் இருத்தல் முதலியவைகளும் லக்ஷ்மி தேவியின் முக்கியமான அம்சங்கள். அவற்றை பக்திவாய்ந்த ஹிந்து கிரு ஹஸ்தர்கள் தவருக சம்பிரதாயப்படிக் காத்து வரு தல் வேண்டும்.

இந்துக் குடும்பத்தில், இந்தியர்களுக்கே விஷேமாக உரித்தான, அதாவது இந்துக்களுக்கு விஷேமாக உரித்தான, இரண்டு விஷயங்களில் லக்ஷ்மிதேவி தோற்றமளிக்கிருள். முதலாவது புனி தமான துளசிச்செடி. துளசி மாடம் இல்லாத வீடு இருக்கக்கூடாது. ஏனெனில் லக்ஷ்மிதேவி பூமியில் உயிரோடு பிரசன்னமாயிருக்கும் உருவங்களில் இது ஒன்று. அவள் பகவானின் நேரிடையான விபூதி. இது விஷயத்தில் மஹா ராஷ்டிரர்கள் மிகுந்த கவனம் செலுத்துகின்ருர்கள் என்பதை நான் குறிப் பிட விரும்புகிறேன்.

அவர்கள் குடியிருக்கும் இடம் எதுவாயினும் சரி, லட்சாதிபதிகளாக பெரிய நகரங்களில் லௌகீக சூழ்நிலையில் இருந்தாலும் சரி, நான்கு அல்லது ஐந்து அடுக்கு மாடியில் நூற்றுக் கணக்கான குடும்பங்கள் வசிக்கும் இடத்தில் ஒரு பகுதியில் இருந்தாலும் சரி, ஒவ்வொரு மகாராஷ்டிரன் வீட்டிலும் ஒரு சிறு பூந்தொட்டியில் துளசிச்செடி வளர்ந்து வரும். இவ்வாறாக அன்னையை இந்த அதி விசேஷவடிவில் வழிபடும் அப்பேர்ப்பட்ட குடும்பங்களை அவள் ஆசீர்வதிக்கின்றாள். எந்த ஒரு மஹாராஷ்டிரிய கிருஹலக்ஷ்மியும் துளசி தேவிக்கு குறைந்தது ஒரு புஷ்பத்தையாவது சாத்தாமல், அல்லது சிறிது கற்பூர தீபாராதனையாவது செய்யாமல், அல்லது ஒரு பிரதக்ஷிணமாவது செய்து அதற்கு நமஸ்காரம் செய்யாமல் எதையும் சாப்பிடமாட்டாள்.

அன்னையின் மற்றொரு வடிவம் தற்பொழுது பட்டணங்களிலுள்ள எல்லா ஹிந்து வீடுகளிலும் துரதிஷ்டவசமாக விரைவாக மறைந்து வரும் புனிதப் பசுவாகிய கோமாதாவாகும். ஒரு சில தலைமுறைகளுக்கு முன்பு ஹிந்துக்கள் அனைவரும் வீட்டிலுள்ள பசுமாட்டை வணங்குவது வழக்கம். கோபூஜா செய்யாமல் பக்தியுள்ள ஹிந்து கிருஹலக்ஷ்மி எதையும் சாப்பிடமாட்டாள். இப்பொழுது நகரங்களில் பசுமாட்டைப் பார்ப்பதே அரிதாகிவிட்டது. தேவையான பால் முழுவதும் பால் பண்ணைகளிலிருந்து பாட்டில்களில் அடைத்து விநியோகம் செய்யப்படுகிறது. ஆகவே இந்த வழக்கம், கிராமங்களைத்

தவிர மற்ற இடங்களில் மறைந்து கொண்டு வரு கிறது. இந்து கிருஹலக்ஷ்மி தினசரி கோபூஜை யாகிய இந்த பரம்பரை வழக்கத்தைக் காப்பாற்ற இயலாவிட்டாலும் அதற்குப் பிராயச்சித்தமாக வரு டத்தில் ஓரிரு புண்ணிய தினங்களிலாவது இந்த பூ ஜை யை ச் செய்யவேண்டியதை லட்சியமாகக் கொள்ளவேண்டும். கோபூஜைக்கென்று வருடத்தில் ஒருநாள் விசேஷமாக ஒதுக்கப்பட்டுள்ளது. அன்று மக்கள் எப்படியோ பசு மாட்டைக் காணுமிடத்தில் அதை வழிபட்டு விடுகின்றூர்கள்.

இவ்வாறு அந்த பூஜைக்குரிய சந்தர்ப்பங்களே நாம் உண்டாக்கிக் கொள்ளவேண்டும். அங்கு இப் புனிதப் பசுவின் வடிவில் தேவி பிரசன்னமாயிருக் கிருள். இது ஒரு காலத்தில் இந்துக்கள் கருத்துப்படி செல்வத்துள் ஒரு பகுதியாகக் கருதப்பட்டு வந்தது. இவ்வாறு வீட்டைப் பொருத்தமட்டில் அன்னேயின் தோற்றம் வெளிப்பட்டு நிற்கிறது

### *சாதகனிடத்தில் ஆன்மீக செல்வம்*

இவ்வுலகில் மோக்ஷதாயினியாக விளங்கும் லக்ஷ்மிதேவியின் மிக முக்கியமான அம்சத்திற்கு இப் பொழுது வருவோம். அன்னே, லக்ஷ்மி என்னும் அம்சத்தில் முக்கியமாக ரஜோ குணத்துடனேயே விளங்குகின்றுள். ஏனெனில் ரஜோ குணத்தினுல் தான் காரியங்கள் நடைபெற்றுக் கொண்டிருக் கின்றன. சக்தி பொருந்திய பக்குவமான வழி முறைகளால் ஜீவனம் காக்கப்பட வேண்டியிருக்

கிறது. ஆகவே அன்னை ரஜோ குணத்தை எடுத்துக் கொண்டிருக்கிருள். அப்படி இருந்தாலும் அவள் தன்னகத்தே தூய சத்துவத்தை வைத்திருக்கின்ருள். ஏனெனில் விஷ்ணு சத்துவ குணத்தைப் பகிர்ந்து கொள்கிருர். முடிவில் அவள் தனது மூன்ருவது அம்சமாகிய சரஸ்வதியோடு ஐக்கியமாக வேண்டியிருக்கிறது. லக்ஷ்மி, சரஸ்வதி ஆகிய இருவருடைய தோற்றங்களுக்கும் இடையேயுள்ள எல்லைக் கோட்டில் நாம் சென்று பார்ப்போமாகில் அன்னை லக்ஷ்மி மோக்ஷ லக்ஷ்மியாக விளங்குவதைக் காணலாம். நமக்கு எல்லாம் விடுதலை வழங்குவதற்கு அதுவே மார்க்கமாக இருக்கின்றது. இந்த அம்சத்தில் அன்னை சாதகனுடைய வாழ்வில் வெளிப்படுகின்ருள். கீதையின் பதினருவது அத்தியாயத்தில் அன்னை தோற்றமளிக்கும் முக்கியமான குணங்களில் சில நமக்குக் காண்பிக்கப்படுகின்றன. அவள் அஞ்சாமை, உள்ளத் தூய்மை, யோக ஞானத்தில் உறுதி, ஈகை, புலனடக்கம், தியாகம், சாஸ்திர அத்தியயனம், விரதம், நேர்மை, அஹிம்ஸை, சத்தியம், வெகுளாமை, துறவு, சாந்தம், குறுகிய நோக்கம் தவிர்த்திருத்தல், ஜீவகாருண்யம், பிறர்பொருள் விரும்பாமை, மிருதுத்தன்மை, எளிமை, சஞ்சலமின்மை போன்ற பண்புகளாகத் தோன்றுகின்ருள். இங்கு மிக முக்கியமாக இரண்டு விஷயங்கள் கவனிக்கத்தக்கவை. லக்ஷ்மி தனது அவித்யா மாயா என்னும் அம்சத்தில் செல்வமாகவும், அத்துடன் சம்பந்தப்பட்ட தீமைகளான பேராசை, தனக்கென்று சொந்தமாக்குதல், கர்வம், படாடோபம்

முதலிய செல்வ அபிமானத்தோடு சம்பந்தப்பட்ட குணங்களாகவும் தோற்றமளிக்கிருள். மற்றும் அவள் சபல புத்தியாகவும் தோன்றுகிருள். ஆன்மீகப் பாதையில் பகவான் தெய்வ சம்பத்தைக் கொடுக்கும் பொழுது இது மிகவும் விசேஷமாகக் குறிப்பிடத்தக் கது. அன்னையின் சொந்தத் தோற்றமான அவித் யாமாயைக்கு நேர் எதிரான சில அம்சங்கள் சில வற்றை பகவான் குறிப்பிடுகின்ருர். ஆகவேதான் பதினுருவது அத்தியாயத்தில் இரண்டாவது சுலோ கத்தில் நமக்குப் பிறர் பொருள் விரும்பாமை சஞ்சல மின்மை ஆகிய இரு பண்புகளும் கொடுக்கப்பட்டுள் ளன. இந்த இருபத்து நான்கு தெய்வீக சம்பத்துக் களிலும் லக்ஷ்மி தேவி ஆன்மீக சாதகனுடைய உள்ளத்தில் குடி கொண்டிருக்கிருள்.

சமம், தமம் இரண்டு தெய்வீக குணங்களும் சாதகனுடைய உள்ளத்தில் தோன்றுகின்றன. சஞ்ச லத்திற்கு எதிரான அமைதியும், சுயநலத்திற்கு எதிரான சுயநலமின்மையும் வெளிப்படுகின்றன.

பணிவு: சாதகனுடைய உள்ளத்தில் தோன் றும் இந்தப் பண்பு லக்ஷ்மிதேவியின் முக்கியமான தொரு அம்சம். ஏனெனில் அவளுடைய பிரபுமஹா விஷ்ணுவிடத்தில் அவள் பணிவே வடிவாக விளங்கு கின்ருள். அதேபோல் கற்பிற்கும், தனது பகவா னுக்கு மனப்பூர்வமாகச் செய்யும் சேவைக்கும் அவள் ஒரு எடுத்துக்காட்டாக விளங்குகின்ருள். அதே போல் சாதகனுடைய உள்ளத்தில் குருபக்தி வடிவா கவும், அனன்ய பாவத்துடன் செய்யும் குரு சேவை வடிவாகவும் வெளிப்படுகின்ருள்.

அன்னை பராசக்தி சாதகனிடத்தில் கூரிய உற்று நோக்கும் தன்மையாகவும், விழிப்பு, எச்சரிக்கை ஆகியவையாகவும் தோற்றுகின்ருள். யோக மார்க்கத்தில் இப்பண்புகளை உடைத்தாயிருப்பது மிகவும் முக்கியமானது. இதில் சோம்பல் கூடாது. மதிப்பிடற்கரிய, விலைமதிப்பற்ற பாடங்களைக் கற்றுக் கொள்ளக்கூடிய முக்கியமான விஷயங்களை சாதகன் தவற விட்டு விடவே கூடாது. ஆகவே ஆன்மீக சாதகனுக்கு உற்றுநோக்கும் தன்மை மிக முக்கிய மானது. ஏனெனில் வாழ்க்கை யெனும் பள்ளியில் அனுபவமே கல்வியாக இருப்பதாலும், இந்த அனுப வங்களை உற்றுநோக்குவதன் மூலமாகவே ஒருவன் மதிப்பு மிக்க பாடங்களைக் கற்றுக்கொள்ள வேண்டி யிருப்பதாலும் இந்தப் பண்பு ஒருவனிடம் இல்லையா யின் அவன் லக்ஷ்மி தேவியின் முக்கியமான அம்சத் தை இழந்தவனுகவே ஆவான்.

ஒழுக்கம்: ஒரு சாதகனுக்கு ஆன்மீக ஒழுக் கம் அவசியம். இங்கு இது மங்களத்திற்கு அறிகுறி. ஏனெனில் இது தன்னடக்கத்திலிருந்தும், மன உறுதிபாட்டிலிருந்தும் காக்கும் அம்சமாக வெளிப் படுகின்றது.

நமக்குத் தேவையான திட சக்தியையும், மன உறுதிபாட்டையும் அன்னை சக்தி வடிவமாக நமக்கு கொடுக்கிருள். இது சாதனையில் பலன்தர வேண் டுமாகில் ஒருவர் முறையான, இடைவிடாத, தொ டர்ச்சியான சாதனை செய்து வரவேண்டும். ஆகவே ஒருவருடைய ஆன்மீக சாதனையில் தொடர்ச்சி,

ஒழுங்குப்பாடு என்னும் இரு வழிகளில் லக்ஷ்மி தேவி விஷ்ணு சக்தியாக சாதகனுடைய உள்ளத்தில் தோன்றுகின்ருள். ஏனெனில் இந்த இரு பண்புகளும் சாதகனுடைய யோக அப்பியாசத்தைக் காத்து வருகின்றன.

விடாப்பிடியும் விடா முயற்சியும்: இந்த இரண்டும் தெய்வீக சம்பத்தின் இரண்டு அம்சங்கள். இதன் மூலம் லக்ஷ்மி வெளிப்படுகின்ருள். அடுத்த படியாக பற்றற்ற தன்மை, போதும் என்ற மனப்பான்மை, திருப்தி அல்லது சந்தோஷம் முதலிய குணங்களும் நமது உள்ளத்திலுள்ள லக்ஷ்மி தேவியின் தோற்றங்களே.

வீட்டிலே எவ்வாறு தூய்மை அவசியமோ அதேபோல் சாதகனுடைய வாழ்க்கையில் சௌசம் என்னும் அகத் தூய்மையும் புறத் தூய்மையும் லக்ஷ்மியின் அம்சங்கள் என்னும் முறையில் அத்தியாவசியமாகும்.

ஆரோக்கியமும், உற்சாகமும் அம்பிகையின் அம்சங்களே.

### அன்னையை அலட்சியப்படுத்தாதீர்கள்

குடும்ப வாழ்க்கையிலும், யோக சாதன வாழ்க்கையிலும் அன்னையின் தோற்றங்களை இதுவரை தொகுத்துக் கூறிய பிறகு அன்னையினுடைய தெய்வீக சக்தியின் அம்சம் தோன்கின்ற முறையில் ஒரு முக்கியமான நியதியை நாம் ஞாபகத்தில் வைக்க

வேண்டும். எங்கெங்கு லக்ஷ்மி தேவி வழிபட்டு உபசரிக்கப்படுகின்ருளோ அங்கெல்லாம் அவள் தங்கியிருக்கிருள். எங்கெங்கு புறக்கணிக்கப்படு கின்ருளோ அங்கெல்லாம் அவள் தங்குவதில்லை. குடும்ப வாழ்க்கையிலாயினும், சாதன வாழ்க்கையி லாயினும் சரி, இதை எல்லோரும் ஞாபகத்தில் வைத்துக் கொள்ளவேண்டும். இதை அறிந்து ஒவ்வொருவரும் அன்னையை அலட்சியப்படுத்து வதைத் தவிர்த்து மிக ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். லக்ஷ்மி தேவியின் அம்சங்கள் வெளிப் படும்பொழுது நாம் அவற்றைப் பயன்படுத்தாது புறக்கணிப்போமேயாகில் நாம் அம்பிகையை அலட் சியப்படுத்தியவர்களாவோம். அங்கு நாம் அவளை கௌரவப்படுத்தத் தவறியவர்களாவோம். ஏனெ னில் அவளை கௌரவிக்கவே நம்மை அவள் வைத் திருக்கிருள். ஆகவே லக்ஷ்மியைப் புறக்கணித்து அலட்சியப்படுத்திஞல் ஆன்மீக, லௌகீக செல்வ மும், சந்தோஷமும் அவ்வாறு புறக்கணிப்பவரை விட்டு நீங்கிவிடும்.

இந்த முக்கியமான நியதியை உணர்ந்து எந்த அம்சத்திலும் லக்ஷ்மியைப் புறக்கணித்து அலட்சியப் படுத்தாமல் எச்சரிக்கையாக இருந்து கொள்ள வேண்டும். இதன் காரணமாகத்தான் ஹிந்து இல்லங்களில் சாப்பிட உட்காரும்போது கோபப்படக்கூடாது. என்ற நியதி இருந்து வருகிறது. சாப்பிடும் வேளையில் யாரும் கடுஞ்சொல் பேசக்கூடாது. அன்னத்தை மறுப்பது மிகப்பெரிய

தவருகும். ஏனெனில் உலகில் ஜீவித்திருப்பதற்கே மூல காரணமாக விளங்கும் அன்னத்தை அலட்சியப் படுத்துவது லக்ஷ்மியை அவளுடைய தோன்றும் அம்சத்தில் அவமதித்து ஒதுக்குவதாகும். யாரும் அன்னத்தை அலட்சியப்படுத்தவோ அதை அவமரியாதை செய்வதோ கூடாது. ஆகவேதான் இந்த முக்கியமான உண்மையை ஏற்றுக்கொண்டுள்ள ஹிந்து குடும்பத்தில் உள்ள கிருஹ லக்ஷ்மி அன்னத்தைக் கீழே சிந்த விடமாட்டாள். சாதத்தை மிதிப்பது பெரும் தவறு. அன்னம் லக்ஷ்மியின் அம்சம். யாரும் அன்னத்தை வீணுக்குவதோ அநாவசியமாக விட்டெறிவதோ கூடாது. ஏனெனில் அன்னத்தை எறிவதால் நாம் அன்னையின் முக்கியமான இந்தத் தோற்றத்திற்குக் கொடுக்க வேண்டிய தகுதியையும், முக்கியத்துவத்தையும் கொடுக்கத் தவறியவர்களாகின்றோம். நாம் அன்னத்தை தானமாகக் கொடுக்கலாம்; மிருகங்கள், பசு, நாய், பூனை மற்றும் பசியோடிருக்கும் எந்த ஜீவராசிக்கும் உண்பிக்கலாம் இதில் ஒன்றும் தவறு கிடையாது. ஆனுல் வேண்டுமென்றே அன்னத்தை வீணுக வீசியெறியக்கூடாது. ஏனெனில் அன்னை தன்னிச்சையாக நம்மைத் தேடி வந்திருக்கும் பொழுது நாம் அவளுடைய தகுதியை அறிந்துகொள்ளத் தவறிவிட்டால் நமக்குத் தேவையான பொழுது அவள் காணுமல் போய்விடுவாள் என்பதை ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டும்.

சாதகனிடத்தில் தோன்றுகின்ற அன்னையின் மற்ருெரு முக்கியமான அம்சம் ஞாபகச் சக்தி. "யா

தேவி ஸர்வ பூதேஷு ஸ்மிருதி ரூபேண ஸம்ஸ்திதா" ஆகவே ஆன்மீக சாதகன் அன்னையின் இந்த அம்சத்தை விருத்தி செய்துகொள்ள முயற்சிக்க வேண்டும். அன்னை எல்லா ஜீவராசிகளிடத்திலும் ஸ்மிருதி ரூபமாக இருக்கிருள் என்று தேவீ சூக்தம் கூறுகின்றது. குருவின் வாக்கிலிருந்தும், மற்றும் பெரிய மகான்கள் அனைவருடைய வாக்கிலிருந்தும், உதாரணத்திலிருந்தும், இவ்வுலகத்தில் நாம் இந்த ஞானத்தைப் பெறும் தெய்வீக மனிதர்களிடமிருந்தும் மதிப்பு மிக்க, உன்னதமான, ஞான உபதேச அமிர்த தாரையாக வருகின்ற மொழிகளை ஞாபகத்தில் வைக்க வேண்டும். ஸ்மிருதியின் மூலமாகத்தான் இந்த ஆன்மீக உபதேச ரத்தினங்கள் பாதுகாக்கப்பட்டு வருகின்றன; நாம் அவற்றை ஞாபகத்தில் வைக்காமல், அவற்றை சிந்திக்காமல், மனன நிதித்யாசனம் செய்யாமல் இருந்து வருவோமேயாகில் நாம் இந்த உபதேசங்களின் முழுப் பயனையும் அடைய முடியாது. நம்மிடம் அன்னையின் இந்த தெய்வீக அம்சமாகிய ஞாபக சக்தி இல்லையேல் நம்மால் குரு கட்டளைகளை திருப்திகரமாக நிறைவேற்றி வைக்க முடியாது. ஆகவே நாம் லக்ஷ்மி தேவியின் இந்த முக்கியமான அம்சத்தைப் புறக்கணித்துவிட்டு "எனக்கு ஞாபகமில்லை" என்று சாக்குப் போக்கு சொல்லக் கூடாது. குருவினுடைய உபதேசத்தை நாம் ஞாபகத்தில் வைத்துக் கொள்ளவில்லையானுல் நாம்தான் நஷ்டமடைந்தவர்களாவோம்.

ஆகவே நாம் அன்னை லக்ஷ்மியிடம் நம்முடைய இல்லங்களையும், உள்ளங்களையும், தனது வித்யா அம்சமாகிய தெய்வீக குணங்களால் நிரப்பி, நாம் அவளுடைய சந்நிதானத்தை அங்கு நல்ல முறையில் பயன்படுத்தி அதன் மூலம் அன்னையை கௌரவித்து வழிபடுவதற்கு ஆசீர்வதிக்குமாறு வேண்டிக்கொள்வோமாக. இவ்வாறு நாம் இங்கும், இனிமேலும் நிலையான நலத்தை அடைவோமாக.

நமது தெய்வீக குருதேவருடைய புனித பாத கமலங்களில் அடைக்கலம் புகுந்து அவருடைய உபதேசங்களின்படி நமது வாழ்வைப் பக்குவப்படுத்த முயற்சிக்கும் பாக்கியம் பெற்று, இந்த புனிதமான ஆனந்த குடீரத்தில் அம்மாதிரியான உயர்ந்த தெய்வீக வாழ்வு வாழ்ந்து காட்டப்படுவதை நேரில் கண்டு களிக்கக் கூடிய பேறு பெற்றும் இருப்பவர்களாகிய எல்லா பக்தர்களுக்கும், சாதகர்களுக்கும் ஒரு சில முக்கியமான வார்த்தைகளைக் கூற விரும்புகின்றேன். இங்கு அன்னை பராசக்தியின் பூர்ண பிரகாசமும், பூர்ண மகிமையும் பொருந்திய மிக அபூர்வமானதொரு தோற்றத்தை நாம் கண்டு கொண்டிருக்கிறோம். ஏனெனில் அவள் தன்னையே இந்த ஒப்பற்ற ஆஸ்ரமமாகவும், சகல தெய்வீக சம்பத்துக்களும் ஏராளமாக நிறைந்துள்ள ஈடு இணையற்ற ஸ்தாபனமாகவும் இங்கு அர்ப்பணித்திருக்கின்றாள். ஏனெனில் இது ஒரு ஒப்பற்ற, மங்களமே வடிவான, ஆசீர்வதிக்கப்பட்ட புண்ணிய க்ஷேத்திரம். நாம் அபூர்வமான மானிடப் பிறவி எடுத்து, ஒப்பற்ற முமு

ஸு[illegible]த்வமாகிய நல்ல அதிருஷ்டத்தைப் பெற்று, இதற்கெல்லாம் சிகரம் வைத்தாற் போல் மிக உன்னதமான நிலையில் ஆத்மாநுபூதி அடைந்துள்ள முனிபுங்கவரோடு சத்சங்கம் கொள்ளுகின்ற மூன்றாவது ஆசியையும் பெற்று, இத்தனைக்கும் மேலாக அன்றாடம் சாதனையின் சகல அம்சங்களும் காக்கப் பட்டு, சகல வழிகளிலும் உதவி செய்யப்பட்டு வருகின்ற இந்த அற்புதமான இடத்தையும் பெற்று இருக்கிறோம்.

இங்கு, பக்தர் ஆலயத்திற்குச் சென்று உபாசனை செய்யவும், இறைவனுடைய நாமத்தை ஜெபிக்கவும், பஜனை மண்டபத்திற்குச் சென்று கீர்த்தனம் செய்யவும், அபரிமிதமான வாய்ப்புக்களும், சிரவணம், ஸ்மரணம் மற்றும் நவவித பக்தி மார்க்கங்களை அனுஷ்டிக்க சகலவிதமான வசதிகளும், ஆலயத்திலோ அல்லது ஆரண்யத்திலோ, ஒப்பற்ற புனித கங்கைக் கரையிலோ, அற்புதமான சூழ்நிலையில் ஜபம் செய்வதற்கேற்ற சகல சௌகரியங்களும் இருக்கின்றன.

வேதாந்தியாக இருந்தால் உன்னதமான உபநிஷத் சம்பாஷணைகளைக் கேட்கவும், ஸ்ரீஸ்வாமி கிருஷ்ணானந்தஜீ போன்ற மகாத்மாக்களோடு சத் சங்கம் கொள்ளவும், அடர்ந்த அடவிகளுக்கு மத்தியில் ஏகாந்தமாக ஆழ்ந்த தியானத்தில் மூழ்கியிருக்கவும் ஏற்ற வசதிகள் இருக்கின்றன.

இதே போல் கர்மயோகிக்கும் வாய்ப்புக்கள் உள்ளன. கர்மயோகிக்கு இது கண் கண்ட சொர்க்க லோகம். ஆனால் அவர்களிடத்தில் மட்டும் தங்கள் வாழ்க்கையை ஆன்மீக மயமாக்கி அதையே சாதனை யாக மாற்ற வேண்டும் என்கின்ற உண்மையான ஆவல் மட்டும் இருக்க வேண்டும்.

ராஜயோகிகளுக்கும் இம்மாதிரியே. சகல நற் பண்புகளையும் விருத்தி செய்து கொள்ளவும், ஆசன, பிராணாயாமங்கள் பயிலவும் இங்கு மிகச் சிறந்த வச திகள் உள்ளன.

சுருங்கக் கூறுமிடத்து இது ஒரு சம்ஸ்கிருத பண்டிதர் கூறியதைப் போல இதைப் போன்ற இடம் "ந பூதோ ந பவிஷ்யதி".

மகோன்னத லக்ஷியத்திற்கு அழைத்துச் செல்வதற்கும், மானிட வாழ்வின் எல்லையை அடை வதற்கும், சாசுவத ஆசீர்வாதத்தைப் பெறுவதற்கும் உரிய சகல விதமான சாதனைகளையும் செய்வதற் கேற்ற சகலவிதமான வசதிகளுடனும் கூடிய இது போன்ற அற்புதமானதொரு இடத்தைக் காண்பது மிக மிக அபூர்வமாகும். இந்த க்ஷேத்திரம் லக்ஷ்மி தேவியின் பிரத்யக்ஷத் தோற்றமாகும். இங்கு அன் னையானவள் மிக அற்புதமாக, தன்னுடைய கருணா சொரூபம் முழுவதையும் சிறிதும் தயங்காது வாரி வழங்கியிருக்கின்றாள். கங்கை, ஹிமாலயம், குரு, கோவிந்த ஆராதனை மற்றும் என்ன வேண்டுமோ அத்தனையும் கொடுத்திருக்கிறாள். மிகுதியாக நமக்கு

விட்டு வைத்திருப்பது யாதெனில் நாம் அவற்றை உரிய முறையில் கௌரவித்து அன்னை லக்ஷ்மியின் இந்த அற்புத வடிவங்களை ஆராதனை செய்து, நமக்குக் கிடைத்துள்ள இந்த அரிய வாய்ப்புக்களையெல்லாம் தக்க முறையில் பயன்படுத்தி வாழ்வை மலரச் செய்து கொள்ள வேண்டியதுதான்.

சிறிது நேரத்திற்கு முன் நான் தங்கள் கவனத்திற்குக் கொண்டுவந்ததைப் போல இந்த தெய்வீகக் கருணை வடிவங்களில் அன்னை பராசக்தி நமக்கு அளித்திருக்கும் ஆசிகளை நாம் அலட்சியப் படுத்திப் புறக்கணிக்கும் பாதகத்தைச் செய்யாதிருப்போமாக. கிடைத்த சந்தர்ப்பத்தைப் புறக்கணிப்போமேயாகில் மீண்டும் ஒரு சந்தர்ப்பம் கிடைக்காது. வாழ்க்கை அநித்தியமானது. காலம் விரைந்தோடிக் கொண்டிருக்கிறது. இம்மாதிரியான அற்புதச் சூழ்நிலையில் கிடைத்திருக்கும் மானிடப் பிறவி விரைவில் பறந்தோடிவிடும். இதைப் புறக்கணித்துவிட்டு பிறகு பச்சாதாபப்படுவது மிகவும் வருந்தத்தக்க விஷயமாகும். பிறகு இப்பொழுது இழந்த வாய்ப்பை ஈடு செய்ய முடியாத நிலையில்தான் நாம் இருக்க வேண்டி வரும் அன்னை ஒரு முறை கொடுத்த வாய்ப்பை உதறி தள்ளிவிட்டால், மீண்டும் அவள் அவ்வளவு எளிதில் வரமாட்டாள். மீண்டும் அதைப் போன்ற சந்தர்ப்பத்தைப் பெறுவது மிகவும் துர்லபம் ஆகவே கருணை என்னும் ஊற்றுப் பெருக்கெடுத்து ஓடிக் கொண்டிருக்கும்போதே, நாம் விழிப்புடனும், எச்சரிக்கையுடனும் இருந்து, சாதனையில்

எல்லா வழிகளிலும் புத்திசாலித்தனமாக ஈடுபட்டு, விடாமுயற்சியுடன் பாடுபட்டு குருதேவருடைய பாதார விந்தங்களின் ஆசிகளின் மூலமாகவும், அன்னை லக்ஷ்மி தேவியின் கருணையின் மூலமாக வும், நமது தாகத்தை தீர்த்து, பூமியில் வாழ்க்கைப் பயணத்தைச் சீக்கிரம் முடித்து, நிரந்தர ஜோதியும், சாசுவதப் பேரானந்தமும், அமரநிலையும், தெய்வீகப் பூரணத்துவமும் நிறைந்த நமது சொந்த சாம்ராஜ் யத்தை அடைவோமாக!

# ஏழாவது இரவு

## சிருஷ்டி:

### அன்னையின் வீணா கானம்

சகல சிருஷ்டிக்கும் முடிவான லக்ஷ்யமாகவும் ஆதாரமாகவும் ஆதரவாகவும் இருப்பவளாகிய அன்னை பராசக்திக்கு வணக்கங்கள், நமஸ்காரங் கள். தோற்றமனைத்திற்கும் மூலாதாரமாகவும், முடிவிற்கு முடிவாகவும், ஞானம் அனைத்திற்கும், சிருஷ்டி முறை முழுவதற்கும் எல்லையாகவும் விளங் கும் ஞான தாயினியாகிய அன்னை பராசக்திக்கு மீண்டும் மீண்டும் நமஸ்காரங்கள். அவளுடைய கருணை நம்மனைவருக்கும் கிட்டுமாக!

இன்று நாம் பரம்பொருளாகிய பராசக்தியை அவளுடைய மஹா சரஸ்வதி என்னும் அம்சத்தில் வழிபட்டு ஆராதிக்கும் உள்ளத்தினர்களாக வந்தி

ருக்கிறோம். மஹா சரஸ்வதி தூய பிரம்மத்திலி ருந்து சப்த பிரம்ம வடிவமாகத் தோன்றிய முதல் தோற்றமாகும். மஹா சரஸ்வதி ஜீவன் மற்றும் சகல தோற்றங்கள் முழுவதினுடைய பரிணமத்திற் கும் மூலாதாரமாகவும், முடிவாகவும் விளங்குகின் றாள். பிரம்ம சக்தி என்னும் முறையில் சிருஷ்டி யைத் துவக்கும் மஹா சக்தியாக அவள் விளங்கு கின்றாள்.

நாம, ரூபங்களற்றதும், மனம், புலன்களுக் கப்பாற்பட்டதுமாகிய பரம தத்துவத்திலிருந்து வெளிப்படும் சகல நாம ரூபங்களினுடைய துவக்கத் திற்கும் அவள் தலைமை வகிக்கிறாள். ஆகவே ஜீவ சிருஷ்டி முழுவதற்கும் அவளே மூலாதாரமாக விளங் குகிறாள். இருப்பினும் இந்த ஜீவ சிருஷ்டி முறை அகண்ட ஏகரஸ சச்சிதானந்தப் பொருளிலிருந்து பாய்ந்தோடி வந்து படிப்படியாக அதிகரித்து ஸ்தூல வஸ்து நிலையை அடைந்து மஹா மாயையின் சாம் ராஜ்யத்தில் எண்ணற்ற லட்சோப லட்சம் நாம ரூபங்களாகத் தோன்றி, மாயா உலக லீலை என்னும் முறையில் அவள் பின்னணியிலிருந்து கொண்டு தனது ஏனைய அம்சங்களான விஷ்ணு மாயை, துர்க்கை என்பவைகளால் இந்த முன்னேற்றத் தொழில் நடக்கும்படி செய்து வருகிறாள். ஆனாலும், பரம்பொருளின் கருணையானது ஜீவனைத் தன் பக் கம் திருப்பியழைக்கும் வேலையைத் தொடங்கி, இந்த பரிணமச் சக்கரச் சுழலை முடிக்கத் துவங்கி, ஜீவன் மீண்டும் யோக மார்க்கத்தின் அக வழியில் பலவித

ஸ்தூல உணர்வுப் படிகளை வகுத்துவிட்டு தூய்மை, சத்துவம், தெய்வீக சம்பத்; ஆன்மீகப் பண்பு முத லிய உயர்ந்த படிகளில் ஏறத் தொடங்கி, மீண்டும் தனது யோக ஏணியின் உச்சியை அடையும்பொழுது அன்னையானவள் ஜீவனுக்கு மஹா சரஸ்வதியாக, தூய ஞான ஒளியாகத் தோற்றமளித்து அவனுடைய உணர்வில் ஆத்ம ஞானமாக, பிரம்ம ஞானமாகத் தோன்றி பரிணமச் சூழலை முடித்து ஜீவனை மீண்டும் பரப்பிரம்மத்தோடு ஐக்கியமாகும்படி செய்கிருள். இவ்வாறு சிருஷ்டி சக்தி என்னும் முறையில் அன்னை சரஸ்வதி நாம ரூபமற்ற பரப்பிரம்மத்திலிருந்து, ஏகத்திலிருந்து அநேகமாக விரிவடையும் முறைக்கு, முடிவான ஞானதாயினியாக. தூய ஞான வடிவில் தோன்றும் முடிவான தோற்றமாக விளங்குகின்ருள். இந்தச் சுழற்சியை அவள் முடித்து வைக்கிருள். இவ் வாருக அவள் இந்த உலக லீலை முழுவதையும் முடிப்பதைக் காண்கிருேம்.

இந்த இரண்டு அம்சங்களிலும் அன்னை வழி பாடு செய்யப்படுகிருள். குறிப்பாக சாதகருக்கும் யோகிக்கும் அன்னை விசேஷ முக்கியத்துவம் வாய்ந் தவள். ஏனெனில் கைவல்ய மோக்ஷத்தை அடை வதற்குரிய பரம ஞானத்தை அவள் அருளுபவளாக இருக்கிருள்.

### யோக முறையும் அப்பியாஸமும்

அன்னையின் வடிவம் அன்னை சரஸ்வதியின் இந்த மேலான இரண்டு காரியங்களையும் வெளிப்

படுத்திக் காட்டுவதை நாம் பார்க்கிறோம். கையிலே வீணை அதன் பொருளை இப்பொழுது கவனிக்கப் போகிறோம். மற்ற கைகளில் ஸ்படிக மாலையும், வேத கிரந்தத்தையும் வைத்திருக்கிறாள். அவளிடம் புஸ்தகம் இருக்கிறது. அவள் வைத்திருக்கும் அந்தப் புஸ்தகமும் மாலையும் நமக்கு, அன்னை தன்னகத்தே சகலவிதமான அபர, மற்றும் பரதத்துவத்தை அடக்கி வைத்திருக்கிறாள் என்பதை காட்டுகின்றன. சிருஷ்டி செய்யப்பட்ட வஸ்துக்கள் அனைத்தினுடைய பரிபூர்ண ஞானமும், சகல சிருஷ்டிகளுக்கும் மூலாதாரமும் முடிவுமாகிய பரப்பிரம்மத்தைப் பற்றிய சகல ஞானமும் தன்னகத்தே அடங்கப் பெற்றுள்ள வேதங்கள் அனைத்தையும் அவள் தன் கையில் வைத்திருக்கின்றாள். ஏனெனில் அவள் வேதங்களையே சிருஷ்டித்த பிரம்மாவினுடைய ஒரு அம்சம். பிரம்மாதான் வேத பிதா, தவே தாதா. சரஸ்வதி என்னும் முறையில் அன்னை, சதுர்முக பிரம்மாவினுடைய சக்தியாக விளங்குகின்றாள். ஆகவே அவள் வேத ஞானத்தின் வெளித்தோற்றமாக இருக்கின்றாள் வேத ஞானமாக இருப்பவர் பிரம்மா அதற்கு மூல சிருஷ்டி கர்த்தா அவர். ஆகவே பிரம்ம ஞானத்தை அடக்கிக்கொண்டுள்ள வேத கிரந்தத்தை தன் கையில் சரஸ்வதி தாங்கிக் கொண்டிருக்கிறாள். அனுபூதி மார்க்கத்தில் நேரடியாக வேதங்களிலிருந்தும், புத்தகங்களிலிருந்தும், குருவினுடைய வாக்கிலிருந்தும், பெறப்பட்ட இந்த உண்மைகளை பிரத்தியக்ஷ அப்பியாசத்தின் மூலமாகவும் நிதித்தியாசனத்தின் மூலமாகவும் அனு

பவமாக மாற்றவேண்டும். யோக சாதனை வடிவில் உள்ள வேதப் பொருளை அப்பியஸிப்பதை அன்னை யின் வலக்கரத்திலுள்ள தூய ஸ்படிக மாலை காட்டு கின்றது அந்த மாலை யோக அப்பியாஸத்தை நடை முறைக்குக் கொண்டுவர வேண்டும் என்பதனைவற் புறுத்திக் காட்டுகிறது. ஆகவே அன்னையானவள் வேத ஞானத்தின் தத்துவ ரீதியாகவும், யோக ஆன் மீக சாதனை என்னும் நடைமுறைப் பயிற்சி ரீதியாக வும் இருந்து அதற்குரிய சக்தியாகவும் விளங்கு கின்றாள்.

## தூய்மையே வடிவான அன்னை

அன்னை மிகத்தூய வெண்மை ஆடை உடுத்தி யிருப்பவளாகவும், அப்பழுக்கில்லாத, களங்கமற்ற, அழகுகளுக்கெல்லாம் அழகாக விளங்குபவளாகவும் இருக்கின்றாள். அவளுடைய அழகை அல்லி மல ருக்கும், சந்திரனுக்கும், என்றும் குன்றா அழகுடைய இமயமலை பனித்தொடர்களுக்கும் ஒப்பிட்டுக் கூறப் படுகிறது. "யாகுந்தேந்து துஷார ஹாரதவளா" குந்தம் என்பது அல்லி. இந்து என்றால் சந்திரன். துஷாரஹாரம் என்றால் பனித்தொடர் என்று பொருள். அவள் இவ்வுலகில் நாம் அறிந்த மிகச் சிறந்த வெண்மை வஸ்துக்களாகிய இந்த மூன்று பொருள்களைப் போல் அவ்வளவு வெண்மையாக இருக்கிறாள். அவள் தூய வெண்மை ஆடையை உடுத்தி இருக்கிறாள். இது அன்னை சுத்த சத்துவ மயமாக விளங்குபவள் என்பதை எடுத்துக் காட்டு

வதற்கேயாம். ஏனெனில் பரப்பிரம்மத்திலிருந்து முதன் முதலில் கிளம்பியது அவளேயாகும்.

## அன்னையே சர்வமும்

வேதங்களில் கூறியுள்ளபிரகாரம்தோன்ருத, நிராகார, நிர்குணப் பரம்பொருளிலிருந்து முதன் முதலில் தோன்றிய பொருள் பிரணவம் என்பதை நாம் அறிவோம். முதலில் ஏற்பட்ட சத்சங்கல்ப மாகிய "ஏகோஹம் பஹுஸ்யாம் ப்ரஜயேயே"— "நான் ஒரே வஸ்துவாக இருக்கிறேன் நான் பல வாகக் கடவாது" என்று வேதங்கள் கூறுகின்ற வடிவில் மனே வாக்கைக் கடந்த பரம்பொருளின் முதல் விருப்பத்தோடு ஏற்பட்டது இந்த முதல் ஸ்பந்தனம் அல்லது நுட்பமான அதிர்ச்சி. ஒன்று எவ்வாறு பலவாயிற்று என்பதை நாம் ஓரளவு புரிந்து கொள்ளுவதற்காக இதை இந்த ரூபத்தில் குறிப்பாக எடுத்துக் கூறப்பட்டுள்ளது அதனுடைய முதல் சுத்த சங்கல்பம் ஒரு அதிர்ச்சி அலையாக (Vibration) தோன்றி, உடனே மேலான பிரணவ நாதமாகக் கிளம்பியது இந்த நாதபிரம்மம் அல்லது பிரணவம் அன்னையின் வடிவமேயன்றி வேறில்லை. அன்னை சரஸ்வதி பிரணவ ரூபிணியாக விளங்குகின்ருள். அவளிடத்தில் இந்த சப்த பிரம்மம் அல்லது நாத பிரம்மத்தின் இரண்டு அம்சங்களைக் காண்கின்ரும். சப்தம் பிரணவமாக இருக்கிறது நாதம் மூல சப்த ரூபம். அதை பிரத்தியக்ஷ பிரணவமாக தெளிவாக உச்சரிக்கும் பொழுது அது வாணியினுடைய பிரதேசத்திற்குள் வந்து விடுகிறது. தூய

சப்தம் வாணியாக ஆகின்றது. ஆகவே அன்னை வீணா வாணி என இருவிதமாகவும் குறிப்பிடப்படுகிறாள். தூய நாதத்தைக் கிளப்புகின்ற கருவியை அவள் வைத்திருக்கின்றாள். அவளே தெளிந்த ஒலியால் ஆக்கப்பட்ட நாமமாக இருக்கின்றாள். இந்த வடிவில் அவள் வாணியாக விளங்குகின்றாள். வீணையின் நாதம் சகல வேத மந்திரங்களுக்கும் பிறப்பிடம். இந்த முறையை நாம் தர்க்க ரீதியான முடிவிற்குக் கொண்டு செல்வோமாகில், அகில உலகமும் மேலான அன்னையின் வீணாகானத்தைவிட அதிகமானதோ, குறைவானதோ அல்ல என்பதைக் காண்போம். இந்த ஜகத் முழுவதும், சிருஷ்டி முழுவதும் அன்னை சரஸ்வதியின் வீணையிலிருந்து சதா சர்வ காலமும் வந்துகொண்டிருக்கும் கீதத்தின் தோன்றும் வடிவமேயன்றி வேறில்லை. ஏனெனில் தோன்றுகின்ற பிரபஞ்சம் முழுவதும் வடிவத்தால் ஆகியது என்பதை நாம் எல்லோரும் அறிவோம். நாம் கண்டு, தொட்டு புலன்களால் அறிவது அனைத்தும் ரூப வடிவமாக இருக்கின்றன. ரூபம் என்பது உலகை நமக்குப் புலப்படுத்திய கடைசி வழி. இப்பிரபஞ்சத்தில் உள்ள ஒவ்வொரு ரூபமும் ஒரு குறிப்பிட்ட பெயரால் தெரிவிக்கப்படுகிறது. இப்பிரபஞ்சம் உருவாக்கப்பட்டுள்ள எண்ணற்ற ரூபங்களின் பொருளும் எண்ணற்ற நாமங்களில் அடங்கியுள்ளன இந்த நாமங்கள் சில அக்ஷரங்கள் அல்லது எழுத்துக்களின் சேர்க்கையைத் தவிர வேறில்லை. இந்த நாமங்களுக்குக் காரணமான இந்த அக்ஷரங்கள் நாதத்தின் தெளிவாக்கப்பட்ட தோற்றங்களே

யன்றி வேறல்ல. தெளிவாக்கப்பட்ட சப்தம் அக்ஷரமாகத் தோன்றுகிறது. இந்த அக்ஷர சொரூபங்கள் ஒன்றோடொன்று சேர்க்கப்படும் பொழுது நாமத்தை உண்டாக்குகின்றன. அதனுடைய அர்த்தம் அல்லது பொருள் ரூப வடிவில் வெளிப்படுகின்றது. இதுதான் திருஷ்ய ஜகத் அக்ஷரங்களுக்கு மூல காரணமாக உள்ள இந்த நாதமானது முடிவில் தூய அதிர்ச்சி (Vibration) யாக உள்ளது. இந்த அதிர்ச்சி அல்லது ஒலி அலைதான் அன்னையினுடைய வீணையின் அசைவாகும்.

இவ்வாறாக, அன்னையின் வீணை, சரஸ்வதி வீணையின் தெய்வீகத் தந்திகள் அதிர்ச்சியைக் கிளப்பி, நாதத்தை எழுப்பி, குறிப்பிட்ட அக்ஷரங்களாக உருவாக்கப்பட்டு அதன் மூலம் நாமங்கள் உண்டாகி, இந்த நாமங்கள் எண்ணற்ற புறப் பொருள்களாக ஆகி, அவை இந்த ஜகத்தாக ஆகி இருக்கின்றன என்பதைக் கவனித்தோம்.

ஆகவே தோன்றுகின்ற இந்த உலகம் முழுவதும்— இதுமட்டுமல்ல மனோ வாக்கைக் கடந்த பரம்பொருளின் மூலம் ஒவ்வொரு நிமிடமும் பாய்ந்தோடிவந்து கொண்டிருக்கும் எண்ணற்ற உலகங்கள் அனைத்தும்—அன்னையின் வீணா கானத்தைத் தவிர வேறில்லை. இந்த கானத்திற்கு ஆதாரமாக விளங்குகின்ற சக்தி அன்னையே. அவள் மேலான சுத்த சத்துவமாக இருக்கின்றாள். அந்தக் கடைசி தத்துவத்தில் மூழ்கிவிடும் பொழுது நாம் உடனே

சதானந்த நிலையை அடைந்து விடுகின்றோம். அன்னை நம்மைப் பொறுத்தமட்டில் இதுதான் ஆகவே அவளுடைய வீணை ஓங்கார ரூபம். அகில உலகமும் தூய தேவ நாதமாக விளங்கும். அவளுடைய வீணையின் மூலம் வெளிப்படுத்தப்படும் அவளுடைய சக்தியின் தோற்றமேயாகும்.

## ஒளியின் முன் இருள் கெடுகிறது

மஹிஷாசுரனுடைய அழிவு காலம் வரும் பொழுது அசுரனை எதிர்த்து நிற்கும் வடிவத்தில் அன்னை தோன்றுகின்றாள் என்பதை நாம் "சப்த சதியில்" காணுகின்றோம் இது புரிந்து கொள்வதற்கு மிகவும் ஆர்வம் மிகுந்த விநோதமான விஷயமாக இருக்கும். சிருஷ்டி முழுவதும் மஹாசரஸ்வதி என்னும் முறையில் அன்னையின் தொழிலாக இருக்கும் பொழுது யுத்தகளத்தில் ரௌத்திர அம்சத்தில் அவள் எவ்வாறு வந்தாள்? தூய சிருஷ்டி அம்சம் என்ன அழிவைச் செய்துவிடமுடியும்? ஆனால் தூய பிரம்ம, ஞான வடிவில் பரிணாம முறையின் மற்றொரு முனையில் சுழற்சி முற்றுப்பெறும் பொழுது அன்னையின் அம்சத்தை நாம் ஒரு வினாடி சிந்தித்துப்பார்ப்போமேயாகில் இந்த விஷயம் உடனே தெளிவாகி விடும். ஏனெனில் உண்மையில் அவள் எதையும் சம்ஹாரம் செய்யாததைப் போலத்தான் தோன்றும். ஆனால் அவளை ஒருவர் அடைந்தவுடன், தனது ஜோதி சொரூபத்தை வெளிப்படுத்திக் காட்டியவுடன் பிறப்பிறப்புச் சுழற்சி முடிவடைந்துவிடுகிறது.

ஆகவே அவளுடைய தோற்றமாத்திரத்தாலேயே சம்சாரப்பிணி சம்ஹாரம் செய்யப்பட்டு மரணம் அன்னையின் தோற்ற மகிமையைக் கண்டவுடன் மரண மடைந்து, அறியாமை இருள் அழிக்கப்பட்டு விடுகிறது. ஆகவே அவள் உண்மையில் எதையும் அழிப்பது கிடையாது. ஆனால் அவளுடைய தோற்றத்தைக் கண்டவுடன் அஞ்ஞானம் தானாகவே அழிந்து போய்விடுகிறது. அதனால் சம்சார சக்கரம் நிறுத்தப் பட்டு விடுகிறது. அன்னையானவள் ஜீவனிடத்தில் மிச்சம் மிகுதியுள்ள ஜடத்துவத்தையும் நிரந்தரமாக அழித்துவிடுகிறாள் ஜீவன் சுத்த சைதன்ய பிரம்மத்தோடு ஒன்றாகி விடுகின்றான் அறியாமையாகிய இருளைப்போக்க ஜடத்துவம் அனைத்தையும் அழிக்க, மரணத்தையே மாரணம் செய்ய, "புனரபிஜனனம், புனாபிமரணம்" என்னும் முறையை முற்றிலும் ஒழிக்க உணர்வு நிலையிலே மஹா சரஸ்வதியின் தோற்றம் ஒன்றே போதுமானது. இவ்வாறு அன்னை தனது தோற்ற மாத்திரத்தினாலேயே ஜீவனுக்குப் பூரண பிரம்மஞானத்தைக் கொடுத்தருளுகின்றாள். இவ்வாறு அன்னை வழிபாடு, மிக முக்கியமான அழகான முக்கியதத்துவம் வாய்ந்திருப்பதைக் காண்கின்றோம். இதில் நமது முடிவான விடுதலைக்கு காரணமாக இருக்கின்ற அந்த பரமசக்தி வழிபாடு செய்வது அடங்கி இருப்பதோடுகூட, அதேசமயத்தில் விராட்டை வழிபடுவதும் சேர்ந்திருக்கிறது. எப்படியெனில் நாம் அன்னையை மஹா சரஸ்வதியாக வழிபடும் பொழுது, நாம் இப்பிரஞ்சம் முழுவதையும் வழிபடுகின்றோம். இது எப்படி என்பதைத்தான்

இப்பிரபஞ்சம் முழுவதும் அவளுடைய தெய்வீக நாத ரூபமாக இருக்கிறது என்பதன் மூலம் சற்று முன்பு அறிந்துகொண்டோம். ஆகவே நாம் காணுகின்றது எதுவாயினும் அன்னை சரஸ்வதியின் தூய உருப்பளிங்கு சக்தியைத் தவிர வேறில்லை. அன்னைக்கு நாம் வணக்கம் செலுத்தும்பொழுது நாம் பரம்பொருளின் தாய்த்தன்மைக்கு வணக்கம் செலுத்துவதோடு, பரம்பொருளின் விராட் சொரூபத்திற்கும் வணக்கம் செலுத்துகின்றவர்களாகின்றோம். அதே சமயத்தில் பராசக்தியின் அம்சத்தையும் வணங்குகின்றோம். அன்னை பராசக்தியின் கருணையினாலேதான் நாம் முடிவில் அஞ்ஞான இருளின் பிடியிலிருந்து விடுபட்டு, அமர நிலையும், எல்லையிலா ஞானமும், அழிவிலாப் பேரின்பமும் கூடிய பெரு வீட்டிற்கு அழைத்துச் செல்லப்படுகின்றோம்.

## எட்டாவது இரவு

### வெற்றி தேவதை

இப்பிரபஞ்சம் அனைத்திற்கும் முடிவான லக்ஷியமாகவும், ஆதாரமாகவும் விளங்குகின்ற பரம தேவதாய்க்கு நமஸ்காரங்கள். பிரம்ம ரூபிணியாக இருப்பவரும், மனோ வாக்குகளைக் கடந்த சத்வஸ்துவின் விநோதமான வர்ணிக்க முடியாத சக்தியாக இருப்பவருமாகிய அந்த அன்னைக்கு நமஸ்காரங்கள் சரஸ்வதியாகத் தோன்றியுள்ள அந்தப் பரமசக்

திக்கு, அந்த ஆதி சக்திக்கு, அந்தப் பராசக்திக்கு மீண்டும் மீண்டும் நமது வந்தனங்கள். அவர், துன்பமும் தொல்லைகளும் நிறைந்த இந்த உலக வாழ்விலிருந்து நமக்கு மேலான பரப்பிரம்ம ஞானத்தை அளித்து நம் எல்லோருக்கும் விடுதலை நல்குகின்றார்.

தோன்றுகின்ற இந்த சிருஷ்டி அனைத்தும், தோற்றங்கள் அனைத்தும் மனிதனுடைய புலன்களுக்கு அப்பாற்பட்ட அனந்தகோடி பிரம்மாண்டங்களும் அன்னை சரஸ்வதியின் அற்புத தோற்றங்களாகும். அவள் சகல உணர்வையும் கடந்த பரம்பொருளின் முக்கிய சக்தியின் அம்சமாக இருக்கின்றார் சரஸ்வதிதான் முதன் முதலில் நாத ரூபமாகத் தோற்றமளித்தாள். ஆகவே அவள் நாத ரூபிணியாக வழிபடப்படுகின்றாள். அவள் சித் ரூபிணி அல்லது சப்த ரூபிணியாகவும் விளங்குகின்றாள். ஏனெனில் அவள் பிரணவ சொரூபமாக இருக்கிறாள். மனோவாக்கைக் கடந்த நிலைபேறு தூய உணர்வு நிலையாகும். இது நிச்சலமானது, நிஷ்கிரியையானது. அதில் இம்மியும் சலனம் கிடையாது. இது நிஷ்பந்தமானது. அதிலிருந்து சப்தம், செயல், அசைவு முதலிய எதுவும் ஏற்படுவது கிடையாது. இந்த எல்லையற்ற பிரக்ஞான கனத்தில், ஆனந்த கனத்தில் முதலில் எவ்வாறு ஒரு மூலப் புள்ளி தோன்றியது என்பதை வேதங்கள் விளம்புகின்றன. இந்தப் பிரக்ஞான கனத்தில் தோன்றிய இந்த மூலப் புள்ளிதான் பிந்து. சகல சிருஷ்டிக்கும் இது மூலமாக இருந்தது. பிறகு பிந்து தன்னை நாதமாக

வெளிப்படுத்திக் காட்டியது. எல்லையிலா பிரக்ஞான கனத்தில் பிந்துவாகத் தோன்றிய இந்த ஆதி ஸ்பந்தமானது தன்னை நாதமாக வெளிப்படுத்திக் காட்டிக் கொண்டது. இதுதான் மஹா சரஸ்வதி. ஆகவே தான் சரஸ்வதி வர்ணங்கள் எதுவும் இல் லாத தூய வெண்மையான ஆடையை உடுத்தியிருப் பதாகவும், சகல நாதங்களுக்கும் சக்தியாக விளங் கும் வீணையைத் தரித்திருப்பதாகவும் பாவிக்கின் ரோம். தூய தொனி வடிவிலுள்ள மூல நாதத்திலி ருந்து எல்லாவிதமான தோற்றங்களும் தீர்க்க சப்த மாகத் தோன்றத் தொடங்கின. தீர்க்க தொனியாக இருப்பது வாக்கு. வாக்கானது வர்ணம் அல்லது எழுத்துவடிவில் வெளிப்படுத்திக் காட்டப்படுகிறது. எழுத்தொலிகள் ஒன்று சேர்ந்து வார்த்தை அல்லது நாமத்தை உண்டாக்குகின்றன. இந்த நாமத்தில் அடங்கியுள்ள அர்த்தம் ரூபமாக வெளிப்படுகின்றது. தோன்றுகின்ற இப்பிர பஞ்சத்தில் நாம் காணுகின்ற பொருள்கள் அனைத்தும் ரூபம் உடையனவாக இருக் கின்றன. ஆனந்த ரூபமாக உள்ள இத்தோற்றம் சப்தப் பிரம்மம் அல்லது சரஸ்வதி தேவியின் எல்லை யற்ற பலனாக அமைகின்றது. அது தொனி, வாக், வர்ணம், நாமம், ரூபம் என்று இவ்வாறு பல படிகளைக் கடந்து வந்திருக்கிறது. தோன்றியுள்ள சிருஷ்டி அனைத்தினுடைய சாரமும் மனிதர்களும், வஸ்துக்க ளும் நிறைந்த இந்த உலகில் விசேஷமாகத் தோற்ற மளித்திருக்கிறது. இன்று நாம் இதைத்தான் பார்க் கப்போகிறோம். கடந்த நாட்களில் அன்னையை சக்தி மிக்கவளும் நாம ரூபத்தை இல்லாது செய்ப

ளுமாகிய துர்க்கை என்னும் அம்சத்திலும், திரி காலத்திலும் சகல நாம ரூபங்களையும் போற்றிப் பாதுகாக்கும் லக்ஷ்மியின் அம்சத்திலும் பார்க்கக் கூடிய சந்தர்ப்பம் ஏற்பட்டபொழுது நாம் அவர்களு டைய மூலப்பிரபஞ்ச அம்சத்தோடு மட்டுமல்லாது இந்த மானிட விவகார உலக மட்டத்திலும் பார்த் தோம். அவர்கள் அகத்தே உணர்வு நிலையிலும், சாதகனுடைய வியக்தித்துவத்திலும் தோன்றுகின்ற சமயத்தில், ஜீவன், பரப்பிரம்மம் என்று சொல்லப்படு கின்ற பரமாத்மவோடு ஐக்கியமாகின்ற அந்தப்பரி பூரண நிலையை அடைகின்ற லக்ஷியமாகிய அந்தரங்க யோக சாதனத்தில் முன்னேறிக் கொண்டு செல்வ தையும் பார்த்தோம் அதேபோல் வஸ்துக்களும் மனிதர்களும் நிறைந்த இந்த உலகில் அவள் தோற் றமளிக்கும் பொழுது நாம் அன்னையைச் சிந்தித்துப் பார்க்கும்பொழுது, சரஸ்வதிதேவி இந்த வியவகாரி கப்புற உலகில் மனிதனுடைய பல்வேறு காரியங் களுக்கிடையில் தோன்றியபொழுதிலும், அவள், மேலான பராசக்தி, துர்க்கை, லக்ஷ்மி ஆகிய வடிவில் தோன்றியது போல அவ்வளவு பிரசித்தமாகத் தோன்றவில்லை. இதற்கு ஒரு காரணம் இருக்கிறது. அன்னையானவள் அப்பொழுது பரிணமம், தேய்வு என்னும் சுழலின் இரு சந்திகளிலிருந்தும் ஆதிமூல சக்தியில் போய்க் கலக்கின்ற நிலையில் இருப்பது தான் அதற்குக் காரணம். அன்னை எவ்வாறு சிருஷ் டியின் துடிப்பாக இருக்கிறாள் என்பதைப் பார்த் தோம் தோன்றாப் பரம்பொருள் தோற்றத்திற்கு வருவதற்கு அவள் ஒரு காரண கர்த்தாவாக இருக்

கிருள். ஆகவே உலகில் அவளுடைய தொழில் அடிப்படையானது. பிறகு அவள் பின்னணிக்குச் சென்று விடுகின்ருள்.

பொருள்கள் ஒருமுறை தோன்றி நாம மற்ற வஸ்து நாம ரூபத்தை மேற்கொண்டு விட்டவுடன் அன்னை அடுத்தபடியாகச் செய்யவேண்டிய காரியங்களை தன்னுடைய ஏனைய அம்சங்களின் மூலம் வெளிப்படுகின்ற லக்ஷ்மி தேவியிடமும், துர்க்கா தேவியிடமும் ஒப்படைத்துவிட்டுப் பின் தங்கிவிடுகின்ருள். ஆகவே நமக்கு சக்தியின் ரக்ஷிக்கும் லீலைகள்தான் அதிகமாகக் கவனத்திற்கு வருகின்றன. ஏனெனில் இது காலம் என்னும் தொடர்ச்சியான பரப்பில் விரிந்து பரந்து கிடக்கிறது. ஆகவே மனிதனுடைய கவனம் இந்த அம்சத்திலும், நாம ரூபங்களை இல்லாது ஒடுங்கச் செய்கின்ற சம்ஹார அம்சத்திலும் அதிகமாக ஈர்க்கப்படுகின்றது. இந் நிலைக்கு சர்வ சாதாரணமானதும், எளிதில் விளங்க வல்லதுமான காரணம் இதுதான். அதாவது மனிதனுடைய உணர்விலும், கவனத்திலும் பின்னல் கூறப்பட்ட இரண்டு அம்சங்களும் அதிகமாக இடம் பெற்றிருக்கின்றன. “என்னுடையது” என்கின்ற மமதையின் காரணமாக இப்பிரபஞ்சப் பொருள்களின் மீதும் நாம ரூபங்களின் மீதும் ஏற்பட்டிருக்கும் தீவிர பற்றுதலின் காரணமாக அவன் அவற்றைப் பாது காப்பதிலும், அவைகளை நீடித்து வைத்திருப்பதிலும் அதிக அக்கறை காட்டுகின்ருன். ஆனல் அவைகள் அவ்வாறு இல்லாது திடீரென்று மறைந்து விடு

கின்ற காரணத்தால் அவனுடைய கவனத்தில் அதிர்ச்சியும் ஒரு விதத் திருப்பமும் ஏற்படுகின்றன. 'எனது' என்னும் அகங்காரத்தின் காரணமாக ஏற்படுகின்ற தீவிரப்பற்றுதல், அது அழிவதை விரும்புவதில்லை. அவன் வருத்தமடைகின்ருன். ஆகவே அவனுடைய மனத்தில் இந்த அழிவு நியதி மிகப் பிரமாதமாகத் தோன்றுகிது. அவன் எப்பொழுதும் இதை உணர்ந்து கொண்டிருக்கிருன், அதற்காக பயந்து கொண்டு இருக்கின்ருன். ஆகவே இந்த எண்ணம் அவனுடைய மனத்தில் நீங்காத இடத்தைப் பெற்றுவிடுகிறது. லக்ஷ்மி என்னும் அம்சத்தில் அன்னையின் செயலில் அவன் தீவிரமாக ஈடுபட்டு, பொருள்களை "என்னுடையது" என்று பாவித்துக் கொண்டு அவற்றை பாதுகாக்க முற்படுகின்ருன். ஆனல் அதே சமயத்தில் அன்னை சரஸ்வதியிடமிருந்து யதேச்சையாகத் தோன்றிய சிருஷ்டிக் கிரியை ஒரு முறை செய்யப்பட்ட பிறகு, அதைக் கொள்கையளவில் ஏற்றுக் கொண்டு, மனிதன் அதில் அதிக கவனத்தைச் செலுத்துவதில்லை. ஆகவே தான் சரஸ்வதி தத்துவமாக உள்ள அன்னையின் சந்நிதானம் அதிகமாகக் கவனிக்கப்படுவதில்லை. ஆனல் அவளுடைய சந்நிதானம் அத்தியாவசியமானது என்பது பகுத்தறிவுக்கு விளங்கும். ஏனெனில் சிருஷ்டி இல்லையேல் பற்று வைப்பதற்கு வஸ்துக்கள் எங்கு இருக்கப்போகின்றன? ஆகவே பொருள் தன்மையை நோக்குமிடத்து, தோன்றிய பொருள் ஒவ்வொன்றிற்கும் அன்னையின் அம்சம் அத்தியாவசியமானது என்பது கூருமலே விளங்கும்.

## வெற்றியின் ரகசியம்

அன்னை சிருஷ்டி முறைக்கு மட்டும் காரண கர்த்தா என்பதில்லை. எல்லாவற்றிற்கும் தொடக்க மாகவும் அவள் விளங்குகின்றாள். ஏனெனில் தொடக்கம் என்பது உற்பத்தியின் ஆரம்ப ஸ்தான மாகும். ஆகவே ஹிந்து சமூகத்தில் அன்னையை எல்லாவற்றிற்கும் ஆரம்பமாக வழிபடுகின்றார்கள். தொடங்கப்படுகின்ற எதுவும் சரஸ்வதி தேவியின் கருணை வடிவமாக பாவிக்கப்படுகிறது. இங்கு ஒரு விசித்திரமான அம்சம் என்னவென்றால் சகல காரி யங்களின் ஆரம்பத்திலும் அன்னை சரஸ்வதியோடு கூடவே ஹிந்து பக்தர்கள், தேவதையின் விசேஷ அம்சமான கணபதியையும் சேர்த்து வணங்குகின் றார்கள். இங்கு கணபதியும் ஆரம்ப அம்சம்தான். ஆனால் எதிர்மறையான அம்சம். எப்படியெனில் அவரும் ஞானத்தின் சின்னமாக விளங்குகின்றார்; ஆனால் அன்னை ஞானத்தின் சிருஷ்டி அம்சமாக விளங்குகின்றார். சரஸ்வதி பூஜையைவிட கணபதி பூஜை அதிகம் பிரசித்தமானது. கணபதி பூஜை விக்னங்களைப் போக்குவதற்காகச் செய்யப்படுகிறது. ஆனால் எடுத்த காரியங்கள் அனைத்திலும் தனது கருணையின் மூலமாக அன்னை சரஸ்வதி வெற்றி யைக் கொடுக்கின்ற உடன்பாட்டு அம்சத்துடன் விளங்குகின்றாள். தோன்றுகின்ற இந்த மானிடப் பிரபஞ்சத்தில் அன்னையின் இந்த அம்சம் எப்படித் தோன்றியிருக்கிறது என்பதை ஆராய்வோம். உதாரணமாக நாளை மறுதினம் எல்லாவிதமான சுப காரியங்களும் துவங்குவதற்கு அன்னையை விசேஷ

மாக வைத்து வழிபடப்போவதைக் காணப்போகி ேறாம், ஏனெனில் பரம்பரை பரம்பரையாக வித்யாரம் பத்திற்காக—அது விஞ்ஞானமாக இருப்பினும் சரி, அல்லது கலைகளாக இருப்பினும் சரி—இந்த விஜய தசமி தினம் ஒதுக்கப்பட்டிருக்கிறது. இந்த விஜய தசமி மிகவும் மங்களகரமானதாகவும் நல்ல பலனைக் கொடுப்பதற்கேற்ற நாளாகவும் கருதப்படுகிறது. விஜயதசமி யன்று எல்லாவிதமான சங்கீத வாத்தி யக் கருவிகளும், மனித இனத்தின் கூட்டு வாழ்வில் சிருஷ்டிக் கலை சம்பந்தப்பட்ட சகல பொருள்களும். வழிபடு பொருள்களாகின்றன. உலகம், எழுத்து ஆகியவற்றின் தோன்றும் அம்சமாக உள்ள புத்தகங் கள் அன்று அலங்கரிக்கப்பட்டு, பரம்பரை வழக்கப் படி பூஜிக்கப்படுகின்றன. ஒன்பதாவது தினத்தில் அன்னையை வழிபாடு செய்துவிட்டு பத்தாவது தினத் தில் குறிப்பிட்ட முகூர்த்தத்தில் இந்தப் புத்தகங் களை எடுத்து வித்யாரம்பம் தொடங்கப்படுகிறது

இது மனிதனுடைய புறச்செய்கை அளவில் செய்யப்படுவது. இத்துடன் கூடவே, குறிப்பாக இந்த ஆஸ்ரமத்தில், உபதேசம் என்கின்ற முறை யில் அந்தரங்க ஆன்மீக வாழ்வும் தொடக்கி வைக் கப்படுகிறது என்பதையும் காண்கின்றோம். ரகசிய நாதம், வாக், வர்ணம் என்கின்ற வடிவத்தை எடுக் கிறது. மந்திரங்கள் எல்லாம் இந்த வர்ணங்களின் சக்திமிக்க ரகசியச் சேர்க்கையாகும்

ஒரு மந்திரம் என்பது ஒரு இடத்தில் ஒன்று திரட்டப்பட்ட சரஸ்வதி சக்தியாகும். அந்த மந்தி

ரத்தை ஜெபித்து வருவதால் சாதகனுக்கு மனோவாக்கைக் கடந்து ஞானம் புலப்படுகின்றது. சரஸ்வதியின் இந்த அம்சம் எல்லா சாதகர்களுக்கும் மந்திர உபதேச வடிவில் கொடுக்கப்படுகிறது. இதுவும் சாதகனுடைய அந்தரங்க ஆன்மீக பரிணாமத்தில் ஒரு ஆரம்ப கட்டமாகும். சரஸ்வதியின் கையில் உள்ள தூய ஸ்படிக மாலையானது, அவள் மற்றொரு கரத்தில் புத்தக வடிவில் வைத்துள்ள வேத ஞானத்தை அனுஷ்டானத்தில் கொண்டு வருவதைக் குறிக்கிறது.

இப்பரந்த உலகில் மானிட வாழ்க்கையை சரஸ்வதி என்னும் அம்சத்தில் அன்னை பராசக்தியின் திருவிளையாடலாகப் புரிந்து கொண்டு பார்க்கும்பொழுது இவ்வுலகில் நடக்கும் சிருஷ்டிச் செயல் அனைத்தும் முடிவில் அன்னை சரஸ்வதியின் செயலாகவே இருப்பதைக் காணலாம். ஆகவே இங்கும், மேலை நாட்டிலும் செய்யப்படுகின்ற விஞ்ஞான ஆராய்ச்சிகளும், அந்த ஆராய்ச்சியின் பலனாகக் கண்டுபிடிக்கப்பட்ட நூதன கண்டு பிடிப்புகளும், அவைகளைப் பிரயோகப்படுத்துதலும், எல்லாம் அன்னை சரஸ்வதியின் திருவிளையாடல்களே விஞ்ஞான ஆராய்ச்சிகள், கண்டுபிடிப்புகள், அதன் மூலமாக உற்பத்தி செய்யப்படும் பலவித உபகரணங்கள் ஆகிய அனைத்தும் அன்னை சரஸ்வதியின் நேரடியான தோற்றங்களேயாகும்.

அன்னை எதற்கும் ஆரம்பமாக இருப்பதாக முன்பு கூறினோம் ஆகவே அன்னை ஒரு நாளினு

டைய மேலான ஆன்மீக ஆரம்பமாகவும் இருக்கி ருள். அதாவது இரவு வேளையின் நான்கு பிரகா ரங்களும் முடிந்து இரவு நேரம் கழிந்து புதிய நாள் புனிதமான பிரம்மமுகூர்த்தத்தில் தொடங்குகிறது. அப்பொழுது சரஸ்வதியின் பரிபூரணத் தோற்றம் உங்களுக்குக் கிடைக்கிறது. அந்த வேளையானது ஞான தாயினியாகிய சரஸ்வதியின் ஆன்மீக உணர் வை ஊட்டும் சக்தியால் நிரப்பப்பட்டிருக்கிறது. இதே காரணத்தினுல்தான் புதுவருடப் பிறப்பும் சரஸ்வதி யின் அம்சத்தில் அன்னை பராசக்தியின் ஆன்மீக சக்தி நிரம்பிய நேரமாக இருக்கிறது. உதாரணமாக எந்த ஒரு புது வியாபாரத்தை தொடங்கினுலும் அன்னை சரஸ்வதியை பக்தி சிரத்தையோடு வழி பட்டுவிட்டுத் தொடங்க வேண்டும். அப்போது அன்னை தனது கருணையின் மூலம் தொடங்கிய வியா பாரத்தில் நல்ல வெற்றியைக் கொடுத்துக் காப்பாற் றுவாள். ஒரு புது ஸ்தாபனமோ அல்லது தொழி லோ ஆரம்பமாகிறது என்று சொன்னுல் அது அவ ளுடைய திருவிளையாட்டினுல்தான் நடக்கிறது. இது வும் அன்னை சரஸ்வதியின் ஒரு தோற்றம். குறிப் பாக, இங்கு, ஆனந்த குடீரத்தில், எந்த ஒரு காரி யம் துவங்கினுலும் முதலில் அன்னை சரஸ்வதியின் ஆசியைப் பெற்றுத் துவங்குவது சாதாரண காட்சி யாக இருக்கும். மேலும் ஒவ்வொரு புது கட்டத்தி லும், உதாரணமாக கட்டடவேலை ஒன்று நடந்து கொண்டிருந்தால் அதற்கு அஸ்திவாரம் போடும் பொழுதும், மூலைக்கல் நாட்டும் போதும், சரஸ்வ திக்கு பூஜை நடத்துவதைப் பார்க்கலாம்.

இதே போல, எல்லா வியாபாரங்களேயும், எல்லா கைங்கரியங்களேயும் பக்தி சிரத்தையோடு கூடிய மனப்பாங்குடன் அன்னேயை சரஸ்வதி வடிவில் பூஜித்துத் தொடங்கவேண்டும். எனக்குத் தெரிந்தவரை இந்தப் பழக்கம் அநேகமாக தென்னிந்தியாவில் உள்ள எல்லா வியாபாரஸ்தலங்களிலும்இருந்து வருகிறது. இதை மற்ெருரு அம்சமானப் பொருள் நோக்கோடு மஹாராஷ்டிர ராஜ்யத்தில் கொண்டாடப்படுவதைக் கவனித்திருக்கிறேன் அங்குள்ளவர்கள் சரஸ்வதியைவிட தன தேவதையாகிய லக்ஷ்மியையே அதிகம் போற்றுகின்ருர்கள். எப்படி இருப்பினும் வழிபாடு, பரதேவதையைப் போய்ச் சேருகிறது ஆனுல் மனிதருடைய செயல்கள் அனேத்தும், அன்னே பராசக்தியின் பல்வேறு வடிவங்களின் மூலம் (அது லக்ஷ்மியானுலும் சரி, துர்க்கை அல்லது சரஸ்வதியானுலும் சரி) நடைபெற்று வரும் திருவிளேயாடலே என்பதை நாம் எல்லோரும் உணரவேண்டும். இதை உணர்ந்து எந்தக் காரியத்தையும் அணுகி, அதில் பக்தி பாவத்துடன் ஈடுபட்டு, அதை பராசக்தியின் பூஜையாகவே எண்ணிச் செயல்பட்டால் தான் நம்மால் லௌகீக விவகாரங்களேயும் நம்முடைய ஆன்மீக பரிபக்குவத்திற்குப் பயனுள்ளதாகச் செய்யமுடியும். இவ்வாறு செய்வோமேயாகில் வழிபாடு, தியானம், யோக சாதனம் முதலியவற்றைச் செய்யப் போதுமான சந்தர்ப்பமும், அவகாசமும் கிடைக்கவில்லேயே என்கின்ற குறைபாட்டுக்கு இடமிருக்காது எல்லாச் செயலிலும் உள்ள ஆன்மீகத் தன்மையை உணரத் தவறி

விடுவதும் எல்லாச் செயல்களிலும் அன்னையின் அன்புக்கரத்தைப் பார்க்கத்தவறி விடுவதும் தான் இம்மாதிரி குறைக்குக் காரணமாகிறது.

இதனால் தான் மனிதன் தன்னால் ஆன்மீக சாதனை செய்ய இயலாது என்றும், தனக்கு ஞானம் ஏற்படுவதற்கு வழியே கிடையாது என்றும் எண்ணிக் கொள்கின்றான். இது ஒரு பெருந்தவறு. வாழ்வனைத்தும் பரம் பொருளையும், பரஞானத்தையும் அடைவதற்குரிய வழியே என்பதனை பக்தி மனம் படைத்த இந்துவும், இந்திய மேதைகளும் காணு கின்றனர். ஜீவன் சீக்கிரம் தனது பரிணாமத்தை முடித்துக்கொண்டு ஆத்மானு பூதியாகிய மானிட வாழ்வின் லட்சியத்தை அடைவதற்குரிய சந்தர்ப் பத்தை அந்த ஜீவனுக்குக் கொடுப்பதைத் தவிர வேறு ஒரு உயர்ந்த காரியம் இல்லை என்பதை ஒரு சரியான ஹிந்து உணருகின்றான். ஆகவே அம்மா திரி வாழ நாம் முயற்சிக்க வேண்டும். ஏனெனில் ஹிந்துவுக்கு எதுவும் லௌகீக காரியமல்ல. அவ னுக்கு சலனங்கள் அனைத்தும் அன்னை பராசக்தி யின் தோற்றங்களாகவே தோன்றுகின்றன. செயல் கள் அனைத்தும் பராசக்தியின் இடைவிடாத வழிபா டாகவே இருக்கின்றன. இதை உணர்ந்து விவகா ரங்களில் ஈடுபடும் பொழுது நமது மனோபாவனையை முற்றிலும் மாற்றியமைத்துக்கொள்ள வேண்டும். நாம் ஏதோ லௌகீக விவகாரங்களில் தவறி வீழ்ந்து விட்டதாகவும், ஆன்மீக உண்மையிலிருந்து நாம் வெகுதூரத்திலிருப்பதாகவும் எண்ணிக் கொண்டு சாதனைக்குச் சந்தர்ப்பம் கிடைக்கவில்லையே என்று

வருந்திக் கொண்டிருக்கக் கூடாது. ஆனால் அதற்கு மாருக எந்தக் காரியத்தையும் சந்தோஷமாக, உற்சாகத்துடன், உன்னதமான மனோ பாவனையுடன் செய்து வரவேண்டும். ஏனெனில் எல்லாம் மாத்ரு பூஜையேயாகும். ஆகவே காரியங்களை வழிபாட்டு மனோ பாவனையுடன் செய்து வருவோமேயாகில் மனிதன் தனது தொழிலேயோ, அல்லது இடத்தை யோ, மாற்றிக் கொண்டு இருக்கவோ அல்லது வழக்கமான நிவ்ருத்தி மார்க்கத்திலிருப்பதற்காக ஏகாந்தத்தை நாடி காட்டிற்கு ஓடவோ வேண்டிய அவசியமில்லை. ஏகாந்த வாழ்க்கைக்கும், தியானத்திற்கும் உரிய சமயம் வந்தால் மிகவும் நல்லது ஆனால் அவ்வாறு இயலவில்லையாகில் (பெரும்பான்மையோருக்கு அது சாத்தியமாவதில்லை) அதற்காக துக்கப்படவேண்டியதில்லை. ஏனெனில் சரியான மனோ பாவனையை மேற்கொள்ளும் பொழுது; வஸ்துக்களை சரியான கண்ணோட்டத்துடன் பார்க்கும் பொழுது மறைமுகமாக எல்லாம் யோகமாகவும், ஆன்மீக சாதனையாகவும் மாறிவிடுகின்றன. அன்னை பராசக்தியை இந்த ஒன்பது நாளும் வழிபட்டதின் மூலம் நமக்கு இந்த உண்மை புலப்படுத்தப்படுகிறது. கை காரியங்களைச் செய்தால், கண்கள் பார்த்தால், மூக்கு நுகர்ந்தால், காதுகள் கேட்டால், நாக்கு பேசினால் இந்த சலனங்கள் அனைத்தும் அன்னையின் சக்தி அம்சத்தை வழிபடுவதாகின்றது. இதை நமக்கு ஞாபகப்படுத்துவதற்காக நமது அறிவு மிக்க சான்ருேர்கள் அன்னையை வழிபடுகின்ற இந்த நவராத்திரி பூஜையைச் செய்து மகிழ்கின்ற பெரும்பேற்றைக்

கொடுத்து விட்டுச் சென்றிருக்கின்றனர். ஆகவே வாழ்வின் காரியங்கள் அனைத்தின் மூலமாகவும் அன்னையை இடைவிடாது வழிபடுகின்ற இந்தப் பெரும் பேற்றை மறந்துவிடாது இருக்க வேண்டியது அன்னையின் குழந்தைகளாகிய மனித வர்க்கத்தின் தலையாய கடமையாகும்.

நமக்கு இந்த மானிடப் பிறவி கிடைத்தது குறித்தும், அன்னையைப் பெருமைப் படுத்தி வழிபாடு செய்வதற்குரிய திறமையைக் கொடுத்து அதன்படி நடப்பதற்குரிய வாய்ப்பையும் பெற்றது குறித்தும் நாம் மகிழ்வெய்துவோமாக. மானிட வாழ்வின் மகோன்னத லட்சியமாகிய ஆத்மானுபூதியை அடையக்கூடிய அரியதொரு சந்தர்ப்பம் நமது கையில் இருக்கிறது. ஆன்மீக மயமாக்கப் பட்ட அன்னையின் வழிபாடாகிய இந்தப் புற வடிவத்தை நாம் சரிவரப் பயன் படுத்துவோமாகில் பின்பு நாம் அன்னையின் கருணைக்குப் பாத்திரராகலாம். அவள் நமக்கு மகான்களுடைய கருணை உபதேசம், தீக்ஷை என்னும் வடிவிலும், அவர்களோடு கொள்ளுகின்ற சத்சங்க வடிவிலும் நமக்குக் கொடுத்தருளுவாள். அவள் மந்திர வடிவில் நம்மிடம் வருவாள். முன்னேற்ற மடையும் பொழுது அவள் மேன்மைபொருந்திய தியானமாகத் தோன்றுவாள். தியானம் தான் ஆத்மாநுபூதிக்கு வாயிலாகும். கடைசியாக அவள் நமது உணர்வை சமாதி என்னும் வகையில் ஒளிவிளக்கம் பெறச் செய்வாள். ஏனெனில் ஜீவனிடத்தில் அவள் தோன்றுகின்ற

கடைசித் தோற்றம் சமாதியும், ஆத்மாநுபூதியுமே யாகும். இவ்வாறு அவள் தோற்றமளித்து வாழ்வின் லட்சியம் அடையப்படும் பொழுது நமது வாழ்வின் வேலை முடிவடைகின்றது. நமது அன்னை வழிபாடு பூர்ணமாகிறது. அதற்குப் பிறகு நாம் செய்யவேண்டியது ஒன்றுமில்லை. ஆனால் பரப்பிரம்மத்தின் வற்றாத பேரின்பத்தைப் பருகிக் கொண்டிருக்கலாம். இந்த அற்புதமான சக்தியாக அன்னை விளங்குகின்றாள்.

தாயே! உன்னோடு வாக்கு வன்மையைக் கொடுக்கவல்லவர்களும், சந்திர காந்தக்கல்லைப் (சசி மணியைப்) போன்ற காந்தியை உடையவர்களும் ஆகிய வசினி முதலிய வாக்தேவதைகளை யார் ஒருவர் தியானிக்கின்றாரோ, அவர் சொல்லலங்காரம் மிக்கதும், சரஸ்வதி தேவியின் முகார விந்தத்தின் நறுமணத்தால் இனிமையாக்கப்பட்டதுமான காவியங்களை இயற்ற வல்லவராகின்றனர்.

## ஒன்பதாவது இரவு.

### முக்திக்கு வழி.

உண்மையான முமுக்ஷுக்களின் உணர்விலே உண்மை ஞானத்தைத் தனது கருணையினால் உணர்த்துகின்ற அந்த தேவிக்கு நமஸ்காரங்கள். இந்த விசித்திரமான சிருஷ்டி, ஸ்திதி, சம்ஹாரம் என்னும் தெய்வீக நாடகத்தை நடத்திக் கொண்டி

ருக்கும் அந்த மகா பராசக்திக்கு வந்தனங்கள். தனது விசித்திர சக்தியின் மூலமாக, மனோ வாக்கைக் கடந்ததும் அவ்யக்தமானதுமான எல்லையிலா இந்த நாம ரூபங்களைத் தோன்றச் செய்பவளும், ஜீவர்களை மயக்கி இந்த உலக பந்தபாசங்களில் சிக்கவைப்பவளுமாகிய அந்த மகா சக்திக்கு வணக்கங்கள். மேலான வித்யா மாயையாக இருக்கின்ற அந்த அன்னைக்கு மீண்டும் நமஸ்காரங்கள். அவள் மஹா சரஸ்வதி என்னும் தனது அம்சத்தின் மூலமாக சாதகனை அறியாமை இருளிலிருந்தும் உலக பந்தங்களிலிருந்தும் விடுவித்து மேலான கைவல்ய நிலையைக் கொடுத்தருளுகின்றாள்.

ஒன்பது நாள் வழிபாடாகிய இந்த நவராத்திரி விழாவில் இன்று கடைசி நாள். அன்னையின் தயையின் காரணமாகவும், கருணையின் காரணமாகவும் அவளுடைய பாதகமலங்களைப் போற்றிப் பணிகின்ற வாய்ப்பு நமக்கு எல்லோருக்கும் கிட்டியிருக்கிறது. அவ்வாறு செய்வதன் மூலம் நாம் நம்முடைய மனத்தையும், உணர்வையும் ஆத்ம சாக்ஷாத்காரமாகிய கடைசி லக்ஷியத்தை நோக்கி ஒரு படி முன்னேறியவர்களாகின்றோம்.

அவளுடைய கருணை எல்லையற்றது ஜீவர்களிடத்தில், அதுவும் விசேஷமாக சாதகர்களிடத்தில் அன்னை காட்டும் இரக்கமும், அன்பும் சாதாரணமாக வர்ணிக்க முடியாதது. தாய் தனது குழந்தையை எடுத்து அணைத்துக் கொள்ள சதா ஆவலோடு காத்துக் கொண்டிருக்கிறாள். அதேபோல்

அன்னை பராசக்தி ஸ்தூலப் புறப்பிரபஞ்சமாகிய நாடக மேடையில் தனது சிறு நேர லீலையாகிய தெய்வீக நாடகத்தை நடக்கச் செய்து விட்டு, அதே நேரத்தில் இந்த நாடகத்தில் உற்சாகமிழந்து, அதில் ஈடுபடுவதை நிறுத்தி விட்டு "அம்மா" என்று அலறி ஓடிவரும் குழந்தைகளை எடுத்துத் தனது மார்போடு அணைத்துக் கொள்ள ஆவலோடு காத்துக் கொண்டிருக்கிருள். "தாயே! எனக்கு இனி மேல் இந்த விளையாட்டு வேண்டாம். நான் உன்னை விட்டுப் பிரிந்து வெகு தூரம் அலைந்து திரிந்து விட்டேன். ஆகவே உனது கருணையை எனக்குக் கொடுத்தருள். உனது பேரானந்தக்கரத்திலே இக் குழந்தையை எடுத்து வைத்துக் கொள்." இதுதான் ஜீவனுடைய புலம்பல் இதுதான் முமுக்ஷுத்வம். இதுதான் வேட்கை. இதுதான் எல்லையிலாப் பொருள், எல்லையோடு கூடிய பொருளுக்கு விடுக்கும் அறைகூவல் உலக விளையாட்டிலே ஓய்ந்து போய், அதைவிட்டுத் திரும்பி அன்னையினுடைய திருமுகத்தைப் பார்க்கும் பொழுது அவளுடைய அழைப்பு காதில் விழுகிறது. அப்பொழுது கருணையே வடிவான அன்னையின் கடைக்கண் பார்வை ஒரு சிறிது இந்த பாலகன் மீது விழுகிறது. அந்தக் கருணை வெள்ளமானது இக்குழவியை நீராட்டி, களைப்பைப் போக்கி, விளையாட்டினுல் ஏற்பட்ட மாசுகள் எல்லாவற்றையும் நீக்கி விடுகிறது. ஆன்மீகப் பேரானந்தப் பெருநிலைக்கு ஜீவன் உயர்த்தப்படுகிருன். பிறகு குழந்தை அன்னையினுடைய கரத்தை மீண்டும் அடைந்து விடுகிறது. அப்பொழுது ஜீவனுக்கு

இந்த விளையாட்டினுல் உண்டான துன்பங்களும், போராட்டங்களும் ஓய்ந்து, இழந்த சொர்க்கத்தை மீண்டும் பெற தூயப் பேரானந்த நிலை கிட்டுகிறது. நாம் எல்லோரும் திசை தப்பித் திரிபவர்கள். நம் முடைய சொந்த வீட்டை விட்டு வழி தவறி வந்து விட்டவர்கள் நம்முடைய சொந்த வீடு சச்சிதா னந்தப் பெரு வீடு. நாம் நமது சொந்த வீட்டை விட்டு வெகு தூரம் வழி தவறி வந்துவிட்டோம் என் பதையும், நமக்குச் சொந்தமான அந்த சச்சிதானந் தப் பெருவீட்டை நாம் மீண்டும் கண்டிப்பாய் அடைந்தே தீரவேண்டும் என்கின்ற தீவிரவேட்கை கொள்வதும்தான் இந்த ஆன்மீக மார்க்கம் முழுவ தற்குமான பொருள். இதுதான் ஆன்மீக வாழ்க்கை இதுதான் சாதன மார்க்கம்.

அன்னையானவள் வித்யா மாயையாகவும் அவித்யா மாயையாகவும் இருக்கிருள். என்பதை நாம் அறிகிரோம். இந்த இரண்டு அம்சங்களிலும், உலகமாகிய மேடையில் அவள் ஆடும் நாடகத்தில் துர்க்கை, லக்ஷ்மி, சரஸ்வதி ஆகிய மூன்று வேடங் களில் நடிக்கிருள். அன்னையானவள் எப்படித் தனது மேலான சத்துவ அம்சமான சரஸ்வதி என் னும் ஓங்கார ரூபிணியாகவும், நாதஸ்வரூபிணியாக வும் தனது பிரவிருத்தி அம்சத்தில் மனிதர்களின் புறக்காரியங்களில் தோன்றுகிருள் என்பதை நேற்று கவனித்தோம் அன்னை பரம வித்யாவாக இருந்த போதிலும் அவள் தன்னிடத்தே ஒரு சிறி தளவு விசித்திரமான அவித்யா மாயையும் உடைய

வளாக இருக்கிருள். இந்த அவித்யா மாயை என்னும் அம்சத்தில் அவள் பிரவிருத்தியில் சரஸ்வதி தத்துவமாகத் தோன்றியிருக்கிருள்.

ஆனுல் பெரும்பகுதி அன்னை சரஸ்வதி வித்யாவாக விளங்குகின்ருள்; அவள் தனது வித்யா மாயை அம்சத்தில் ஜீவனுடைய அகத்துறை வாழ்வாகிய நிவ்ருத்தி மார்க்கத்தில் பலவாருகத் தோன்றுகின்ருள். இந்த அகத்துறை மார்க்கமாகிய நிவ்ருத்தி மார்க்கத்தைக் கருத்தில் கொண்டு தான் நாம் இன்று அன்னையின் பாத கமலங்கட்கு நமது அஞ்சலியையும், வழிபாட்டையும் செய்கிருேம். பிரவிருத்தியில் அவள் எல்லாவற்றிலும் சிருஷ்டிச் செயலாக இருக்கிருள் என்பதைக் கவனித்தோம். அவள் எவ்வாறு ஆக்க நடவடிக்கையாக விளங்குகின்ருள் என்பதை நாம் கவனித்தோம். எல்லாவற்றிற்கும் தொடக்கத்தில் அவள் விளங்குகின்ருள். விஞ்ஞானியினுடைய ஆராய்ச்சித் திறமையாக இருப்பது அவள் தான். கவியினுடைய காவியத் திறமையாக இருப்பதும் அவளே சங்கீத வித்வான், ஓவியன், சிற்பி, மற்றும் லலித கலைகளை மேற்கொண்டுள்ள அனைவருடைய திறமையாகவும் இருப்பதும் அவளே தான். அவளே, விஞ்ஞானி தனது ஆழ்ந்த ஆராய்ச்சி சமயத்தில் கண்டுபிடிக்கும் உண்மைகளாக இருக்கிருள்.

புறவுலகத் தன்மையை நுட்பமாகப் புகுந்து ஆராயும் தன்மையினுல் கண்டுபிடித்த உண்மைகள் அனைத்துமாக இருப்பவள் அன்னை சரஸ்வதியே இம்

மாதிரி ஆராய்ச்சியின் பலனாக உற்பத்தி செய்யப் படும் பல்வேறு பொருள்களாக இருப்பவளும் அவ ளே. அன்னை ஆக்க வேலை அனைத்துமாக இருக் கிறாள். அவள் சகல தொழில்களாகவும், சகல வியா பாரங்களாகவும் விளங்குகின்றாள். அவள் மாபெரும் வியாபாரியின் வியாபாரத் தந்திரமாக இருக்கிறாள். மனிதனுடைய பிரவிருத்திக் காரியங்களில் புறத் துறையில் அவள் கல்வியாக இருக்கிறாள். இவ்வாறு அன்னை புறவுலகில் பலவாறாகத் தோன்றுகின்றாள்.

நாம், பலவற்றிலிருந்து பரம் பொருளைச் சேரு கின்ற முறையான அகத்துறையில் அன்னையின் அம்சங்களில் ஒரு சிலவற்றை கவனித்தோம். யோக சாதனத்தில், ஜீவனுடையதும், சாதகனுடையது மான அகத்துறை வழியான நிவ்விருத்தி மார்க்கத் தில் அவள் எவ்வாறு குருதீக்ஷையாக இருக்கிறாள் என்பதைப் பார்த்தோம். மேலும் அவள் மந்திர மாகவும், மந்திர ஜபமாகவும், அனுஷ்டானம் முதலிய மந்திர சாதனமாகவும் விளங்குகின்றாள். அன்னை சரஸ்வதி எவ்வாறு தேஜோமயமான தூய சுத்த சத்துவக் கட்டியாக இருக்கிறாள் என்பதையும் எப்படி அவள் மிகத் தூய சத்துவ சொரூபமாகவே இருக் கிறாள் என்பதையும் நாம் பார்த்தோம். இவைக ளெல்லாம் அவள் அணிந்திருக்கும் தூய வெள்ளை ஆடையாலும், பிரகாசம் பொருந்திய, காந்தியுடன் கூடிய அழகாலும் குறிக்கப்படுகின்றன.

### பரம சத்துவமாக அன்னை

ஆன்மீக சாதகனுடைய உள்ளத்தில் அவள் சத்துவமாகத் தோன்றுகின்றாள். சரஸ்வதியினு

டைய கருணை சாதகனிடத்துத் தோன்றும்போது அவனுடைய வாழ்க்கை முற்றிலும் ஒரு மாறுபாட்டை அடைகிறது. அவனிடமுள்ள மந்த குணம், மிருகத் தன்மை முதலியன யாவும் மெதுவாக, படிப்படியாக, ஆனால் உறுதியாக நீக்கப்படுகின்றன. ஏனெனில் தேஜோமயமான சத்துவத்தின் வெண்மைக்கு முன்பாக, தமஸினுடைய கருமை நிற்க முடியாது. சத்துவம் ஜீவனிடத்துள்ள மேலான ஆக்க சக்தி. ஆகவே அன்னை சரஸ்வதியின் கருணையினால் தோன்றிய சத்துவ குணம் வெளிப்பட ஆரம்பித்தவுடன் தமோகுணம் குறைந்து, கடைசியில் சாதகனை விட்டு முற்றிலும் விலக்கப்பட்டு விடுகிறது. சாதகன் முன்பு மூழ்கி, அனுபவித்து அவனுக்கு இன்பம் தரக்கூடியவைகளாக இருந்த மிகவும் கீழ்த்தரமான ஆசைகள் இப்பொழுது அவனுக்குத் துன்பம் தருபவைகளாக ஆகிவிடுகின்றன. அவன் அவற்றை கழித்துக் கட்டுகிறான் சரஸ்வதி எவர் ஒருவரிடத்தில் குடிபுக வந்து விட்டாளோ அவரிடத்தில் மந்த குணம் என்பது புரியாத வஸ்துவாகி விடுகிறது.

இதேபோல் ஜீவனிடத்திலுள்ள ரஜோ குணமும் ஒரு மாறுபாட்டை அடைகிறது. சுயநலத்திலிருந்து கிளம்புகின்ற செய்கையே ரஜஸ். பொறாமை, பேராசை, சுயநலம் ஆகியவற்றின் தூண்டுதலால் இது ஏற்படுகின்றது. வினையாற்றுதல் எப்பொழுதும் நல்லது. எந்த ஒரு காரியத்தையும் சாதிப்பதற்குச் செய்யும் ஒவ்வொரு முயற்சியும் எல்லா ஜீவன்களுக்கும் மதிப்பு மிக்கதொரு ஆஸ்தியாகும். ஆனால் அதில் சுயநலம், பேராசை போன்ற கீழ்த்தர

மான ஆசைகள் கலந்துவிடும் பொழுது ரஜஸானது மனிதனை வெளியே இழுத்துச் சென்று அவனை மேலும் மேலும் பந்தத்துக் குள்ளாக்குகிறது. ஆனால் ஒரு சாதகனுடைய நிவ்விருத்தி வாழ்க்கையில் மேல் நோக்கி இழுக்கின்ற பெரிய சக்தியாகிய சத்துவ சக்தி அவனிடம் தோன்றி வேலை செய்ய ஆரம்பிக்கும் பொழுது அவனிடமுள்ள ரஜோகுணத்திடம் அது செலுத்தும் செல்வாக்கு நன்கு உணரப்படும். அப்பொழுது இந்த ரஜஸானது சுயநலத்தையும், பேராசையையும் அடிப்படையாகக் கொள்ளாது அது கட்டுப்படுத்தப்பட்டு உன்னதமான, பரந்த நோக்கத்தின் பக்கம் திருப்பிவிடப்படுகிறது. அவனிடம் உள்ள சக்திமிக்க அந்த ரஜோ குணமானது இப்பொழுது தமஸோடு உறவு கொள்ளாமல் சத்துவத்தோடு சேர்ந்து கொள்கிறது. ஆகவே இந்த ஆன்மீக வாழ்வில் அது அவனுக்கு ஒரு பெரிய ஆஸ்தியாக அமைந்து விடுகிறது. அது கட்டுப்படுத்தப் பட்டு, உயர்ந்த உன்னதமான, ஆன்மீக விஷயங்கள் பக்கம் மாற்றப்பட்டு திருப்பிவிடப் படுகிறது. இப்பொழுது அவன் மற்றவர்கள் நன்மைக்காக விவகாரங்களில் ஈடுபட்டுக் கொண்டிருக்கிறான். அவனிடத்தில் தயை, கருணை, தன்னலமின்மை போன்ற உன்னதமான சாத்வீக குணங்கள் மேலோங்கி, கர்மயோகம் அல்லது சேவையின் வடிவில் சகல ஜீவ ராசிகளாகவும் உள்ள நடமாடும் கண்கண்ட தெய்வத்திற்கு வழிபாடு செய்ய வேண்டுமென்கின்ற தூய ஆசை அவனிடத்தில் ஏற்படுகின்றது. இவ்வாறாக கீழான தன்மைகளாகவும் ஆன்மீகப் பாதையில்

தடைகளாகவும் இருந்த தமஸூம், ரஜஸூம் நீக்கப் படுகின்றன. தமோ குணம் இல்லாது ஒழிந்து போய்விடுகிறது. அது அவனிடத்தில் அன்றாடத் தூக்கம் முதலிய மாற்று வடிவில்தான் மறைந்திருக் கின்றதேயொழிய, தனது ஸ்தூல வடிவில் இல்லாது போய்விடுகிறது. சாதகனுடைய நிவ்விருத்தி வாழ்க் கையில் அன்னை சரஸ்வதி சுத்தசத்துவமாகத் தோன்றும் பொழுது அவளுடைய கருணையின் மூல மாக ரஜோ குணமும் சாதகனுக்கு நண்பனுகவும், உதவியாளனுகவும் ஆகிவிடுகின்றது.

பகவத்கீதை பதினேழாம் அத்தியாயத்தில் சகல குணங்களும், வஸ்துக்களும், சத்துவம், ரஜஸ், தமஸ் என்று மூவகையாகப் பிரிக்கப்பட்டிருப்பதை நீங்கள் படித்துப் பார்த்தால், இந்த குணத்ரய விபா கத்தில் எது சத்துவமாகக் கூறப்பட்டுள்ளதோ அது அன்னை சரஸ்வதியாக இருக்கிறது என்பது விளங் கும். சாதகனுடைய ஆன்மீக வாழ்க்கையிலும், சாதக சீடனிடத்திலும், அன்னையானவள் யோகமா கவும், சாதனையாகவும், முடிவில் ஞானப் பிரகாச உணர்வை வெளிப்படுத்துபவளாகவும் இருக்கிருள். சாதகனுடைய தனிப்பட்ட சாத்வீக செயல்களில் அன்னை சதாசாரமாகத் தோன்றுகின்ருள். ஆன்மீக வாழ்க்கை முழுவதற்கும் சதாசாரமே வெற்றிக்கு அடிப்படை என்பதை நாம் எல்லோரும் நன்கு அறி வோம். இது அஸ்திவாரமாக விளங்குகிறது ராஜ யோகத்தில் கூறப்பட்டுள்ள இயம நியமங்கள் சதா சாரத்தை எடுத்துக் காட்டும் விஞ்ஞான பூர்வமான மகோன்னதமான விளக்கங்களாகும்.

## குருவின் வார்த்தை வேத வாக்கு

வாக் அல்லது பரம ஒலி அல்லது வார்த்தையாக அன்னையானவள் சாதகனுக்கு முதன் முதலில் குருமந்திர வடிவமாகத் தோன்றுகின்றாள். அதை அவன் தீக்ஷை வடிவில் பெறுகின்றான். இவ்வாறு மந்திர வடிவாக உள்ள அன்னையை உரிய மரியாதையுடன் வழிபட வேண்டுமாகில், ஒவ்வொரு சாதகனும் சத்குருவிடமிருந்து பெற்ற மந்திரோபதேசத்தைத் தீவிரமாகப் பயிற்சிக்குக் கொண்டுவர வேண்டும். மந்திரத்தை அலட்சியப்படுத்துவதோ அல்லது குருவிடமிருந்து பெற்ற திவ்ய நாமப் பயிற்சியை அலட்சியப்படுத்துவதோ அன்னை சரஸ்வதிக்கு உரிய மரியாதை கொடுத்து வழிபடத் தவறியதாகும். இவ்வாறு நாம் அவளை அலட்சியப்படுத்துவோமாகில் நமது ஆன்மீக முன்னேற்றம் தடைபட்டு நின்றுவிடும்.

பொதுவான அம்சத்தில் அவள் சாதகனுடைய யோக மார்க்கத்திலும் ஆன்மீக வாழ்விலும் குருவினுடைய அன்றாட உபதேசமாகத் தோன்றுகின்றாள். இவ்வாறு, சாதகனிடத்தில் இம்மாதிரியான வழிபாட்டு மனப்பான்மை ஏற்பட வேண்டும். அவன் குருவினுடைய உபதேசங்களை மிகவும் மரியாதையுடனும், அலட்சியமில்லாமல் கவனத்துடனும் பெற்றுக்கொள்ள வேண்டும். அவன் எதற்கும் செவிசாய்க்காதவனாக இருத்தல் கூடாது. குருவினுடைய வார்த்தைகள் எதையும் மிக இலேசானதாக பாவித்துவிடக் கூடாது. சாதகனுக்கு குருவி

னுடைய வ்ார்த்தை வேத வாக்காக இருக்க வேண்டும். ஏனெனில் அவைகள் அவனுக்கு மந்திரமாகும். "மந்த்ர மூலம் குரோர் வாக்யம்." குருவினுடைய சாதாரண வார்த்தைகளை மிகவும் அநாவசியமாக பாவிப்பதும், அவருடைய வார்த்தைகளுக்குச் சரியாக செவிசாய்க்காதிருப்பதும் சாதகர் உலகில் சர்வ சாதாரணமாகக் காணப்படும் தவறுகளாகும். சத் குருவோடு மிக நெருங்கிப் பழகுவதானது சாதகர்களையும், சீடர்களையும் அவருடைய உபதேசமாகவும், வாக்காகவும் அவர் மூலம் வெளிப்படும் சரஸ்வதி தேவிக்கு உரிய மரியாதையைக் கொடுக்கத் தவறும்படி செய்துவிடுகிறது இம்மாதிரியான அலட்சிய புத்தி காரணமாக அவர்கள் மிகுந்த நஷ்டமடைகின்றனர். ஆகவே குருவினுடைய வார்த்தைகளை கிரஹிக்கும் முறையில் நாம் மிகவும் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். இவைகள் அன்னையின் அம்சமாக இருக்கின்றன. அவருடைய வார்த்தைகளை சரியான மனோபாவனையுடன் ஏற்றுக்கொண்டு அவற்றை முறையாக நடைமுறைக்குக் கொண்டு வரும் பொழுதுதான் அன்னை சரஸ்வதியினுடைய கருணை சரியான முறையிலும், லாபகரமான வகையிலும் பயன்படுத்தப்பட்டதாகிறது.

## ஸ்வாத்யாயம்: அனுஷ்டானத்தில் அதன் மதிப்பு.

இவற்றைத் தவிர அன்னை ஆன்மீக சாதனையில் இன்னும் இரண்டு விசேஷ அம்சங்களில் தோன்றுகின்றாள் அன்னை சரஸ்வதி வேத சொரூபிணியாக இருக்கிறாள் என்று கூறினோம். வேதங்

கள் எனப்படுவன மனங்கடந்த பரஞானத்தை அளிப்பன. உபநிஷத்துக்கள் வேதங்களின் உச்ச நிலையைக் குறிப்பன இந்த உபநிஷத்துக்களின் சாரம் முழுவதும் நமக்கு எப்படி பகவத்கீதை என்ற வடிவில் மனித சமுதாயத்திற்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது என்பதை நாம் கேள்விப்பட்டிருக்கிறோம். ஆகவே அன்னையானவள் சாதகனுக்கு இந்த ஒப்புயர்வற்ற உலகப் பொது மறையாம் பகவத்கீதை வடிவில் தோன்றுகின்றாள். ஆகவே ஆன்மீக குருமார்கள் அனைவரும், ஆச்சாரியர்கள் அனைவரும் சாதகர்கள் கீதையைத் தினந்தோறும், முறையாகப் பாராயணம் செய்துவர வேண்டும் என்று வலியுறுத்திக் கூறியிருக்கின்றனர். நாம் அன்றாடம் தவறாது கீதையை பாராயணம் செய்வதன் மூலமாகவும், அதில் அடங்கியுள்ள உபதேசங்களை நமது சொந்த வாழ்க்கையில் படிப்படியாக அனுஷ்டித்து வருவதன் மூலமாகவும் அன்னையை கீதை வடிவில் சதா வழிபட்டு வரவேண்டும். இந்த கீதா பாராயணத்தைப் பற்றி நமது குருதேவர் அவருடைய பாதகமலங்களில் தெய்வீக வாழ்க்கை வாழ்ந்து வரும் சாதகர்கள் அனைவருக்கும் தனது தினசர்யத்தில் மிகவும் வலியுறுத்திக் கூறியிருக்கின்றார்கள். பாதஞ்சல தர்சன நியமத்தில் ஸ்வாத்யாயம் முக்கியமான அம்சங்களில் ஒன்றாக இருப்பதையும் நாம் எல்லோரும் அறிவோம்.

அன்னை சரஸ்வதி எப்படி பராசப்தமாக இருந்து தனது பல்வேறு முன்னேற்ற அம்சங்க

ளான த்வனியாகவும், பின்பு நாதம் அல்லது வாக்காகவும், அதன் பின் அக்ஷர வடிவில் உள்ள குறிப்பிட்ட வாக்காகவும், அக்ஷரக் கூட்டு சேர்ந்து நாமமாகவும், நாமத்தின் அர்த்தம் நமது முன்னிலையில் உள்ள ரூபமாகவும் இருக்கிருள் என்பதைப் பார்த்தோம். இவ்வாறு அன்னை சகலவிதமான சாஸ்திரங்கள், ஆன்மீகப் புத்தகங்கள், தர்ம கிரந்தங்கள் ஆகியவற்றின் புனித அக்ஷரங்கள் வடிவாக இருக்கின்ருள். ஆகவே சாஸ்திரங்கள் அனைத்தும் சரஸ்வதி தத்துவக் கூட்டமாக விளங்குகின்றன. எழுதப்பட்ட அக்ஷரம், வார்த்தை ஆகிய தனது வடிவத்தின் மூலம் அவள் நமக்கு பரஞானத்தைக் கொடுத்தருளுகின்ருள் ஆகவே நாம் ஆன்மீக சாஸ்திரங்களை அன்ருடம் முறையாக அத்யயனம் செய்து வரும் பொழுது நாம் சரஸ்வதியோடு தொடர்பு கொண்டு அவள் மூலம் நேரடியாக உபதேசிக்கப்படுகிரும். ஏனெனில் அவள் அந்த வார்த்தை வடிவமாக இருக்கின்ருள்.

அன்ருட சாதனையில் ஸ்வாத்யாயம் ஒரு முக்கியமான அங்கமாக இருக்கிறது. ஆன்மீக சாதகனுக்கு அது பலவகையில் முக்கியத்துவம் வாய்ந்தது. ஆனல் இங்கு சாதனையில் ஸ்வாத்யாயம் வகிக்கின்ற முக்கிய பாகங்களில் ஒன்றையாவது மேலாக கவனித்துப் பார்ப்போம். ஏனெனில் அது சாதகர்களுடைய எண்ணங்களிலும், பாவனை அல்லது உணர்விலும் எவ்வாறு சத்துவத்தை விருத்தி செய்வதில் உதவிபுரிகிறது என்பதை நமக்கு எடுத்

துக்காட்டும். இவ்வாறு ஆன்மீக சாதனையின் முழுத் தன்மையும் அமைப்பும் ஒருவனுடைய சம்ஸ்காரங் களைக் கொண்டு தீர்மானிக்கப் படுகின்றன. மனமே சகலமாகவும் இருக்கிறது மனம் சம்ஸ்காரங்களின் ஒரு தொகுப்பைத் தவிர வேறில்லை. இந்த சம்ஸ்கா ரங்கள், வியவகாரத்தின் மூலமாக, புறப்பொருள் களோடும், ஆட்களோடும் தொடர்பு கொள்ளுவதன் மூலமாக ஏற்படுகின்றன. இம்மாதிரி தொடர்பு களின் மூலம் ஏற்படுகின்ற அனுபவம் ஜீவனிடத்தில் மேலும் மேலும் சம்ஸ்காரங்களை உண்டுபண்ணு கின்றது. இந்த வியவகாரப் புற உலகில் குறிப்பாக கர்மயோக மார்க்கத்தில், முற்றிலும் அனாத்மீகத் தன்மை வாய்ந்ததும், ஆன்மீக வாழ்விற்கும், முன் னேற்றத்திற்கும் முற்றிலும் விரோதமானதுமான சம்ஸ்காரங்களும், வியவகாரம், பிரவிருத்தி, விஷயங் கள் ஆகியவை சம்பந்தப்பட்ட சம்ஸ்காரங்களும் மா னிட ஜீவனால் தனது அன்றாட புற வாழ்க்கை முறை யில் ஏராளமாகச் சேர்த்து வைத்துக் கொள்ளப்படு கின்றன. இந்த சம்ஸ்காரங்கள் நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டே செல்லுமாகில், அவைகள் மனத்தை மிகப் பயங்கரமான முறையில் கீழ் நோக்கி இழுத்து, புறநாட்டம் கொள்ளச் செய்து, மேலும் மேலும் விஷயாகாரமாக்கிவிடும். ஆனால் அவற்றை முற்றிலும் நீக்கிவிட முடியாது. மிகப் பெரும்பாலான சாதகர்கள் விஷயத்தில் விவகாரங் கள் அனைத்தையும் முற்றிலும் நீக்குவது என்பது இயலாத காரியம். ஆகவே இந்த சம்ஸ்காரங்கள் அல்லது எண்ணங்களை மாற்ற மேலான மனோதத்

துவ ரீதியில் அன்றுடம் உள்ளத்தை உயர்த்தும் ஆன்மீக சாஸ்திர பாராயணத்தின் மூலம் ஆன்மீகக் கருத்துக்கள் மனத்தினுள் புகுத்தப் படுகின்றன. தினசரி முறையான, கவனத்துடன் கூடிய சாஸ்திர பாராயணத்தின் மூலம் சாதகன் தன்னகத்தே உன்னதமான ஆன்மீக மயமாக்கும், வாழ்வை மாற்றும் கருத்துத்திரளை கிரஹித்துக் கொள்கின்றான் அவைகள் சாதகனுடைய மனத்தில் சக்திமிக்க, உடன்பாடான, சாத்வீக, ஆன்மீக சம்ஸ்காரங்களை உண்டாக்குகின்றன. இவ்வாறு அன்றுட வியவகாரங்களினுல் உண்டாகும் தவிர்க்க முடியாத அனுத்மீக சம்ஸ்காரங்களைப் போக்குவதற்கு அவை உதவியாக இருக்கின்றன. சாதகனுக்குப் புது பாவனையை உண்டாக்க வல்ல சக்தி அவைகளிடத்தில் அடங்கியிருக்கின்றன. அவைகள் சாதகனுடைய எண்ணங்கள் சம்ஸ்காரங்கள் மற்றும் பாவனை ஆகியவற்றை மாற்றிவிடுகின்றன. கருத்துக்கள் வடிவில் இம்மாதிரி அன்றுடம் ஊட்டப்படும் ஆன்மீக சத்துவ உணவு, முனிவர்களின் வாழ்க்கை, கீதை, பாகவதம், ராமாயணம், பைபிள், கொரான், ஜென்ட் அவஸ்தா, தம்மபாதம் முதலிய புனித கிரந்தங்கள் வடிவாகவுள்ள அன்னை சரஸ்வதியோடு வைத்துக் கொள்ளும் தொடர்பினுல் கிடைக்கிறது.

இவ்வாறு மனத்தில் சக்திமிக்க நல்ல ஆன்மீகக் கருத்துக்களை உண்டாக்கிக் கொள்வதானது சாதகனுக்கு தாரணை, தியானம் பயிலும் பொழுது உதவியாக இருக்கும். ஒரு சாதகன் தியானம் பயில

முயற்சிக்கும் பொழுது அவனுடைய மனம் அலே வதைப் பார்க்கிறோம். தியானத்தின் ஆரம்ப நிலே களில் இந்த அலேச்சல் மிகவும் பலம் பொருந்திய தாக இருக்கும். தியானப் பயிற்சி முழுவதும் இழு பறிப் போராட்டமாகவே இருக்கும். மனத்தை லக்ஷியத்தில் கொண்டுவந்து நிறுத்தினுலும் அது மீண்டும் அலேகிறது. இந்த இடத்தில் மிகவும் விரும்பத்தகாத விஷயம் ஒன்று உள்ளது; அதாவது அது அலேயும் பொழுது அதனுடைய கருத்தில் ஏற் படுகின்ற விஷயங்களெல்லாம் புலன்வழி சம்பந்தப் பட்டதாகவும், இருக்கின்றன. இந்த அலேச்சலே படிப்படியான வைராக்கிய அப்பியாஸத்தாலன்றி வேறு வகையில் தடுத்து நிறுத்த முடியாது. ஆனுல் அதே சமயத்தில் ஒரு மாறுதலே உண்டாக்க முடியும்; ஸ்வாத்யாயத்தின் மூலம் தினந்தோறும் சக்தி மிக்க தொரு ஆன்மீகக் கருத்துத் தொகுப்பை மனத்தி னுள் திணிப்போமாகில் அப்பொழுது மனம் அலேந் தாலும், விக்ஷேட சமயத்தில் அது எடுத்துக்கொண்டு அலேகின்ற கருத்துக்கள் படிப்படியாக சாத்வீகமாக ஆகிவிடுகின்றன. கீழான எண்ணங்களிலே மனம் உருண்டு புரளுவதை விடுத்து இப்பொழுது தூய்மை யான விஷயங்கள், பெரிய கருத்துக்கள், உயர்ந்த சாத்வீகமான எண்ணங்கள் ஆகியவற்றில் அலேந்து கொண்டிருக்கும். அப்பொழுது இந்த அலேச்சல் சாதகனுக்குக் கேடு பயப்பது குறைவாக இருக்கும். இந்த வகையிலும் ஸ்வாத்யாயம் சாதகனுக்கு ஒரு விலேமதிக்க வொண்ணுத செல்வமாக விளங்கும்.

## கொஞ்சமாகப் பேசுக

ஆன்மீக சாதகனுடைய பிரத்தியக்ஷ நடத்தை யாகிய ஆசாரத்தைக் கவனிப்போம். சாதகனுடைய அன்ருட வாழ்க்கையில் மிகவும் மதிப்புடையதான ஒரு சில கருத்துக்களை நாம் இங்கு குறிப்பிடுவோ மாக. அன்னை வாக்காக விளங்குவதை நாம் கவனித் தோம். எல்லா ஜீவன்களிடத்தும் அவள் வாக்காக விளங்குகின்ருள். அவள் வாக்சக்தியாக இருக்கின் ருள். ஆகவே முறையாகக் குறிப்பிட்ட நேரத்தில் மௌனம் அனுஷ்டிப்பதன் மூலம் வாக்கைக் காப் பதும் அன்னை சரஸ்வதியை வழிபடுவதாகும். வாக் ரூபத்தில் உள்ள அன்னையின் இந்த சக்தி பாது காத்து வைக்கப்படும் பொழுது சாதகனுக்கு ஒரு ஆஸ்திபோல் ஆகிவிடுகிறது. இதை பிரத்யாஹாரம், தாரணை, தியானம் முதலிய யோக சாதனைக்கு நன்கு பயன்படுத்தலாம். மௌன சாதனையின் மூலம் சேக ரித்து வைக்கப்பட்ட வாக் சக்தியானது விசாரணை செய்வதற்கும், தற்சோதனை செய்வதற்கும் மிகவும் பயனுடையதாக இருக்கிறது. மௌனம் அனுஷ்டித் துப் பார்த்து எந்த ஒரு சாதகனும் இதை பிரத்தி யக்ஷமாக அனுபவித்துப் பார்க்கலாம். வாக்கானது வெளியில் செலவு செய்யப்படும் வரையிலும் மனம் வெளியில்தான் போய்க் கொண்டிருக்கும். அதே மாதிரியான தீவிர விசாரணையும், தற்சோதனையும் ஒருவனுல் செய்யமுடியாது. மௌனத்தின் மூலம் வாக்சக்தி சேமிக்கப்பட்டு வைக்கப்படும் பொழுது அது மனத்தை உள்முகமாக்கவும், தற்சோதனை

செய்யவும், விவேகம், விசாரம் ஆகியவற்றைப் பயில வும் சக்தி வாய்ந்ததாகி விடுகிறது.

## உண்மையே பேசுக

வாக்கின் புனித சக்தியின் புனிதத் தன்மை யைப் பாதுகாப்பது ஆன்மீக சாதகர்களின் பெரிய தொரு கடமையாகும். வாக் ரூபத்திலுள்ள அன்னே சரஸ்வதி சக்தியின் புனிதத் தன்மையை நாம் பாது காக்க வேண்டும். பொய்மை ஆன்மீகத்திற்கு ஒவ் வாதது, தூய்மையற்றது. ஆகவே பரம்பொருள் நாட்டமுடைய சாதகன் தன்னுடைய வாக்கில் உண் மை வெளிப்படுமாறு மனப்பூர்வமாக முயற்சிக்க வேண்டும். சத்திய விரதத்தின் மூலமாக அனுஷ் டிக்கப்படும் இந்த வாக்குத் தூய்மைப் பண்பு மிக முக்கியத்துவம் வாய்ந்தது. மிகச் சிறந்த பண்பாகிய இந்த வாய்மையின் முக்கியத்துவத்தை வாக்கால் வர்ணிக்கமுடியாது. சுருங்கச் சொன்னல் சத்திய மில்லாத சாதகனுடைய வாழ்க்கை வெறும் வெளி வேஷமேயாகும். அது வெறும் சூன்யம். தனது சக்தி முழுவதையும் பிரயோகித்து, மனப் பூர்வமாக சத்தியத்திலிருந்து பிறழாமல் இருக்க ஒருவன் முயற்சி செய்யாவிடில் அவனிடத்தில் இம்மியளவும் ஆன்மீக முன்னேற்றத்தைக் காண முடியாது. ஆன் மீகப் பாதையிலே இடையே தங்குமிடம் கிடையாது. ஒரு மனிதன் ஒன்று வாய்மையாளனுக இருக்கிருன் அல்லது பொய்மையாளனுக இருக்கிருன். அவன் பரிபூரணமான சத்தியவானுக இல்லாவிடில் ஆன்மீக முன்னேற்றம் வீணுசையும் வெறும் கனவுமாகத்

தான் இருக்குமேயொழிய அந்த சாதகனுக்கு அது அடையக்கூடிய விஷயமாக இருக்காது. இது சத்தியம். ஆகவே மக்கள் இது விஷயத்தில் உண்மையான அக்கறையுடையவர்களாக இருந்தால், சாதகர்கள் தங்களுடைய வேட்கையில் மனப்பூர்வமாக இருப்பவர்களாக இருந்தால், வலியும் துயரமும், நோயும், நிறைந்து கடைசியில் மரணத்தில் போய் முடிவடையும். இந்த அழியும் உலக வாழ்வை நீத்து இந்த பந்தத்தை எப்படியாவது அறுத்தெறிந்து விடவேண்டுமென்கின்ற தகிக்கும் வேட்கை அவர்களிடம் இருக்குமாகில், தன்னை விடுவித்துக் கொண்டு நிலையான பேரின்பத்தை அடைய வேண்டுமென்கின்ற ஆசை இருக்குமாகில், ஒருவன் சத்திய வழியைக் கட்டாயம் மேற்கொண்டாக வேண்டும். அப்பொழுதுதான் அன்னை சரஸ்வதி கருணை கூர்ந்து சாதகன் மீது தனது கிருபையைப் பொழிவாள் அப்பொழுது முடிவான உண்மையின் ஞானம் அவனுக்கு ஏற்படும். பண்புகளுக்கெல்லாம் மேலான பண்பாக இருப்பதும், அன்னை சரஸ்வதியின் மகோன்னமானதும், மிகவும் பிரகாசம் பொருந்திய ரூபத்தோடு கூடிய தோற்றமாகியதுமான இந்த வாய்மையை, சத்தியத்தை நாம் தினந்தோறும் தவருது தியானிப்போமாக. ஒரு மனிதன் அன்னையை சத்திய வடிவமாக ஆவாஹனம் செய்ய வேண்டும். (அவ்வாறு செய்தால்) அவன் ஆத்மாவின் மகிமையை தனது உள்ளத்தில் ஸ்தாபித்தவன் ஆகின்ருன். அது இல்லாத வரையிலும் ஆத்ம ஜோதி அந்த ஜீவனிடத்தில் பிரகாசிக்காது. ஆகவே நாம் எப்பொழு

தும் அன்னை சரஸ்வதியை சத்திய ரூபமாக தியானிப் போமாக. சத்தியம்தான் மஹா யோகம். இந்தக் கலியுகத்தில் இதுதான் மிகப் பெரிய தபஸ். எவரி டத்தில் சத்தியம் உண்டோ அவரிடத்தில் கடவுள் உண்டு. சத்திய வடிவில் அன்னையின் முக்கியத்து வத்தை நாம் எப்பொழுதும் நினைவில் வைத்திருப் போமாக. அதை நாம் தியானிப்போமாக. அதைச் சிந்திப்போமாக. நமது எண்ணம், சொல், செயல் ஆகியவைகளில் சத்தியத்தின் பரிபூரண நிலையை அடைய சதா முடிந்தவரை முயன்று கொண்டிருப் போமாக. மிக அத்தியாவசியமானதும், ஆனால் மிகக் கடினமானதுமான இதை அடைய அன்னையின் கருணை நமக்கு உதவி புரியுமாக.

## இனிமையாகப் பேசுக

பேசப்பட்ட வார்த்தையாகிய பாஷை சர்வ சக்தி வாய்ந்தது. இந்த மானிட உலகில் இது ஒரு பலம்பொருந்திய சக்தி. பாஷையை உபயோகித்து ஆக்க வேலையும் செய்யலாம், அழிவு வேலையும் செய்ய லாம். சர்வ நிர்மாண வேலைக்கு அன்னை சரஸ்வதி எவ்வாறு ஆதாரமாக இருக்கிறாள் என்பதை கவனித் தோம். ஆகவே ஆன்மீக சாதகன் இந்த வாக் சக்தியைப் பிரயோகிக்கும் முறையில் மிகவும் எச்சரிக் கையாக இருக்க வேண்டும். பகவானுடைய சிருஷ்டியிலடங்கிய எந்த ஒரு ஜீவனையும் ஞாபக மறதியாகக்கூட கடுஞ் சொல்லால் இம்மியளவும் ஒரு பொழுதும் துன்பப்படுத்துவதில்லை என்ற விரதத் தை அவன் மேற்கொள்ள வேண்டும். மனம் புண்

படும் படியான கடுஞ் சொல் சாதகனுடைய பேச்சி லிருந்து அடியோடு நீக்கப்பட வேண்டும். ஒவ் வொரு வரும் இனிமையாகப் பேச வேண்டும். ஏதா வது சந்தர்ப்பத்தில் இனிமையாகப் பேசுவது கடின மாகத் தோன்றினல் அப்பொழுது பேசாமலே இருந்து விடுவது நல்லது. அதற்கடுத்த மூன்ரும் தரமாகிய சிறந்த வழி, கடுமையாகப் பேச நேர்ந்து விட்ட பொழுது உடனே, யாரை நோக்கிப் பேசப் பட்டதோ அவரிடம் அதற்காக வருத்தம் தெரிவித்து மன்னிப்புக் கேட்டுக் கொள்வதாகும். இந்த வழி யும் இருந்தாலும் இது மூன்ரும் தரமானவர்களுக் காக உள்ள வழி. ஆனல் நாம் எப்பொழுதும் முதல் தரத்தைச் சார்ந்த உத்தம அதிகாரியாக இருக்க ஆசைப்பட வேண்டும். நமது பேச்சு எப்பொழுதும் இனிமையாக இருக்க வேண்டும் மித பாஷணம் சத்ய பாஷணம், மதுர பாஷணம்என்னும் மூன்றை யும் எப்பொழுதும் ஞாபகத்தில் வைத்துக் கொள் ளுங்கள்.

### *நாவை அடக்குக.*

மீண்டும், உலகில் ஆக்க சக்தியாக இருக் கின்ற அன்னை சரஸ்வதியை நமது பேச்சின் மூலம் மற்றவர்களுக்கு உதவியாக இருப்பதற்காக உபயோ கப்படுத்த வேண்டும். நமது பேச்சு சோம்பேறித் தனமான வீண் பேச்சாக இல்லாமலிருப்பதாக. நாம் அன்னை சரஸ்வதியின் சக்தியினல் யாரிடம் பேச வேண்டி வருகிறதோ அந்தப் பேச்சு; அவர்களுக்கு

ஆறுதல் அளிப்பதாகவோ, ஊக்கமூட்டக் கூடியதா கவோ, உற்சாகப் படுத்தக்கூடியதாகவோ, தெளிவை உண்டு பண்ணுவதாகவோ, அறிவை ஊட்டக் கூடியதாகவோ அல்லது ஏதாவது ஒரு வகையில் உதவி அளிக்கக் கூடியதாகவோ, அல்லது கடவுளைப் பற்றியதாகவோ, உன்னதமான லட்சியங் களைப் பற்றியதாகவோ இருத்தல் வேண்டும். ஆன் மீக சாதனையிலும், மெய்ப் பொருளை நாடிச் செல்லு கின்ற வாழ்க்கையிலும் வீண் பேச்சு முற்றிலும் அகற்றப்பட வேண்டும். வீண் பேச்சு பேசுவது அன்னையை அவமரியாதை செய்வதாகும். ஏனெ னில் அன்னை நம்மிடம் சக்தி மிக்க வாக் அல்லது பேசப்படும் வார்த்தையாக விளங்குகின்றுள்.

சாதகர்கள் ஒரு பொழுதும் தகாத வார்த்தை களைப் பேசக்கூடாது. இதுவே தகாத பழக்கங் களுக்கும் பொருந்தும். தீய பழக்கங்களைவிட நல்ல பழக்கங்கள் சில சமயங்களில் சுலபத்தில் விட்டு நீங்கி விடும். ஏனெனில் தீயவைகள் ஜீவனின் கீழான தன்மையில் உறுதியாகப் படிந்திருக்கின்றன. மனி தனிடமுள்ள கீழான மிருகத் தன்மைகள் கடந்த காலத்தில் திரும்பத் திரும்பச் செய்து வந்த பழக்கம் காரணமாக மிகவும் உறுதியாகப் பற்றிக் கொண்டி ருக்கின்றன. ஆகவே நாம் பேச்சு 75 சத விகிதம் ஒழுங்கீனமானதும் 25 சத விகிதம் ஒழுங்கானது மான உலகிலிருந்து வந்திருக்கிறோம். பெரும்பான் மையானவர்களுடைய சாதாரண சம்பாஷணையில் கொச்சையான அல்லது ஒழுங்கீனமான வார்த்தை

கள் சர்வ சாதாரணமாகக் காணப்படும். தங்களு டைய செய்கை தவருனது என்பதை அவர்கள் உணர்வதுகூட கிடையாது. ஆனுல் இதே நிலை ஒரு ஆன்மீக சாதகனுடைய வாழ்விற்கும் பொருந்தும் படியாக விட்டு விடக்கூடாது. தகாத வார்த்தைகள் சாதகனுடைய பேச்சிலிருந்து முற்றிலும் விலக்கப் பட்டிருக்க வேண்டும். அவனுடைய பேச்சு கங்கை யின் தூய ஜலத்தைப் போன்றதாக இருத்தல் வேண்டும்.

ஒரு சாதகனுடைய வாழ்வில் இந்த வழிகளி லெல்லாம் அன்னை சரஸ்வதியை சுத்த சத்துவ வடி வில் தோன்றச் செய்ய முடியும். இவைகள் அனைத் தும் ஆன்மீகப் பண்புகளாம். இவைகள் எல்லாம் அவனிடத்தில் சத்துவத்தை அதிகப்படுத்தி மறை முகமாக ஆன்மீகப் பரிபக்குவத்திற்கு வழி கோலு கின்றன.

அன்னையானவள் தனது நிவ்ருத்தி அம்சத் தில் சாதகனுடைய அகப்பாதையில் தோன்றுகின்ற முறையில் நாம் எல்லோரும் அன்னையின் இந்த பல் வேறு அம்சங்களை நினைவிலிருத்தி வைத்திருப்போ மாக நமக்கு முன்னிலையில் வைக்கப்பட்டுள்ள கருத்துக்களில் இவைகள் ஒரு சிலவே. இவைகளை நாம் சிந்தனை செய்து பார்ப்போமாகில் அன்னை சரஸ்வதி ஒரு சாதகனுடைய வியக்தியில் இன்னும் என்னென்ன வழிகளில் பண்புகளை நிரப்ப முயற்சிக் கின்ருள் என்பது தெளிவாகும். இவ்வாறு சத்து

வத்திற்கு விரோதமான குணங்கள் யாவை என்பதை நாம் புரிந்துகொள்ளும் பொழுது அன்னை சரஸ்வதிக்கு எதிராக உள்ள அவற்றை விலக்கவும்' தவிர்க்கவும் நாம் முயற்சிப்போம். அத்துடன் அவள் அதிகமாகத் துலங்கி நிற்கும் நமது அந்தரங்க வாழ்வினுடையதும், பண்பினுடையதுமான நல்ல அம்சங்களை நல்ல முறையில் உண்டாக்கி விருத்தி செய்யவும் அது சௌகரியமாக இருக்கும். ஆத்மீகத்திற்கு விரோதமானதும், தூய்மையற்றதுமான செயல்களை விடுத்து தூய சத்துவ குணத்தன்மையில் மேலும், மேலும் வளர்ச்சியடையவும் இது உறுதுணையாக விளங்கும். இம்மாதிரி முயற்சித்து வந்தால் முடிவில் நம்மிடமுள்ள ஆன்மீக உணர்வை முற்றிலும் பரிமளிக்கச் செய்து நமது சொரூபத்தை அறிந்து சொரூப ஞானத்தையும் அடைவது திண்ணம். அப்பொழுது “நான் மனமுமல்ல, சரீரமுமல்ல; நான் அமர ஆத்மா” “சுத்தோஹம், புத்தோஹம், நிரஞ்சனோஹம், சம்ஸாரமபிபரிவர்ஜிதோஹம்” “தேஹோ நாஹம், ஜீவோ நாஹம், பிரத்யகபின்ன பிரஹ்மை வாஹம்”, “ஸச்சிதானந்த சொரூபோஹம்” என்று மார்தட்டிப் பேச முடியும். இவைகள் எல்லாம் பரமாத்மாவின் முதல் தோற்றமாகிய அன்னை சரஸ்வதியை மனப்பூர்வமாக வழிபட்டு, அவளுடைய கருணையைப் பெற்று ஆத்மஞானத்தை அடைந்த சாதகனுடைய ஒப்புயர்வற்ற வாக்கியங்களேயன்றி வேறில்லை.

# விஜயதசமி

## மஹா லக்ஷியமும் அதை அடைதலும்

இன்று அன்னையினுடைய மகத்தான வெற்றித் திருநாள். இது ஒரு விஜய தினம். தேவர்கள் எல்லாம் களிப்படையும் தினம். மனித வர்க்கமெல்லாம் ஆனந்தக் களிப்பெய்தும் தினம்; ஏனெனில் அவர்கள் எல்லோருக்கும் ஒரு பரம வாக்குறுதி கிடைத்து விட்டது. என்ன அந்த வாக்குறுதியெனில் அன்னை பராசக்தியை எதுவரை சார்ந்திருக்கின்ருர்களோ அதுவரை அவர்களுக்குத் தேவையான பொழுதெல்லாம், அவர்களுக்கு கஷ்டம் ஏற்படும் பொழுதெல்லாம் அன்னையின் ஆதரவுக்குக் குறைவு இருக்காது என்பதுதான். ஏனெனில் அன்னையின் பாதகமலங்களைச் சரணடைந்தோருக்கும், துன்பத்தால் அவதிப்படுவோருக்கும் அன்னை அடைக்கலம் தந்து பல ஆதரவு கொடுக்கின்ருள். அவள் எல்லையிலா சக்தி, மஹா சக்தி. நாம் அவளை நாடி அவள் பக்கம் திரும்பினுல் போதுமானது. நமது கவலையெல்லாம் பறந்து போகும். அறியாமையாகிய அஞ்ஞான இருளை வெற்றி கண்ட அன்னையினுடைய ஆனந்தத்தில் அன்னையோடு நாமும் பங்கு கொண்டவர்களாகிருேம். விஜயதசமி தினம் சாதகர்கள் அனைவருக்கும், நம்பிக்கை, பலம், தைரியம் ஆகியவற்றை ஊட்டக் கூடிய நன்னுள்.

இந்த நன்னுளில் சாதகர்கள், இறை தாகம் கொண்டவர்கள் ஆகிய அனைவரும் மகோன்னத

பலத்தையும், தைரியத்தையும் பெறுகின்றார்கள். ஏனெனில் தெய்வீகத் தன்மை பரிபூரணமாகத் தோன்றுவதற்கு இடையூறாக இருந்த தீய சக்திகள் அனைத்தையும் அழித்து விடுவதன் மூலம் அன்னையானவள் பரப்பிரம்ம வாசஸ்தலத்தின் கதவுகளைத் திறந்து விட்டு விடுகின்றாள். இந்தப் புண்ணிய தினத்தில் அன்னையை வழிபாடு செய்வது மஹா மாயையை அவளுடைய தூய்மையானதும், பூரணமானதுமான வித்யா அம்சத்தில் வழிபாடு செய்வதாகும். இந்த நவராத்திரியில், இதுவரை, அன்னையை இந்த மானிட உலகில் அவள் தோற்றமளித்திருக்கும் பல் வேறு அம்சங்களில் போற்றி வழிபாடு செய்து வந்தோம். ஆனால் நாம் விஜயத்திற்கு வரும் பொழுது நாம் அன்னையினுடைய புற அம்சங்கள், வித்யா-அவித்யா அம்சங்கள் ஆகிய அனைத்தையும் கடந்து அன்னையினுடைய திருமுகத்தை தூய வித்யா மாயையாக பராசக்தியாக உற்று நோக்குகின்றோம். அவளை உற்று நோக்குவது என்பது எல்லையிலாத, ஆழம் காணமுடியாத பரப்பிரம்மத்தையே உற்று நோக்குவதாகும்.

ஏனெனில் இந்த வழிபாட்டைத் துவங்கும் பொழுதே அன்னையானவள் பரப்பிரம்மத்தைத் தவிர அன்னிய மானவள் அல்ல என்ற பிரகடனத்தின் பேரில்தான் துவங்கினோம். அந்தப் பரம்பொருளேதான் அன்னையாக விளங்குகின்றாள். ஆகவே, வித்யா மாயை என்னும் அவளுடைய பரிசுத்த அம்சத்தில் அவள் பரப்பிரம்மமாகவே இருக்கிறாள்.

தேஜோ மயமானதும் மாட்சிமை பொருந்தியதும், ஆத்மஞானப் பிரகாசமாக இருப்பதும் ஆகிய இந்த மகோன்னத வித்யா ரூபத்தில்தான் இந்த பரம புண்ணிய தினமான விஜயதசமியன்று அன்னைக்கு நமது வழிபாடுகளையும், வந்தனங்களையும் செலுத்திக் கொண்டிருக்கிறோம்.

இந்த நன்னாளில் கீழ்த்தரமான தீய சக்திகள் எதுவும் இருக்காது. அசுர சம்பத் என்பதே கிடையாது. மிருகத்தன்மை இருந்த இடம் கூட தெரியாது. அந்த கார இருளாக இருந்தது அனைத்தும் அழித்தொழிக்கப்பட்டுவிட்டன. அது அழிந்துவிட்டது. தனது மேலாம் நிலையில் இருந்து கொண்டு அன்னையே ஆட்சி செலுத்துகின்றாள். அன்னையன்றி வேறு எதுவுமில்லை. அவள் மீண்டும் எல்லையிலா பிரக்ஞான கனமாக விளங்குகின்றாள். தேஜோ மயமான, சக்திமிக்க இந்த அம்சத்தில் அன்னையை நாம் அழைக்க வேண்டுமானால் நாம் மனம் வாக்கைக் கடந்து நிற்கும் பரம்பொருளைப் பரம பக்தி சிரத்தையோடு வழிபாடு செய்து அந்தப் பரவச நிலையில் மூழ்கி விடவேண்டும். இவ்வாறாக நாம் அந்தப் பரம் பொருள் வழிபாட்டைத் துவங்குகின்றோம். அந்தப் பொருளை அடைந்தவனுக்கு இந்தத் துன்ப மிகுந்த ஜனன மரண பயம் முற்றிலும் நீங்கி விடுகிறது. அது அணையா ஜோதி நிறைந்த அமர வீடு. அங்கு சென்றவர்கள் மீண்டும் துக்கத்திற்குத் திரும்பி வரமாட்டார்கள். இனி இன்பமேயன்றி எந்நாளும் துன்பமில்லை. துக்கம், துன்பம், மயக்கம்

ஆகியவை அனைத்தையும் தாண்டி அந்த மேலாம் வீடுபேற்றை நிரந்தரமாக அடைந்து விடுகின்றோம். சாதகனுக்கும், மானிட வர்க்கம் முழுவதற்கும் அதுவே பரம லக்ஷியமாக விளங்குகிறது. உண்மையில் இந்த மானிடப் பிறவி கொடுக்கப்பட்டுள்ளதன் நோக்கமே அப்பெருநிலையை அடைவதற்காகத் தான். ஏனைய விவகாரங்கள் அனைத்தும் வெறும் மயக்கம். மதிக்க முடியாத ஒப்புயர்வற்ற மனிதப் பிறவி எடுத்ததன் நோக்கமும், முடிவும் ஒரே அர்த்தமும் இந்தப் பரம் பொருளை அடைவதைத் தவிர வேறில்லை.

## குரு: பரம சக்தியின் திருவுருவம்.

இப்புண்ணிய தினத்தில் ஆன்மீக வாழ்க்கையின் மிகப் பெரிய இரகசியமாக உள்ள ஒரு விஷயத்தை நுழைந்து பார்க்கின்ற ஒரு சந்தர்ப்பத்தை உண்டு பண்ணிக் கொள்வோமாக. இவ்வுலக வாழ்வின் பல்வேறு சலனங்களிலும், சாதகனுடைய பல்வேறு பண்புகளிலும், பல்வேறு வாழ்க்கை முறைகளிலும், மனித வாழ்வின் பல்வேறு படிகளிலும், நடவடிக்கைகளிலும் அன்னை எவ்வாறு துர்க்கை, லக்ஷ்மி, சரஸ்வதி என்னும் தனது அம்சத்தில் தோன்றுகின்றாள் என்பதை கவனித்தோம் ஆனால் இவை எல்லாம் அநேகமாக யாரையும் குறிக்காத வகையிலேயே இருந்து வந்தது. அவள் விசேஷமாயும், சித்தி வடிவமாயும் உள்ள ரூபத்திலும் தோன்றுகின்றாள். அவளுடைய இந்த சித்தி வடி

வம் தான் தெய்வீக வியக்தித் தன்மையில் விளங்கு கின்றது. அன்னையானவள் நமது ஆன்மீக குரு வாகத் தோற்றமளிப்பது ஒரு பாம ரகசியமான விஷ யம். அந்த ரகசியம் பகவானுடைய கருணையினால் அன்னை சரஸ்வதியின் அனுக்கிரஹத்தால் சாதகனு டைய உள்ளத்திற்குப் புலப் படுத்தப் படுகிறது. அன்னையானவள் தனது வித்யா மாயா அம்சத்திலும், வித்யா சக்தி அம்சத்திலும், நேரடியாக வியக்தி வடிவில் தோற்றமளிக்கின்ற இந்த ரகசியம் தான் சீடனுக்கு குருவாக விளங்கும் ரகசியம். சாதகனுக்கு அவள் சத்குருவாக விளங் குகின்றாள். ஒரு ஆன்மீக சாதகனுக்கு, அவன் யாரை குருவாக ஏற்றுக் கொண்டானோ அந்த குரு வானவர் சாக்ஷாத் அன்னை பராசக்தியின் கண்கண்ட வியக்தித் தோற்றம் என்பதில் எள்ளளவும் சந்தேக மில்லை

அன்னையை இந்த வகையில் பாவிக்கின்ற முறையைப் பொறுத்துத்தான் சாதகனுடைய ஆன் மீக வாழ்வின் அஸ்திவாரம் முழுவதும் சார்ந்திருக் கிறது. ஹிந்து மதத்தின் தத்துவம் முழுவதும் இதைத்தான் ஆதாரமாகக்கொண்டிருக்கிறது. இந்தக் கோட்பாட்டிற்கு இணையாக அகில உலகி லும் வேறு எந்தப் பண்பாட்டாரிடத்திலும் காண முடியாது. சத்குருவின் பிரத்யட்ச வடிவின் மூலம் தோன்றி நிற்கும் பரம்பொருளைப் பார்க்கின்ற இந்த இரகசியம்தான் சாதகனுடைய ஆன்மீக வெற்றிக்கு அடித்தளமாக இருக்கிறது. இவ்வாறாக, குறிப்பிட்ட ஒருவரைச் சரணாக அடைந்து, அவரையே தங்களு

டைய ஆன்மீக குருவாக மனப்பூர்வமாக வரித்துக் கொண்டு இருந்துவரும் ஆன்மீக சாதகர் குழுவிற்கு அவர் பராசக்தியின் பரம சொரூபமாகவும், பிரம்ம மாகவும், விஷ்ணுவாகவும், மஹேஸ்வரராகவும், சக்தி யாகவும், அக்ஷரப் பரப்பிரம்மமாகவும் விளங்குகின் றார். இந்த உண்மையைப் பரம்பொருள் நாட்ட முடைய உண்மையான எந்த ஒரு சாதகனும் தனது ஆன்மீக வாழ்வில் ஒரு கணப் பொழுது கூட எண்ணத் தவறவோ, அல்லது மறந்து விடவோ இடம் கொடுத்துவிடக் கூடாது. அவன் குருவினு டைய உருவத்தில் மனிதத் தோற்றத்தைக் காண வே கூடாது. அதற்கு பதிலாக அவனுக்கு முன் பாக பரம தெய்வீக சக்தியின் ஜோதி சொருபம்தான் நிற்க வேண்டும். கீழை நாட்டவராயினும் சரி, மேலை நாட்டவராயினும் சரி, பிரபஞ்சம் முழுவது முள்ள சாதகர்கள், முமுக்ஷுக்கள் அனைவருக்கும் இது மனப்பூர்வமாக விடுக்கப்படும் வேண்டுகோ ளும், நினைவூட்டும் வார்த்தைகளுமாகும். எவர் மனப்பூர்வமாக தங்கள் குருவாக யாரை ஏற்றுக் கொண்டிருந்தாலும் சரி அவர்கள் தங்கள் சத்குரு விடம் இந்த மாதிரியான மனப்பான்மையைத்தான் வளர்க்க வேண்டும் என்று அவர்களுக்கும் இது ஞாபகப்படுத்தும் உரையாகும்.

அன்னையானவள் தனது தூய வித்யா மாயை அம்சத்தில் குரு வடிவில் விசேஷமாகத் தோன்று கின்றாள் என்கின்ற உண்மையை முற்றிலும் உணர்ந்திருக்கின்ற அளவுக்குத்தான் நம்மிடம்

தெய்வீக ஞானம் நமது உணர்வில் பரிமளிக்கும். அந்த அளவில்தான் ஆன்மீக அநுபூதியின் வெற்றி அமைந்திருக்கும்.

ஆகவே ஒரு குருவிடம் தங்களை ஒப்படைத்து விட்ட சாதகர்களுக்கும் முமுக்ஷுக்களுக்கும் மீண்டும் மீண்டும் ஞாபகப்படுத்த விரும்புவது யாதெனில் அந்த குரு பகவானை வழிபட வேண்டுமென்பது தான். சாதகர்கள் தினந்தோறும் ஜபிக்கின்ற கீழ்க் கண்ட சுலோகங்கள் இந்த ரகசியத்தையும் பேருண் மையையும் எடுத்து விளக்குகின்றன:—

குரு ப்ரஹ்மா, குரு விஷ்ணு : குருர்தேவோ
மஹேஸ்வர :

குரு : சாக்ஷாத் பரப்ரஹ்ம தஸ்மை ஸ்ரீ
குருவே நம :

தியான மூலம் குரோர் மூர்த்தி : பூஜா மூலம்
குரோ : பதம்

மந்த்ர மூலம் குரோர் வாக்யம் மோக்ஷ மூலம்
குரோ : கிருபா.

த்வம்ஹி விஷ்ணு விரிஞ்சிஸ்த்வம் த்வம் ச
தேவோ மஹேஸ்வர :

த்வமேவ சக்தி ரூபாஸி நிர்குணத்வம் சநாதந :

குருவின் உண்மை வடிவம் யாது? நாம் அவரை என்னவாக பாவிக்க வேண்டும்?

யஸ்யாந்தர் நாதி மத்யம் ந ஹி கர
சரணம் நாம கோத்ரம் ந சூத்ரம்

ந ஜாதிர் நைவ வர்ணோ ந பவதி புருஷோ
நோ நபும்ஸோ ந ச ஸ்த்ரீ
நாகாரம் நோவிகாரம் ந ஹி ஜநந மரணம்
நாஸ்தி புண்யம் ந பாபம்
நோ தத்வம் தத்வ மேகம் சகஜ
சமரஸம் ஸத் குரும் தம் நமாமி:

இந்தப் புனித வாக்கியங்களில் தெய்வீக வித்யா மாயையின் மஹா ரகசியத்தின் ஒரு சிறு பகுதி தெரிவிக்கப்பட்டுள்ளது.

## மஹா சாஸ்திரங்களின் சாரம்

மகிமை வாய்ந்த விஜய நாளாகிய இன்று அன்னையின் வெற்றியோடு கூடிய வித்யா மாயை அம்சத்திற்கு நமது வழிபாடுகள் உரித்தாகுக. உண்மையில் இது சத்குரு வடிவிலுள்ள ஆன்மீக வியக்தியின் மூலம் அதில் தோன்றியுள்ள மேலாம் பரப்பிரம்மத்தையே வழிபாடு செய்ததாகிறது. நாம் அன்னையை பல்வேறு வழிகளில் வழிபாடு செய்திருக்கிறோம். இன்று, எழுதப்பட்ட பத வடிவில் உள்ள உன்னதமான சாஸ்திரங்கள் வடிவில் அவளை விசேஷமாக வழிபட முயற்சித்திருக்கிறோம். அதாவது கீதை, பிரம்மசூத்திரம், பாகவதம், ராமாயணம் முதலிய சாஸ்திரங்களைப் படிக்கும் வகையில் வித்யாரம்பம் செய்கின்றோம். ஆகவே வரி வடிவில் உள்ள சாஸ்திரங்கள் ரூபமாக அன்னையை பாவித்து அணுகும் முறையைப் பற்றி ஒரிரு வார்த்தைகள் இங்கே குறிப்பிடுவது பொருத்தமானதாக இருக்கும். நான்

முன்பு விவரிக்க முயன்றதைப் போல் ஸ்வாத்யாயம் என்பது சாதகனுக்கு மிகவும் விசேஷமானதொரு முறையாகும். ஆனால் அதே சமயத்தில் இது வாழ்வின் நடைமுறை வழியுமாகும். நமது ஆசைகளையும், நோக்கங்களையும், லக்ஷியங்களையும், நமது அன்றாட வாழ்க்கையையும், செயல் முறைகளையும் சரியான முறையில் உருவாக்குவதற்காக ஏற்பட்டதாகும். ஆகவே கீதை, பிரம்ம சூத்திரங்கள், பாகவதம், ராமாயணம், மஹாபாரதம் முதலிய சாஸ்திரங்களில் நம்முடைய ஆன்மீக மார்க்கத்திற்குத் தேவையான மதிப்புமிக்க பல பாடங்கள் அடங்கியுள்ளன.

பகவத் கீதையின் மூலமாக அன்னை விடுக்கும் அறைகூவல் யாது என்று ஒரு வார்த்தையில் கூறுக. பகவத் கீதையில் அன்னை விடுக்கும் பரம உபதேசமும் அறை கூவலும் தியாகமேயாகும். கீதை என்றால் தியாகம். இது தியாகத்தின் ரகசியம் அடங்கப் பெற்றுள்ள சாஸ்திரம். பரம் பொருளை அடைவதற்குரிய ஒரு வழி, தோற்றம் இவ்வுலகத்தைச் சார்ந்த—அனைத்தையும் விடுத்து உமது கர்த்ருத்வ அபிமானத்தையும், அகங்காரம், பற்று ஆகியவற்றையும் துறந்து இப்பிரபஞ்சம் முழுவதையும் விராட் சொரூபமாக உணர்ந்து உமது செயல்களெல்லாம் அந்த விராட்டிற்குச் செய்யும் ஆராதனையாக பாவிக்க வேண்டுவதேயாம் என்று அது கூறுகிறது. அனசக்தியும் தியாகமுமே கீதையில் கூறப்பட்டுள்ள மேலான உபதேசங்கள்.

பாகவதத்தில் நமக்கு வேண்டிய உடன்பாட்டு அம்சம் விளங்குகின்றது. தோற்றத்துடன் கூடிய இந்த உலகைத் துற. அழியக்கூடிய இவ்வுலக வஸ்துக்கள் அனைத்திடமிருந்தும் மனத்தை விடு வித்து அதை இறைவன் பால் உன்னதமான பிரேமை வடிவில் திருப்பிவிட வேண்டும். பாகவதக் கருத்து முழுவதையும் ஒரே வார்த்தையில் தொகுத்துக் கூறினல் அது பிரேமை என்பதாகும். இது இறைவனிடத்தில் கொண்டுள்ள பிரேமையைக் குறிக்கும். இது தூய பிரேமையின் பிரகாசம் பொருந்திய சாரமாகும். இது பகவானுக்கு ரதியாக இருக்கிறது. கீதை பூர்ணத் துறவை உபதேசிக்கிறது. பாகவதம் "உன்னை மனப் பூர்வமாக, ஏகாக்ர சித்தத்துடன் பகவானுடைய பாதகமலங்களோடு இணைத்துக் கொள்" என்று கூறுகிறது.

மஹாபாரதம் தர்மத்தைக் கடைப்பிடிக்க வேண்டும் எனும் ஒரு நோக்கத்தைத் தொகுத்துக் கூறுகிறது. மஹாபாரதத்தின் உபதேசம் யாதெனில் "வாழ்க்கையையே தியாகம் செய்ய வேண்டி வந்தாலும் தர்ம வழியிலிருந்து பிறழாதே. அப்பொழுதும் தர்மத்தைக் கடைப்பிடி. தர்மத்தின் மூலமாக ஒருவன் தனது உள்ளத்தையும் வாழ்வையும் வளப்படுத்திக் கொள்ளலாம்" என்பதாகும். ராமாயணத்தில் மனிதனுடைய வாழ்க்கையின் சகல அம்சங்களிலும் தர்மம் வெளிப்பட்டு நிற்கும் அனுஷ்டான வழிகள் கூறப்பட்டுள்ளன. ஏனெனில் ராமாயணத்தில் தர்மத்தை லட்சியமாகக் கொண்ட ஒரு லக்ஷிய புருஷன்

வாழவேண்டிய முறைகள் ஸ்பஷ்டமாகவும், நடை முறைக்கு ஒத்ததாகவும் விளக்கப்பட்டுள்ளன. எடுத்துக்காட்டான கணவன், எடுத்துக்காட்டான மகன், எடுத்துக்காட்டான சகோதரன், எடுத்துக் காட்டான மனைவி, எடுத்துக்காட்டான தொண்டன், எடுத்துக்காட்டான சாதகன், எடுத்துக்காட்டான அரசன் ஆகியவர்களைப் படம் பிடித்து நமக்கு முன் ஞல் வைத்திருக்கும் சாஸ்திரம் ராமாயணம். மனித வாழ்க்கையில் இந்த அம்சங்கள் எல்லாம் விளக்க மாக, ராமாயணத்தில் வரும் பல்வேறு தெய்வீக கதா பாத்திரங்களின் வாயிலாக பிரத்தியக்ஷமான மாதிரி வடிவத்தில் நமக்கு எடுத்துக் கூறப்பட்டுள்ளன. ஒரு மனிதன் பகவானிடத்தில் அன்பு செலுத்திக் கொண்டு தர்ம வாழ்க்கை நடத்தவேண்டுமென்று சொன்ஞல் அவன் தனது வாழ்வின் பல்வேறு அம் சங்களில் எவ்வாறு நடந்து கொள்ள வேண்டும்? இதற்கு விடை அவன் எப்படித் தனது வாழ்க் கையை அமைத்துக் கொண்டு மேலான தர்ம வாழ்க்கை நடத்தித் தன்னைப் பக்குவப்படுத்திக் கொள்ளலாம் என்று ராமாயணத்தில் கொடுக்கப்பட் டுள்ளது.

பிரம்ம சூத்திரத்தில் இந்தப் பொருள்கள் அனைத்தினுடையவும் முடிவான காரணம் என்ன என்பதைப் பற்றிக் கூறப்பட்டுள்ளது. மனிதன் வந்த மேலாம் நோக்கத்தை இது எடுத்துக் காட்டு கிறது. அது பகர்வதாவது: வாழ்வின் ஒரே லட்சி யம் அழியா வஸ்துவை அடைவது. அது சாசுவத

மான ஆனந்த வடிவாக இருக்கிறது. அதை அடை வதற்கு இந்த வஸ்துக்கள் எல்லாம் சாதனங்கள். இந்த சாதனங்களின் மூலம் நீங்கள் அந்தப் பரம வீட்டை அடைகின்றீர்கள். அங்கு சேர்ந்துவிட்ட பிறகு துன்பமும் மரணமும் நிறைந்த இந்த உல கிற்குத் திரும்பி வரவேண்டியதில்லை. பிரம்ம சூத் திரத்தின் கடைசி முடிவு தர்மம், தியாகம், பக்தி ஆகியவற்றின் மூலம் பரப்பிரம்மத்தை அடைந்த பிறகு இந்த ஜீவன் "ந புனராவர்த்ததே" திரும்பி வருவது கிடையாது. அவன் மனோவாக்கை கடந் ததும், எல்லையிலா உணர்வாகியதும், அமர நிலையாக இருப்பதும் அழியாப் பேரின்பமாக இருப்பதும், சாசுவத சாந்தியாக இருப்பதும் ஆகிய பெரு நிலை யில் ஸ்திரமாகத் தங்கிவிடுகின்றான்.

இதுதான் லட்சியம். "யத்கத்வா ந நிவர்த் தந்தேதத் தாம பரமம் மம" என்று பகவான் கீதை யிலே பகருகின்றார். வீடு பேருகிய பரந்தாமத்தை அடைந்த மனிதன் இந்த உலகிற்குத் திரும்பி வரு வது கிடையாது.

அது பூர்ண நிலையாக இருப்பது. "யோ வை பூமா தத் சுகம்" இந்த உலகில் மனிதனுடைய லட் சியம் அந்த பூமாதான்.

அதை அறிந்த பிறகு அறிய வேண்டியது எதுவும் மிகுதியில்லை. "யஸ்மின் நாதே ஸர்வமிதம் விஞ்ஞாதம் பவதி."

அதை அடைந்த பிறகு அதைவிட அடைய வேண்டிய பெரிய பொருள் ஒன்றுமில்லை. "யம் லப்த்வா சாபரம் லாபம் மந்யதே நாதிகம் தத:"

நாம் அனைவரும் பாடுபட்டு அடைந்து நிலையாக அனுபவிக்க விரும்புகின்ற மனோவாக்கைக் கடந்த அந்தப் பெருநிலையின் பெருமையும் மகிமையும் இத்தகையது. இவ்வாறாக அவைகள் நமக்கு லட்சியத்தையும் முடிவையும் காட்டியிருக்கின்றன. லட்சியம் ஆத்மாநுபூதி. அதற்குரிய சாதனம் கீதை கூறியிருக்கும் தியாகமும், பாகவதம் பகரும் பக்தியும், பாரதம் பகரும் தர்மமும், ராமாயணம் காட்டும் லட்சிய வாழ்க்கையுமாம்.

மானிட வாழ்வின் நோக்கம், லட்சியம், அதை அடையும் வழிகள், இந்த வழிகளைக் கொண்டு லட்சியத்தை அடைய வேண்டுமாகில் சாதகனுடைய நடைமுறை வாழ்க்கை முறை ஆகிய கருத்துக்களை நாம் தெளிவாகவும், தீவிரமாகவும் புரிந்து கொள்ளும் வகையில் நாம் இந்த மேலான சாஸ்திரங்களைப் பற்றி ஆராய்ந்து பார்த்தோம்.

## பிரார்த்தனை

அன்னை பராசக்தியின் ஒன்பது நாள் வழிபாட்டின் கடைசி நாளாகிய விஜயதசமியாகிய இன்றைய நன்னாளில் அன்னையானவள் நமது உள்ளங்களை புத்தியாகவும், ஸ்மிருதியாகவும் இருந்து விளக்கம் செய்வாளாக என்று நாம் எல்லோரும் பிரார்த்திப்போமாக. அவள் ஸ்மிருதி ரூபமாக இருந்து இந்தப்

பேருண்மைகள் நமது உள்ளத்தில் சதா தழைத்து நிலைத்து நிற்கும்படியாகச் செய்வாளாக என்று நாம் எல்லோரும் பிரார்த்திப்போமாக. அதனால் நமது வாழ்க்கை முழுவதையும் இந்தப் பேருண்மைகளின் தெளிந்த உணர்வை அடிப்படையாகக் கொண்டும், உருவாக்கியும் நடத்தியும் வருவோமாக. ப்ராந்தி, மாயை என்னும் வடிவில் அவளுடைய சக்தி விநோத மானதாக இருக்கின்ற காரணத்தால் நாம் இந்த உண்மைகளைத் தெரிந்திருந்த போதிலும், நாம் அவற்றை மீண்டும் மீண்டும் கேட்டுக் கொண்டிருந்த போதிலும், எப்படியோ இமைப் பொழுதில் நாம் அவற்றை மறந்து விடும்படி அவள் செய்து விடுகின்றாள். புலன் வழி உலகிலுள்ள புறப் பொருள்கள் மட்டும் நமக்கு விளங்கும்படியாக அவள் செய்து விடுகிறாள். நமது உணர்வின் மீது அவளுடைய திரை விழுந்தவுடன் இந்த மாபெரும் உண்மைகளை நாம் மறந்தவர்களாகி விடுகின்றோம். அந்நிலையில் நாம் நமக்குக் கண நேர இன்பத்தைக் கொடுக்கக் கூடியனவும், இந்திரிய போகங்களைக் கொடுக்கக் கூடியனவுமாகிய வஸ்துக்களை மட்டும் உணர்ந்தவர்களாகி நம்மை நாம ரூபங்களாலான இந்த புற உலகத்தோடு பந்தப்படுத்திக் கொள்கின்றோம். ஆகவே நாம் அன்னையிடம் மீண்டும் மீண்டும் “தாயே, வித்யா மாயையாக எங்களிடத்தில் தோற்ற மளிப்பாயாக. உன்னுடைய வித்யா தத்துவத்தினால் என்னுடைய உணர்வு பிரகாசமடையட்டும்” என்று பிரார்த்தித்துக் கொண்டிருக்க வேண்டும். தேவீ ஸூக்தம் படிக்கும் பொழுது சற்று முன்பு அன்னை

யானவள் நித்திரை, க்ஷுதம், சாயை, த்ருஷ்ணை, ப்ராந்தி முதலிய சகலமாகவும் இருப்பதாகவும், அதே சமயத்தில் அவள் புத்தியாகவும், தயையாக வும், மாதாவாகவும் இருக்கிருள் என்பதையும் கவனித்தோம். ஆகவே நாம் கரம் குவித்து அன்னை யின் பாதார விந்தங்களை நமஸ்கரித்து "ஹே, மாதா! என்னிடத்தில் உனது ஞான ஒளி அம்சத்தைத் தோன்றச் செய்து என்னை உனது அவித்யா மாயை அம்சத்திலிருந்து காப்பாயாக" என்று பிரார்த்திக்க வேண்டும். அவளுடைய உள்ளம் குளிரும். அவள் ஆனந்த மடைவாள். அவளுடைய ஒளி பொருந்திய கடைக் கண்பார்வை நம் மீது விழும். நம்மைக் கண்டு அவளுடைய ஆதாரங்களிலிருந்து புன்னகை பூக்கும். அப்பொழுது நமது மயக்கம், நமது துக்கம், அறியாமையாகிய அந்தகாரம் ஆகியவை நீங்கும். அப்பொழுது நாம் அவளை சச்சிதானந்த பரப்பிரம்ம மாகக் காணலாம்.

இந்தப் பத்து நாட்களும் நாம் அன்னையினு டைய வஸ்திரத்தின் விளிம்பிலுள்ள குஞ்சத்தின் ஒரு அணு அளவைத் தொட்டுப் பார்க்க முயற்சித் தோம். அன்னையினுடைய தன்மையின் ஒரு அணு வின் சிறு பாகத்தையாவது நம்மால் புரிந்து கொள்ள முடிகிறதா என்று முயன்று பார்த்தோம். மணிக் கணக்காக யுகந்தோறும் நாம் பேசிக் கொண்டே போகலாம். ஆனாலும் அன்னையினுடைய ஆழம் காண முடியாத தன்மையின் ஒரு அணுவைக் கூட நம்மால் புரிந்து கொள்ள இயலாது. சகல சாஸ்தி

ரங்களும் மஹரிஷிகள் அனைவரும், அநாதி காலம் தொட்டு அன்னையை பரிபூரணமாக வர்ணிக்க இயலாத நிலைதான் இருந்து வந்திருக்கிறது. ஆகவே ஒரு சில வார்த்தைகளின் மூலம் அன்னை தன் மீது போர்த்திக் கொண்டு தன்னை மறைத்து வைத்துக் கொண்டிருக்கும் வஸ்திரத்தின் ஒரு விளிம்பின் ஒரு சிறு பாகத்தையாவது புரிந்து கொண்டு விட்டோம் என்று எண்ணுவது நமது அகங்காரத்தைக் காட்டுவதாக இருக்கும். நமக்குத் தெரிந்திருப்பதெல்லாம் கடுகின் ஒரு பாகத்தை விடச் சிறியது. அன்னையைப் பற்றி அறிந்து கொள்ள வேண்டியிருப்பது சமுத்திரம் பரந்த கரையைப் போன்று கிடக்கிறது. கற்றது கைமண்ணளவு—கல்லாதது உலகளவு. ஆனால் குழந்தை தனது தாயினிடத்தில் கொண்டுள்ள அன்பானது அதை அவளிடம் அணுகச் செய்து அவளுடைய கரத்தைப் பற்றி அவளை அறிந்து கொள்ள முயற்சிக்கச் செய்கிறது. ஆகவே இந்தப் பத்து நாட்களும் அன்னையைப் பற்றி நாம் பேச முயற்சித்த முயற்சி அவளை அறிந்து கொள்ள வேண்டுமென்கிற முயற்சியின் வடிவத்தில் இல்லை. அவளாகப் பார்த்துத் தன்னைக் காட்டிக் கொண்டாலொழிய நாமாக அவளை அறிந்து கொள்ளலாம் என்று நம்புவது நடவாத காரியம். ஆகவே நமது முயற்சி அன்னையினுடைய பாதாரவிந்தங்களை வணங்கி சிறிது மலரிட்டு அர்ச்சிப்பதைப் போன்றதொரு முயற்சியேயாகும். இந்த ஒன்பது நாட்களும் பல்வேறு வகையாக வழிபாடு செய்யப்பட்டது. சங்கீதம், கீர்த்தனம், ஆடல்,

அலங்காரம், பூஜை முதலிய பல நிகழ்ச்சிகள் இருந் தன. இந்த வழிபாட்டின் ஒரு அம்சமாக நாம் நமது வந்தனங்களை அவளுடைய சொந்த அம்சமானதும், அவளாகப் பார்த்து நமக்கு அளித்துள்ளதுமான வாக்கின் மூலம் செலுத்திஞேம். இப் புனித தின மாகிய விஜயதசமியன்று நாம் இந்த வழிபாட்டை "தாயே! இதையும் மனமுவந்து ஏற்றுக்கொள். நீ கருணையே வடிவம். நீ தயையின் திருவுருவம். நீ ஜோதி சொருபம். நீ மோக்ஷ ரூபிணி. இதையெல் லாம் ஏன் சொல்லிக்கொண்டிருக்க வேண்டும்? தாயே, நீ தாயாகவே இருக்கிருய். ஆகவே, தாய் என் கின்ற முறையில், உனது பாதார விந்தங்களில் சமர்ப்பிக்கப்படும் இந்த அன்புக்காணிக்கையை ஏற்றுக் கொண்டு எங்கள் எல்லோரையும் ஆசீர் வதிப்பாயாக. தாயே, எங்கள் மீது உனது புன் னகை அரும்பு மலரட்டும். உன்னுடைய அவித்யா மாயையாகிய இருளை நீக்கியருள். தெய்வத் திருவுரு வமாகத் திகழும். எங்கள் குரு தேவரின் பொற் பாத கமலங்களைச் சரணடைந்திருக்கும் சாதகர் களாகிய எங்களுக்கு ஆத்ம ஞானப் பேரொளியை யும், சச்சிதானந்தப் பேரானந்த நிலையையும் தந் தருள் வாயாக" என்கின்ற சொல்மலர்களை அன்னை யின் பாத பத்மங்களில் சமர்ப்பித்து ஒரு முடிவுக்குக் கொண்டு வருவோமாக.

***ஓம் சாந்தி! சாந்தி! சாந்தி!!***

